14. ராமணரில் நாயன் மலைப் பெருமாள –

15. ஈன உறைநாயக நம்பிக்கு பண்ணூ

16. ரி[ல்] என் காணியான புன்செ நிலத்து ளுத தா –

17. ந இறையிலியாக னீர் வாத்துக் குடு –

18. த்த குழி 400 இக்குழி நானூற்றுக்கும் கு –

19. னாயன் எடுத்த கையழகியர் நன்திபன் –

20. மனேன்.

17:5

இடம்: *மேற்படிக் கோயில் கருவறை வடக்குச் சுவர்*

காலம்: *வியவருஷம், 28. கி.பி.17-18ஆம் நூற்றாண்டு*

செய்தி: *சங்கரப்பய்ய ரெட்டியார் என்பவர் அந்திவேதியீசுரம் உடையாருக்கு நூறுகுழி நஞ்சை நிலம் தானமாகக் கொடுத்தமை.*

1. விய வருஷம் வைய்கா –
2. சி *மீ* 28 உ ஊற்ப் பள்ள –
3. த்திலே குழி 100 நஞ்சையும்
4. தீத்தா யிரட்டியார் கொல் –
5. லை முக 1½[நெல்] விரைக் கு –
6. ழி அந்திரவேதியீசுர மு –
7. டையார்க்கு சங்கரப்பய –
8. ரட்டியார் புண்ணியமாக
9. சந்திராதித்தவரையும்

17:6

இடம்: *மேற்படிக் கோயில் கூரை மேல் பாவப்பட்டுள்ள கல்*

காலம்: *கி.பி. 11-12ஆம் நூற்றாண்டு*

செய்தி: *ஊற்றத்தூர், திரணி ஆகிய ஊர்கள் மற்றும் சுருதிமான்கள் குறிப்பிடப்படுகின்றனர். கல்வெட்டு உடைந்துள்ளது.*

**முன் பக்கம்**

1. ஊ[ற்ற] –
2. த்தூர் நா –
3. [ட்]டுத் திரணி
4. . . . டைய சுருதி
5. . . . ந் போறந
6. . . . கைக்கு
7. . . . மேற்படியூர்
8. . . . ந் பாதி உ

9. . . . டைய சுருதி
10. . . . மூவாயிர
11. . . . வந்
12. . . . நாந
13. . . . வூற்பெ
14. . . . நேந் எ
15. . . . ன் குடுத்
16. . . . ாவது வட
17. . . . தெருவுக்கு
18. . . . [மே]மற்கு இள
19. . . . டாசானை
20. . . . பேரையந்
21. . . . தோட்டத்
22. . . . ற்க்கும் ம

**பின் பக்கம்**

23. . . . மாட
24. . . . மனைக்
25. . . . தர்க்கு வ
26. . . . மனை
27. . . . தாய
28. . . . ற்மழ ெ
29. . . . ண்டக
30. . . . க்தாசயய
31. . . . க்கு கொண்
32. . . . மனை பி
33. . . . ண்மபா
34. . . . ணிக்கு த
35. . . . இப்படிக்கு
36. . . . வை தொ
37. . . . டையாந்
38. . . . னரயந் எழு
39. . . . த்து இவை
40. . . . ண்ணை வி
41. . . . குமாமணி
42. . . . நாடாழ்வா
43. . . . ந் எழுத்து இவை காரீ
44. . . . நரசிங்க நா
45. . . . டாழ்வாெ
46. . . . எழுத்து.

**17:7**

இடம்: *மேற்படி ஊர் வரதராஜப் பெருமாள் கோயில் வெளிமதிற் சுவர் அருகில் உடைந்த கல் தூண்*

காலம்: *கி.பி.12-13ஆம் நூற்றாண்டு*

செய்தி: *ஆண்மகனரசூர், பொன்னம்பலநம்பி, நரசிங்க பன்மன் ஆகிய பெயர்கள் குறிப்பிடப்படுகிறது. ஆண் மகன் அரசூர் என்ற ஊர்ப் பெயர் இன்று ஆமரசூர் என்ற பெயரில் கீழரசூருக்கு அருகில் உள்ளது.*

1. . . . நாசி
2. . . . பன் எழுத்து
3. . . . ஆண்மகன
4. . . . சூர் பொன்னம்

5. . . . நம்பி எழுத்து.

17:8

இடம்: *மேற்படிக் கோயில் அர்த்தமண்டப மேற்குச் சுவர் முப்பட்டைக் குமுதம்*

காலம்: *போசள மன்னர் வீர இராமநாதன் யா.18. கி.பி.1272*

செய்தி: *இக்கோயிலின் பெயர் அசரபுயங்கரப் பெருமாள் எனக் கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது. பூஜை வழிபாட்டுக்கு பாற்காரியான் குளத்தின் கீழிருந்த கழனியில் நிலம் திரணியில் காணி உடைய அரையர்களில் செகப்பெருமாளான தலைமட்டான் என்பவர் கொடையாகக் கொடுத்துள்ளார். இக்கோயில் கி.பி. 1272இல் போசள மன்னர் வீரராமநாதன் ஆட்சிக் காலத்தில் கட்டப்பட்டது எனக் கருதலாம்.*

1. ஸ்ரீ போசௌ வீர இராமனா[த] தேவற்கு யாண்டு 18–திரணி கா –
2. ணி உடைய அரையர்களில் பாச்சில் செகப்பெருமாளான தலை –
3. மட்டான் பாற்காரியன் குளத்தில் கழன கல்லன் செய –
4. நப் பெருமாள் அரைச புயங்கரப் பெருமாளுக்கு [கு]டுத்தேன்.

17:9

இடம்: *மேற்படிக் கோயில் அர்த்தமண்டப நுழைவாயில் வலப்பக்கச் சுவர்*

காலம்: *போசள மன்னர் வீர இராமநாதன் (1254-1279), யா.21, கி.பி.1272*

செய்தி: *கோயிலின் பெயர் அரசபுயந்தர விண்ணகர எம்பெருமான் எனக் குறிப்பிடப்படுகிறது. கோயிலுக்கு பூஜை வழிபாட்டுக்கென 300 குழி நிலம் திரணியில் இருந்த சுருதிமான் செங்குளவன் மறவனான விசைய நாராயண தேவன் என்பவர் திருவிடையாட்டமாகக் கொடுத்துள்ளார். பெருங்கோல் என்ற கோலால் அளக்கப்பட்டு அந்நிலம் அரசன் பாழிச் செய் என்ற பெயரால் அழைக்கப்பட்டது.*

1. ஸ்வஸ்திஸ்ரீ ஸர்வ்வ பூம
2. சக்கரவத்திகள் ஸ்ரீ போ –
3. ஜள வீர இராமனாத
4. தேவர்க்கு யாண்டு 21
5. ஆவது அரசபுயந்தர வி –
6. ண்ணகர் எம்பெருமானு –

7. க்கு திரணியுடைய சுருதி
8. மான் செங்குளவன் மறவன்
9. னான விசைய நாராயண தேவ –
10. னேன் இன்னாயனார்க்கு
11. அரசன் பாழிச் செயில்
12. பெருங்கோலா[ல்] குழி
13. முன்னூறு 300 கொ
14. ண்டு திருவிடை ஆ
15. ட்டமாக இட்டேன்

## 17:10

இடம்: *மேற்படிக் கோயில் நுழைவாயில் இடப்பக்கச் சுவர்*

காலம்: *முதலாம் மாறவர்மன் குலசேகரப் பாண்டியன் யா.33 கி.பி.1301*

செய்தி: *திரணியில் உள்ள நாயனார் அரசரபுந்தர விண்ணகர் எம்பெருமான் கோயிலுக்குத் திருநாமத்துக் காணியாக 500 குழி ஊராண்டிபாழிச் செய் என்ற நிலத்தைத் திரணியில் காணி உடைய சுருதிமான்களில் ஒருவரான பாண்டியராயர் என்பவரின் மகன் கூத்தன் வாணராயன் என்பவர் கொடையாக அளிக்கின்றார். அந்நிலம் பெருங்கோல் என்ற பெயருடைய கோலால் அளந்து கொடுக்கப்பட்டது.*

1. ஸ்வஸ்திஸ்ரீ கோமா –
2. றபன்மா் திரிபுவ –
3. னச் சக்கரவத்திகள்
4. ஸ்ரீ குலசேகர தேவ –
5. ற்கு யாண்டு 33–வ –
6. து திரணி நாயினார்
7. அரசபுரந்தர விண் –
8. ணகர் எம்பெருமானு –
9. க்கு இவ்வூரில் காணி உடை –
10. ய சுருதிமான்களில்
11. பாண்டியராயர் ம –
12. கன் கூத்தன் வாண –
13. ராயனேன் இன்னாய –
14. னாற்கு
15. திருநாமத்துக் காணி
16. இறையிலியாகக் குடுத் –
17. த தென்பாதியில் என்
18. கைய்யில் மூல சாத –
19. னப்படி ஊராண்டி
20. பாழ்ச் செய்யில் பட்
21. ட விருத்திக் குழி 200 நீக்கி –
22. ப் பெருங்கோலாற்
23. குழி 500ம் திருக்கை
24. மலரில் உதகம் பண்
25. ணிக் குடுத்தேன் வா
26. ணராயனேன்

# 18. திருவாமாத்தூரில் சில புதிய கல்வெட்டுகள்

த. ரமேஷ், முண்டியம்பாக்கம்

**18:1**

**இடம்:** *விழுப்புரம் மாவட்டம், திருவாமாத்தூர், அபிராமேஸ்வரர் கோயில் இரண்டாம் திருச்சுற்று மாளிகை தென்புறச் சுவர். அடைக்கப்பட்டுள்ள வாயிலின் கீழ்புறம்.*

**காலம்:** *கி.பி.11ஆம் நூற்றாண்டு*

**செய்தி:** *மாணிக்கவாசகன் பெயரில் நந்தவனம்.*

1. **ஸ்வஸ்திஸ்ரீ இத் திருநந்தவ**
2. **னம் மாணிக்கவாசகன் வ**



**18: 2**

**இடம்:** *மேற்படி ஊர் முத்தாம்பிகை அம்மன் கோயில் அர்த்த மண்டப வாயிலின் வடபுறச் சுவரில் உள்ள கல்வெட்டு*

**காலம்:** *கி.பி.13ஆம் நூற்றாண்டு*

**செய்தி:** *மண்டபம் செய்தமை.*

1. **ஸ்வஸ்திஸ்ரீ இத்திருமண் –**
2. **டபம் சொக்கச்சியன் வ**
3. **இது செய்வித்தார் உ –**



4. மையாண்டாள் மகன் சே –

5. னை நரசிங்கபன்மன் வ

## 18:3

இடம்: *மேற்படிக் கோயில் மகாமண்டப வாயில் வடபுற நிலைக்கால்*

காலம்: *இராச நாராயண சம்புவராயன் யா.13. கி.பி.1355*

செய்தி: *மாமல்லபுரத்தைச் சேர்ந்த மாப்பூதி செந்தாமரைக் கண்ணன் ஆன இராசநாராயண வானாதராயன் மண்டபத்தை அமைத்தமை.*

1. ஸ்வஸ்திஸ்ரீ இ –
2. ராச நாராயண –
3. ன் சம்புவராய –
4. ற்கு யாண்டு 18
5. இந்த மண்டப –
6. ம் செய்வித்தான்
7. மாமலபுரத்து
8. மாப்பூதி செந் –
9. தாமரைக் கண் –
10. ணன் இராச ந –
11. ராயண வா –
12. ணாதராயன்
13. தன்மம் உ



# 19. இரண்டாம் இராசாதிராசனின் புஞ்சைக் கல்வெட்டு

க. பன்னீர்செல்வம், மைசூர்

இடம்: *தஞ்சாவூர் மாவட்டம், மாயவரம் வட்டம், புஞ்சை நல்துணை ஈஸ்வரர் திருக்கோவில் முகமண்டபத்தின் வடக்குச் சுவர். இ.க.ஆ.அ. 188/1925*

காலம்: *இரண்டாம் இராசிராதிராசன், யா.14. கி.பி.1177*

செய்தி: *ஜயங்கொண்ட சோழ வளநாட்டிலுள்ள ஆக்கூர் நாட்டில் அமைந்திருந்த தலைச்சங்காட்டில் வாழ்ந்து வந்த சாதகாணி ஆரிதன் தேவன், சாதகாணி துவேதி சாத்தன் சேர்த்தன், சாதகாணி துவேதி சுவரன் காடன், கௌசிகன் குன்றன் நீலன் ஆகிய பிராமணர், கோயில் நிலத்தை ஆக்கிரமித்து துய்த்து வந்தனர். இந்நிலம் திருநன்னிபள்ளி உடையார் கோவிலுக்கு சொந்தமான தேவதான நிலம் என்பதனால் அக்கோவில் தானத்தார்களும் ஸ்ரீமாகேசுவரர்களும் சிவன் தொண்டாற்றும் நிருவாகிகளும் திரிசூலம் பொறித்த எல்லைக் கல்லை (திரிசூலக்கல்) அகற்றியுள்ளனர். இதனை அறிந்த மேற்குறித்த நால்வரும் அந்நிலம் தங்களுக்குச் சொந்தமானது எனக் கூறி நடப்பட்ட திரிசூலக் கல்லை நட்டுள்ளனர். இதனை அறிந்த திரிசூலம் பொறித்த வேளைக்காரர்களும் சிவனடியார்களும் (ஆண்டார்கள்), ஊரின் நடுவில் திருக்கூட்டமாகக் கூடி தீ மூட்டி அதில் குதித்து உயிர் நீத்துள்ளனர். இதனை அறிந்த திருக்கோவில் நிருவாகக் குழுவினர் அந்நால்வரையும் அழைத்து, சிவனடியார்கள் உயிர் நீத்தக் காரணத்தைக் கூறி உயிர் நீத்த சிவனடியார்களுக்கு (உலோகத்தாலே) செம்பினால் திருவுருவச் சிலை செய்யவும் அவற்றிற்கு பூசை செய்யவும் நால்வரிடமிருந்தும் 200 காசுகள் பெறுகின்றனர். அவர்கள் அனுபவித்து வந்த ஒளிகுறைகொல்லை என்ற நிலத்தை கோவிலுக்கும் கொடுத்து, அதற்கு ஈடாக (பரிவத்தனை) பனைவிளாகம் என்ற பெயரில் அழைக்கப்பட்டுள்ள இடத்தில் ¼ வேலி நிலம் பெறுகின்றனர்.*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கடல் சூழ்ந்த பார்மாதரும் கலைமாதரும் அடல் சூழ்ந்த போர்மாதரும் அமர்ந்து வாழ நாற்கடல் சூழ் புவி ஏழும் பாற்கடல்போல் புகழ்பரப்ப ஆதியுகமாமென்ன சோதிமுடி முனைந்தருளி அறுசமையமும் ஐம்பூதமும் நெறியில் நின்று பாரிப்ப தென்னவரும்

சேரலரும் சிங்களரும் முதலாய மன்னவர் திறைசுமந்து வந்திண்டிச் செவிப்ப வாழி ஊழி ஒரு செங்கோல் ஏழுபாருமினிதளிப்ப சமையம் பொற்கொட்டி மையப்பா[வை]யும் சிவனும்போல் செம்பொன் வீர –

2. ஸிங்ஹாஸனத்து உலகுடை முக்கோக்கிழானடிகளோடும் வீற்றிருந்தருளிய கோராஜகேஸரி பந்மரரான திரிபு$_{3}$வநசக்கரவத்திகள் மதுரையும் ஈழமும் கொண்டருளின ஸ்ரீராஜாதிராஜதேவற்கு யாண்டு 14 ஆவது த$_{3}$னுநாயற்று பூர்வபக்ஷத்து சஷ்டியும் சனிக்கிழமையும் பெற்ற திருவாதிரை நாள் ஐயங்கொண்ட சோழ வளநாட்டு ஆக்கூர் நாட்டு தலைச்சங்காட்டுச் சாதகாணி ஆரிதந் தேவனும் சாதகாணி துவேதி சாத்தத் சேர்த்தனும் சாதகாணி துவேதி சுவரன் காடனும் கௌசிகன் குன்றினி நில –

3. னும் இன்னால்வோம் உடையார் திருநந்திபள்ளி உடையார் கோயிலில் ஸ்ரீ மாஹெஸ்வரக்கண்காணி செய்வாற்கும் ஸ்ரீகாரியம் செய்வாற்கும் தேவர்கன்மி கோயிற்கணக்கற்கும் நாங்கள் இசைவு தீட்டுக் குடுத்த பரிசாவது இவ்வூற்பிடாகை கிடாரங்கொண்ட சோழநல்லூரில் பத்தாங்கண்டத்து நாங்கள் அனுபவித்து வந்த ஒளிகுறை கொல்லையை உடையார் திருநன்னிபள்ளி உடையார் தேவதானம் என்று இக்கோயிலித்தானத்தாரும் ஸ்ரீமாஹேஸ்வரும் திருச்சூலக்கல் நட்டு . . .

4. இத்திருச்சூலக்கல்லை நாங்கள் பிழந்து நட்டோமென்று ஆண்டார்கள் ஊரிலே எழுந்தருளித் திருக்கூட்டமாக இருந்து இது சுட்டி ஆண்டார் திருச்சூலவேளைக்காறர் தீப்பாஞ்சு சிவலோக ப்ராப்தி பண்ணினமையில் மூலபருஷையார் கேட்டு இவ்வொளி குறைக்கொல்லை இன்னாயனாற்கே ஸ்வம்மாய் மூலபருஷையார் இறையிலியாக எழுதின நியோகப்படியே நாங்களும் விட்டமையில் இன்னிலம் சுட்டி இத்தீயில் எழுந்தருளின திருவேளைக்காறரைத் திருவங்கம் பெறுக்கி கொடு[ப்பதாகக்]

5. குழியும் தூர்த்து இக்கோயிலிலே உலோகத்தாலே எழுந்தருளிவிக்க நாங்கள் இருநூறு காசு குடு[த்து] ....யாக எழுந்தருளிவிக்க திருச்சூல வேளைக்காறற்கு அர்ச்சனா போ$_{3}$க$_{3}$ அமுதுபடிக்கு சந்திராதி$_{3}$த்யவற் செல்லக்கடவதாக நாங்கள் விட்டுக் குடுத்த [விர] . . . இவ்வூற் பிடாகை ராஜேந்தி$_{3}$ர சோழவாய்க் காலுக்கு வடக்கு மூன்றாங்கண்ணாற்று முதற் சதிரத்து சாதகாணி ஆரிதன் தேவன் காணியான பனைவிளாகமென்று பேர் கூவப்பட்ட நிலத்து சாதகாணி துவேதி

6. சாத்தன் சேர்த்தனும் சாதகாணி துவேதி சுவரன் காடனும் கௌசிகன் குன்றன்நீலனும் ஒளிகுறை அனுபவித்து. . . தியால் நாங்கள் விடுகிற நிலம் சேரவிட வேண்டுகையால் இன்னிலமுடைய சாதகாணி ஆரிதன்

தேவனுக்கு எங்கள் காணியான நிலங்களிலே பரிவத்தனை பண்ணிக் குடுத்து ஆக இன்னால்வோமுக்கும் ஸ்வம்மாய் நாங்கள் விட்டுக் குடுத்த விரிவு விளை நிலத்துக்கு எல்லை யாவது மேல்பாற்கெல்லை பனைவிளாகத்து மேற்கடைய சாதகாணி ஆரிதன் தேவன் விளைநிலம் காலுக்கு கிழக்கும் வடபாற்கெல்லை ஆதித்ததேவன் வாய்க்காலுக்கு தெற்கும்

7. கீழ்பாற்கெல்லை சாதகாணி ஆரிதன் தேவன் காணியான விளைநிலத்துக்கு மேற்கும் தென்பாற் கெல்லை தோம... கலையன் சேந்தன் விளைநிலத்து குலைக்கும் கொல்லைக்கும் வடக்கு ஆந இவ்விசைந்த இன்னான்கெல்லையிலும் உள்பட்ட விளைநிலம் கால் இன்னிலம் விரிவில். . . நிலம் காலும் இத்தடியில் குளத்தில் நிலவொபாதியும் இத்திருச்சூலவேளைக்காறற்கு அர்ச்சநாபோ$_3$க$_3$ அமுதுபடிக்கு சந்திராதி$_3$த்தவற் செல்லக் கடவுதாக குடுத்தோம் இன்னிலத்துக்கு ஊர்ரொபாதியால் வந்த அருபி சாதகாணி ஆரிதன்

8. தேவனேன் கூட்டிதானே இறுக்கக் கடவனாகவும் இப்படிக்கு இன்னிலம் காலும் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்வோம் இப்படி அனுபவிக்க கடவாராகவும் இப்படி . . .

# 20. புஞ்சைக் கல்வெட்டுகள்

**கோ. விசயவேணுகோபால்,**
**பாபு [எ] இராமசாமி, கோ. இரவீந்திரன்**
**புதுச்சேரி.**

**இடம்:** *நாகப்பட்டினம் மாவட்டம், மயிலாடுதுறை வட்டம், புஞ்சை நல்துணை ஈஸ்வரர் ஆலயச் சுவர்களில் உள்ள இக்கல்வெட்டுகள்.*

**காலம்:** *அவ்வெவ் கல்வெட்டுப் பாடங்களின்மேல் குறிக்கப்பட்டுள்ளன.*

**செய்தி:** *இந்தியத் தொல்லியல் ஆய்வுத் துறையினர் 1925இல் புஞ்சை நல்துணை ஈஸ்வரர் கோயிலில் மொத்தம் 18 கல்வெட்டுகளைப் படியெடுத்துள்ளனர். எனினும் இவை இன்னும் வெளியிடப்பட வில்லை. இவற்றுள் கல்வெட்டு ஆண்டறிக்கையில் குறிப்பிடப் பெறும் இரண்டாம் ஆதித்தினின் 4ஆம் ஆண்டுக் (கி.பி. 960) கல்வெட்டு கோயிலில் காணப்படவில்லை. இக்கோயிலில் உள்ள கல்வெட்டுகள் தலைச்சங்காட்டு மகாதேவர் கோயிலுக்கு திருவிழாச் செலவிற்கு நிலக்கொடை, மூலபருடையார் கூடி நிலப் பரிவர்த்தனை செய்தல். திருநனிப்பள்ளி உடையார் கோயிலுக்கு நிலக்கொடை ஆகியவற்றைக் குறிக்கின்றன.*

## 20:1

**இடம்:** *1. கருவறை வடக்குச் சுவர். இ.க.ஆ.அ. எண் 186/1925*

**காலம்:** *முதலாம் இராசராசன் யா. 22, கி.பி.1007*

1. . . . கை நாடும் கங்கபாடியும் னுளம்பாடியும் தடியபடியும் குடமலைனாடும் கொல்லமும் கலிங்கமும் எண்டிசை புகழ்தர ஈழ மண்டலமும் இரட்டபாடி எழரை இலக்கமும் திண்டிறல் வென்றித் தண்டால்
2. . . . ராஜகேஸரிபமரான ஸ்ரீராஜராஜத்தேவர்க்கு யாண்டு இருபத்திரண்டாவது த$_3$நு னாயற்று பூர்வபக்ஷத்துப் பஞ்சமியும் வியாழக்கிழமையும் பெற்ற அவிட்டத்தி னான்று உய்யக்கொண்டார் வளனாட்டு தனியூர் தலைச்ச –
3. . . . பெருந்திருக்கோயிலுடையார் கோயிலிலே ஸ்ரீ அருமொழிதேவன் என்னும் திருனாமத்தால் உண்ண வைச்ச அகரத்துக்கும் இக்கோயிலில் ஆடவல்லார்க்கு அவிப$_4$லி ஆராத$_4$நை உட்பட வேண் –
4. . . . இறையில் இன்னத்தில் சொம்பாதி நிலத்தால் வந்த வரி இத்தேவர் இறுக்க நின்ற பாதியால் வந்த இறையும் மூலபரடையோமே சந்த$_3$ராதி$_4$த்தவத் இறுப்பதாகவும் இந்நிலம் பதிற்றுவேலி –

5. . . . ம் மற்றும் இச்சாலைக்குப் பணிசெய்வார்க்கும் உள்ப்பட நிசதங் கல நெல்லாக்கி இப்பரிசு சந்தி$_3$ராதி$_3$த்தவத் இக்கோயில் ஸ்ரீகார்யஞ்செய்வாரே ஊட்டுவிக்கக்கடவதாகவும் இந்நெல்லு போக்கி னீக்கினின் –

6. . . . ம் இறைப்பாதி இறுத்து இப்பதிற்றுவேலி நிலமும் ஆடவல்லாரேய் அநுபவிக்ககடையாராகவும் இப்பரிசு கல்லில் வெட்டுவித்துக் குடுத்தோம் மூலபரடைஒம் இப்பரிசு அன்றென்று தடுத்தார் திரு –

7. ஆணை மறுத்தார் படு தண்டம் படுவதா –

8. க இப்பரிசு செய்து குடுத்தோம் முலப –

9. ரடைஒம் இன்னும் பெருந்திருக்கோயிலு –

10. டைய மஹாதேவர்க்கு தலைச்சங்காட்டு மு –

11. ளபரடையோம் இதே$_3$வர்க்கு ஸம்வத்ஸரந்தோறு சந்த்$_3$ராதி$_3$த்தவத் சித்திரைத் திருஉத்ஸவத்துக்கு திருவிழா எழுந்தருள வேண்டுவதற்கு திருவிழாபுறமாக –

12. க் குடுக்கின்ற நிலம் பெருந்திருக்கோயிலுடையார் நெல்க்குப்பை நிலம் ஐவேலியும் திருனல்லூர்ச்சம்படிய் உட்பட உள்ளிட்ட நிலம் உள்ளது

13. முற்றும் இதனோடும் அடைத்த மாகுடி நிலம் அரைக்காலும் உட்பட உள்ளது முற்றும் யாண்டு இருபத்திரண்டாவது முதல் மூலபரடையோ –

14. மே இந்நிலத்தால் வந்த இறை சந்தி$_3$ராதி$_3$த்தவல் இறுப்பதாகவும் இவ்வுடையார் திருஉத்ஸவத்துக்கு இன்னிலத்தால் வந்த போ$_4$கங் கொண்டு

15. இக்கோயிலில் ஸ்ரீகார்யஞ்செய்வாரே திருஉத்ஸவம் செய்யக்கடவா – ராகவும் இந்நிலம் இறை இழிஞ்சமையில் ஊர்நில முதல் கொ –

16. ள்ளும்போது இத்தேவர் திருவிழாப் புறமான நிலமளக்கவும் இன்னிலத்தில் குடியிருப்[ப்] போரை எப்பேற்பட்ட குடிமையும்

17. கொள்ளப்பெறாதோமாக இப்பரிசு சந்தி$_3$ராதி$_3$த்தவத் இறையிலி செய்து குடுத்தோம் முலபரடைஒம் இப்பரிசு அன்றென்றார்

18. திருஆணை மறுத்தார் படுதண்டம் படுவதாக இப்பரிசு செய்து குடுத்தோம் மூலபரடைஒம் இன்னும் ஸ்ரீ ராஜராஜதேவ –

19. ர்க்கு யாண்டு பதிநேழாவதில் இளங்கரிகாடு நிலமுள்ளது முற்றும் அவிபலி அர்ச்சனைக்கு சந்தி$_3$ராதி$_3$த்தவத் இறையிலி

20. செய்து குடுத்தோம் முலபடைஒம் இவைய் பெருவண்ணக்கன் தத்தனானையெழுத்து பரடைக்காவிதி மல்லன் எழுநூற்றுவந் எ –

21. ழுத்து பரடைக்காவிதி முன்னூற்றுவன் ஏறன் எழுத்து இது பந்மாஹேச்$_2$வர ரக்ஷை

20:2

இடம் : *கருவறைத் தெற்குச் சுவர், இ.க.ஆ.அ.187-1925*

காலம் : *முதலாம் இராசேந்திரன், யா. 8, கி.பி.1020*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திருமந்னி வளர இருநிலமடந்தையும் போர்ச்சயப்பாவையுஞ் சீர்த்தநிற் செல்வியும் தந் பெருந்தேவியராகி இந்புற நெடுதுயில் ஊழியுள்ளிடைதுறை நாடுந் துடர்வனவேலிப் படர் வனவாசியுங் சுள்ளிச்சூழ் மதிள் கொள்ளிப்பாக்கையுந் நண்ணற்கருமுரண் மண்ணைக் கடக்கமும் பொருகடல் ஈழத்தரைசர் தமுடியும் முந்நவந் பக்கல் தெந்நவந் வைச்ச சுந்தரமுடியும் இந்திர –

2. னாரமும் தெந்றிசை ஈழமண்டல முழுவதும் எறிபடைக் கேரளந் முறைமையில் சூடுங் குலதனமாகிய பலர்புகழ் முடியும் செங்கதிர்மாலையுஞ் சங்கதிர்வேலைத் தொல்பெருங்காவல் பல்பழந்தீவும் செருவில் சினவில் இருபத்தொருகால் அரைசு களைகட்ட பரைசுராமந் மேவருங் சாந்திமற்றீவரண் கருதி இருத்திய சொம்பொற்றிருத்தகு முடியும் மாப்பொருதண்டாற்கொண்ட கோப்பரகேஸரி பந்மராந ஸ்ரீ ராஜேந்த்ர –

3. சோழதே₃வர்க்கு யாண்டு எட்டாவது ஆநித்திங்கள் முந்நாள் பக்கம் எட்டு கிழமை நாயறு மகத்தி நாந்று உய்யக்கொண்டார் வளநாட்டு ஆக்கூர் நாட்டுத் தலைச்சங்காட்டு மூலபரடையோம் நம்முர் ஸ்ரீ மும்முடிசோழந் எந்று திரு நாமம் உடைய பேரம்பலத்தே கூட்டக் குறைவறக் கூடி இருந்து வாயொத்துப் பணித்த பரிசாவது நம்முர்த் தெந்சேரி பெரியதளி மஹாதேவர் காசட்டிக்கொண்ட நிலம் விளை நாட்டுப் பூதநூர்

4. நிலம் ஒந்றேய் முக்காலே இரண்டு மாவும் இத்தேவர்க்கு வைகாசித் திருவாதிரைத் திருநாள் திருவுத்ஸவத்துக்கு வேண்டும் அழிவுக்கும் அடியார்க்கு கொற்றுக்கும் ப்₃ராஹ்மண போ₄ஜநத்துக்குமாக இந்நிலத்து இறை இறையிலியாக இத்தேவர் பக்கல் ஐம்பது காசு கொண்டு இந்நிலத்தால் வந்த குறுநிலம் இறைஇலி செய்து குடுத்தோம் முலபரடையோம் இத்தேவர்க்கே நாங்கள் கைய்யெழுத்தோ –

5. லையால் கடவ பொந் நூற்றுக் கழஞ்சுக்கும் இப்பொந்நுக்குப் பலிசைக்காக இத்தேவர் நிலம் கீழ்ப்புலத்தில் நிலத்திலே இறைஇலியாக இழிச்சிக் குடுத்த நிலம் இருவேலியும் இந்த முந்பில் பிரமாணம் சாவாவதாகவும் இப்பரிசிநால் இரண்டு கிடப்பால் நிலமும் இறைஇலியாகத் திருநன்நிபள்ளி உடையார் கோயிலிலே கல்வெட்டுவிச்சு இறைஇலி செய்து குடுத்தோம் மூலபரடையோம் இவை பணியால் பரடைக்காவிதி ஏறன் எழுநூற்றுவனெழுத்து இவை பெருவண்ணக்கந் மாயாந் வடுகநெழுத்து இவை பெருவண்ணக்கந் பூதி மாயாந் எழுத்து இவை எழுநூற்றுவந் மோடந் எழுத்து இது பந்மாஹேச்₂வர ரக்ஷை

## 20:3

இடம் : *கருவறை மேற்குச் சுவர் இ.க.ஆ.அ.182-1925*

காலம் : *முதலாம் இராசேந்திரன், யா.14, கி.பி.1026*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திருமந்னி வளர இருநிலமடந்தையும் போர்ச்சயப்பாவையுங் சீர்த்திநிற் செல்வியும் தந் பெருந்தேவியராகி இந்புற நெடுதுயில் ஊழியுள் ளிடைதுறை நாடுந் துடர்வன வேலிப் படர் வனவாசியுங் சுள்ளிச்சூழ் மதிள் கொள்ளிப்பாக்கையுந் நண்ணற்கருமுரண் மண்ணைக் கடக்கமும் பொருகடல் ஈழத்தரைசர் தமுடியும் ஆங்கவர் தேவியர் ஓங்கெளில்

2. முடியு முந்நவந் பக்கல் தெந்நவந் வைச்ச சுந்தரமுடியும் இந்திரநாரமும் தெற்றிசை ஈழமண்டல முழுவதும் எறிபடைக் கேரளந் முறைமையில் சூடுங் குலதனமாகிய பலர்புகழ் முடியும் செங்கதிர்மாலையுஞ் சங்கதிர்வேலைத் தொல்பெருங்காவல் பல்பழந்தீவும் செருவில் சினவில் இருபத்தொருகாலரைசு களைகட் பரசுராமந் மேவருஞ் சாந்திமற்றீவரண் கருதி இ –

*(வரிகள் 3 முதல் 7 வரை சிதைந்துள்ளன)*

8. . . . கடு முரட் கடாரமும் மாப்பொரு தண்டாற் [கொண்] கொண்ட கோப்பரகேஸரி பம்மரான ஸ்ரீ ராஜே$_3$ந்தர சோழ தே$_3$வர்க்கு யாண்டுப் பதிநாலாவது உய்யக்கொண்டார் வளநாட்டு ஆக்கூர் நாட்டு தலைச்ச[ங்] காட்டு மூலபரடையோ[ம் நம்] பெருந்திரு [கோ] யிலுடையார் திருமுற்றத்தே கூட்டக் குறைவறக் கூடியிருந்து நம் உடையார் ஸ்ரீ ராஜேந்த$_3$ரசோழர் ஸ்ரீ பு$_4$ஜ[ங்]கள் வத$_3$தி$_4$[த்] –

9. தருள வேண்டும்மென்று பெருந்திருக் கோயிலுடையார் ஸ்ரீ கோயிலிலே திருநாவராதினை கொண்டருள[வும்] எழுந்தருளவித்த திருமேனி இஷபவாஹன தே$_3$வநார் முவோடையா[டி] அர்ச்சனைக்கு வேண்டும் போ$_4$க[ஞ்]சேது குடுத்த பரிசாவது பெருந்திருக்கோயிலுடையார் திருநாங் [கூரி]ல் யாண்டு **14**ஆவது வா. . .தும் ஒட்டன் [கு] டி கடமைக்கு வேண்டும்

10. . . . ராதத்துக்கு அட்டவேண்டும் நெல்லுமே உடையார் இறுக்கக் கடவ காசு நிக்கி நின்ற சில்வரி புறவரி [எப்] பேர்பட்டதும் முலபரடையோமே இறு [த்து] க் கு [டுக்கக்கடவோ] மாகவும் புறவரி சில்வரி உடையார் இறுக்கடவரவராக இவிலாபமும் உடையார் . . . லை முடுக்கில் சிவபாதசேகர விளாகமும் வடகரை ராஜே$_3$ந்த்ரசோழவிளாகமும் உள்ளது முற்றும் இதன் தெற்கில் வெடுத்தபாதவிளாகம் . . . ல்பலி [யு]ம் ஆக இக்கொ[ல்]லை முடுக்கு உடையார் நிலம் உள்ள –

11. . . . ம் வெற்றாள் குடிமை இந்நில உழுவார் தவிர முலபரடையோமே சேவிக்க கடவோமா [நி] இ நிலம் உழுவார் வெற்றாள் குடிமைக்கு அட்டு

நெ[ல்]லு . . . இப்பரிசு கொண்டு இ வி[ஷ]ப வாஹன தே₃வர்க்கு திருவமிது நாலு ஸந்திக்குமாக அரிசி பதக்குமாக கறியமுதுக்கும் நெய்[யமிது]க்கும் தயிரமிதுக்கும் அடைக்காய[மி]துக்கும் திருமெப்பூச்சுக்கும் திருபுகைக்கும் திருவிளக்குக்கும் திருவாராதினை செவார்க்கும் திருப்பரிசாரம் செவாற்க்கும் திரு [மெய்] காப்பாற்க்கும்

12 . . . ச்சமறு கலநெல்லாக ஆட்டை வ[ண்] ணம் முன்னூற்றுபதின்கல [நெ]ல்லும் இதேவர் திருவிழா எழுந்தரு[ளு]ம் ஒருநாளை அழிவுக்கு வேண்டுவது இ தேவற்க்கு ஸ்ரீ காரியம் செ . . . சந்த்₃ராதி₃த்தவல் இப்பரிசு நிவந்தம் செலுத்தக் கடவராகவும் கொல்லை உழுகுடிகளை யெப்பேற்பட்ட வெட்டி வேதனையும் காட்டாதிதாகவும் இப்பரிசு நிவந்தம் செது போகம் பண்ணி குடுத்தோம் முலபரடையோம் இப்பரிசன்றென்பார்

13. ஸ்ரீமு[க]ப்படி சோழன் பேரம்பலத்துக்கு ஊருடை துர்க்₃காபரமேச்₂வரிக்கும் முலபரடையோமுக்கும் பிழைச்சாராகவும் அவர்களை உடையார் கந்மிகளை தேவர்கந்மி[க]ளும் ஸ்ரீ மாஹேச்₂வரருமே இரு [பத்த]ங்கழஞ்சு பொன் மன்றப்பெறுவதாகவும் இப்பரிசு நிமந்தஞ் செலுத்தக்கடவோமா[க] போகம் செது குடுத்தோம் முலபரடை காவதி யேறன் யெழுநூற்றுவன்னெழு[த்] இ நில[த்]துக்கு பெருங்காவூர் கிழான் அத்தன் சோ –

14. மன் நிலத்துக்கும் மேக்கும் சாதகர்ணி குமாரன் சதி நிலத்துக்கு கிழக்கும் வட[வெ]ல்லை பாடில் குமாரன் கணன் நிலத்துக்கு தெற்கும் கீழ்பால்கெல்லை அகழன்வான் செக்கும் திருவாய்ப்பாடி தேவர் நிலத்துக்கும் பெருங்காவிதின் கீழ்பா.... பாணி கோவிந்தன் நிலத்துக்கும் தசாதகர்ணி அங்குவிராணன் நிலத்துக்கு மேற்கும் தென்பால்கெல்லை பெருங்காளூர் கிழான் நில நிலத்துக்கும் பெருங்கள கிழான் [அ]ங்கி க்ருஷ்ணசோமாசியா நிலத்துக்கும் இ சாதகர்ணி நீலகண்டன் சாத்தன் நிலத்துக்கு மூவாயிரவனு[க்]கு வடக்கு –

15. ம் இ நான்கெல்லை உள்ளிது முற்றும் வெள்ளான்குடிமையும் இ நிலத்திருப்பாரை எப்பேர்ப்பட்ட . . . கடவரா. . . கல்வெட்டுவிச்சு குடுத்தோம் மூலபறடையோம் இப்பரிசு சந்த₃ராதி₃த்தவல் காட்டப்பெறாதிதாக கல்லிலு வெட்டினோம் முலபறடையோம் இப்பரிசு அன்றென்று புறவரி க . . . யும் காடுங் காடு . . . வெற்றாள் குடிமையும் [கா]ட்டுவோமென்பார் திருவாணை மறுத்தாராக கல்லில் வெ[ட்]டிக் குடுத்தோம் மூலபரடையோம்

*(மேற்கொண்டு கையெழுத்து இட்டவர் பெயர்கள் உள்ளன)*

**20:4**

**இடம்:** *கருவறைத் தெற்குச் சுவர், இ.க.ஆ.அ. 185-1925*

காலம் : *(கல்வெட்டில் அரசன் பெயர், ஆட்சியாண்டு ஆகியன இல்லை. எனினும் மெய்க்கீர்த்தியைக் கொண்டு இதனை இராசாதிராசன் கல்வெட்டாகக் கருதலாம். கல்வெட்டு வரிகள் 1-8 வரையில் சில பகுதிகள் காணப்படவில்லை.)*

1–3 ஸ்வஸ்திஸ்ரீ திங்களேர் தரு தந் *என மெய்க்கீர்த்தி தொடங்கி 4வது வரியில் முடிகிறது.*

4. மநு நெறி நிந்று . . . கிழமையும் பெற்ற பூசத்தினாந்று உய்யக் கொண்டார்வளனாட்டாக்கூர் நட்டுத் தலைச்சங்காட்டு

மூலபரடையோம் நம்மூர் ஸ்ரீ மும்மடிசோழன் பேரம்பலத்தே கூட்டக் குறைவறக் கூ –

5. டியிருந்து நம்மூர்த் திருநன்நிபள்ளி உடைய மஹாதேவர்க்கு முந்பு இத்தேவர் நிலத்தில் அர்ச்சனைக்கு விட்ட ராஜேந்த்ர சோழநல்லூர் ஸ்ரீ மதுராந்தகன் வாய்க்காலுக்குக் கிழக்கு விட்ட நிலத் . . . க்கந் சாத்தநும் பெருங்காவூர் கிழாந் தத்தந் காளியும் கவிணியந் நாராயணந் தேவநும் சாதகர்ணி தேவந்

தேவந் பொந்னம்பலத்தாடியும் சாதகர்ணி நாராயணந் கண்ணநும் வெள்ளாளந் சடையந் பி –

6. ச்சநும் உடைய நிலத்துக்கும் பாத்திக்கும் இன்மனைக்கும் தெற்கும் நடுவுபட்ட நிலத்தில் குடிமக்கள் நிலமும் தாநப்பெருமக்கள் நிலமும் நீக்கி இத்தேவர் அநுபவித்து வருகிற நீர்நிலமும் பா. . . டிந் எதிராமாண்டு முதல் சிற்றிறைப் பேரிறை ஊரிடு வரிப்பாடும் வெள்ளாந் வெட்டியும் தவிர அநுபவித்து அருளப்பெறுவராகவும் இப்பிரமாணத்துக்கு மேல்ப்பட்ட நிலம் நீக்கி இத்தே –

7. வர் அநுபோகமாந நிலம் உள்ளிது முழுவதும் மூலபரடையோமே கைக்கொண்டு இப்பிரமாணத்திந் மேல்ப்பட்ட நிலம் உடையார்க்கு திருவாராதனைக்கு சந்த்ராதித்தவற் இறையிலியே. . . ளக்கடநாச் சென்றுவருகிற நிவந்தம் போக்கி இந்நிலங்கள் திருத்தி எற அடுத்து முதலாக நெல்லெல்லாம் பெரியவேளத்து பெண்டாட்டி சோமந் சோழகுலசுந்தரி தந் ஸ்வம் இட்டு

8. திருத்திநமையில் ஏற்றமாந நெல் இந்நிலம் இத்தேவர்க்குக் கொண்டு தாந் வேண்டும் நிவந்தம் செய்துகொள்கவெந்று திருவாய்மொந்தருளித் திருமுகம் பிராஸதஞ் செய்து மூலபரடை . . . ணக்கந் தத்தந் அடைக்கலத்திந் எழுத்து இப்படி யறிவேந் பரடைக் காவிதி சடையந் சாத்தந் எழுத்து இப்படி யறிவேந் பெருவண்ணக்கந் ஆனை தத்தந் எழுத்து இப்படி யறிவேந் பரடை –

9. க் காவிதி முந்நூற்றுவந் சிராமர் எழுத்து இது பந்மாஹேச்$_2$வர$_0$ ரக்ஷை

20:5

இடம்: *சண்டேஸ்வர் கோயில் கிழக்கு, வடக்குச் சுவர்கள், இ.க.ஆ.அ. 193/1925*

காலம்: *இரண்டாம் இராசேந்திரன், யா. 3, கி.பி. 1055*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ இரட்டிடபாடி ஏழரை இலக்கமும் கொண்டு கொல்லாபுரத்து ஜயஸ்தம்ப நாட்டி பேராற்றங்கரைக் கொப்பத்து ஆகவமல்லனைக் கெட எறிந்தவந் ஆனையுங் குதிரையும் பெண்டிர் பண்டாரமும் கைக்கொண்டு விஜயபிஷேகஞ் செய்து வீரஸிம்ஹாஸநத்து வீற்றிருந்தருளிய கோப்பரகேஸரிபந்மராந உடையார் ஸ்ரீ ராஜேந்த்ர தே$_3$வற்கு யாண்டு ஆநித்திங்கள் பிந்நாள்ப் பக்கம் இரண்டு கிழமை வெள்ளி நாள் திருவோணம் இந்நாளது பருவமாக நண்பகல் ஆவணத்துக் கேட்ட பொருள் ஜயங்கொண்ட சோழவளநாட்டு ஆக்கூர் நாட்டு தலைச்சங்காட்டு முலபரடைப் பெருமக்களோம் நம்முர்

2. உடையார் திருவலம்புரமுடையார் கோயிலில் அதிகாரிகள் இருமடிசோழ மூவேந்தவேளார் எழுந்தருளிவித்த திருவலம்புரநாயகர்[க்]கும் பிராட்டியார்க்கும் பிள்ளையார்க்கும் திருவாபரணம் செய்து சார்த்த இவர் குடுத்த காசு எண்பது இக்காசு எண்பதிலும் ஆநைமேல் துஞ்சி அருளிந உடையார் ஸ்ரீவிஜயராஜேந்த்$_3$ர தே$_3$வற்கு யாண்டு முப்பத்தாறாவது பெரும்பற்றப்புலியூர் ஆநித் திருநாள் திருவெழிச்சிக்கு வேண்டுவந கொண்டு குறைவறுக்கக் கொண்ட காசு முப்பதும் உடையார் ஸ்ரீ ராஜேந்த்ரதே$_3$வற்கு யாண்டு மூந்றாவது ஆநித் திருநாள் திருவெழிச்சியில் கொண்டலப்பண்ணையில் திருமடைப்ப –

3. ள்ளிக்குக் குறைவறுக்கக் கொண்ட காசு ஐம்பதும் ஆகக் காசு எண்பதும் மூலபரடையோமே வாங்கிக்கொண்டு திருவெழிச்சிக்கு அழித்த [ை]ம யில் இக்காசு எண்பதுக்கும் யாண்டு மூன்றாவது முதல் பலிசை காசு ஒந்றுக்கு ஆட்டைவிட்டந் காசு அரையாகப் பொலிவதாகப் பொலிந்த பலிசை ஏற்றிவந்த காசு நாற்பதுக்கும் இறைகாவல் செய்து குடுத்த நிலம் இவ்வூர்ப் பிடாகை ஜயங்கொண்ட சோழநல்லூர் இத்தேவர் அக்குணவந் மசக்கலெந்று பேர் கூவப்படும் நிலத்துக்கு எல்லையாவது சாதகர்ணி சேந்தத் தாயநும் தம்பிமாரும் உடை –

4. ...நிலத்திக்கு கிழக்கும் திருக்கூடக்கோயில் மஹாதேவர் நிலத்துக்கு தெ[ற்] க்கும் [ம்]ஏ[ர்]க்கும் [தெக்கும்] உள்சிறுவாய்க்கால்லுக்கு மேக்கும் [வ]ஞ்சி [க்] கு வடக்கும் ஆக இவ்விசைத்த இந்நான் [கெல்] லையிலும் நடுவுபட்டவிடத்து நீர்நிலமும் பாத்தியும் புந்செயும் ஆக நிலம் ஒன்றே இரண்டு மாவிநால் பலதரத்தால் மடக்கி நிலம் அரைமாவரைக்காணி முந்திரிகைக்கீழ் எழுமாவும் இதுவும் இதுவந்றியே இத்தேவக்கு

சுத்தமலிநல்லூர்ச் சக்கர நிலமெந்று பேர் கூவப்படும் நிலத்தில் இறைகாவல் செய்து குடுக்கிற நிலத்துக்கு மேல்[பா]ற்கெல் –

5. லை இத்தேவர் புந்செ நிலத்துக்குக் கிழக்கும் கண்ணாற்றுக்கு தெற்கும் சாதகர்ணி கண்ணந் கண்ணந் திருச்சிற்றம்பலமுடைய[ா] நிலத்துக்கும் பரடைக்காவிதி நிலத்துக்கு தெற்கும் இத்தேவர் நிலத்துக்கே மேற்கும் வடக்கும் ஆக இவ்விசைத்த இந்நாந்கெல்லைஇலும் அகப்பட்டவிடத்து விளைநிலமும் புந்செய்யுமுள்ப்பட நிலம் ஒந்றே காணியிநால் பலதரத்தால் மடக்கி வந்ததில் முக்காணிக்கீழ் அரையே மூந்றுமாவும் ஆக இவ்விரண்டு கிடப்பாலும் வந்த விளைநிலங்களாலும் [பா]த்தியாலும் புந்செய்களாலும் பலதரத்தாலு –

6. ம் வந்த நிலம் ஒருமாவரைக்கும் இவ்வாண்டுமுதல் சந்த$_3$ராதி$_3$த்தவற் எப்பேற்ப்பட்ட பேரிறைச் சிற்றிறையும் வெள்ளாந் குடிமையும் வெட்டிமுட்டையாளும் வேலிக் காசும் உள்ளிட்டு எப்பேற்ப்பட்ட இறைகளும் மூலபரடையோமே யிறுக்கக் கடவோமாகவும் இத்தேவரே இந்நிலங்களில் இ போகம் அநுபவிக்க உடையவராகவும் இந்நிலங்கள் ஊரிப்படி தரமழிந்து நிலமளந்து தரமிடிலும் இந்த கு[றி]க்குட்பட்ட எல்லையிலகப்பட்ட நிலத்துக்கு இத்தரப்படியே யி[ப்]ப[டி]க்கே மடக்காக இறுக்கக்கட –

7. வோமாகவும் எப்பேற்பட்ட இறைகளும் மூலபரடையோமே யிறுக்கக்கடவோமாகவும் இந்நிலத்துக்கு இறை காட்டுவார் திருவாணையெந்று கல்வெட்டிக் குடுத்தோ மூலபரடைப் பெருமக்களோம் இந்நிலத்தில் போகங் கொண்டு படைமங்கலமுடையாந் வெங்காட நீலகண்டநாந அதிகாரிகளிருமடிசோழ மூவேந்தவேளாரெழுந் தருளிவித்த திருவலம்பு நாயகர்க்கும் பிராட்டியார்க்கும் உச்சியம்போதை ஸந்திக்கு திருவமுதரிசி அறுநாழிக்கு நெல்லுக் குறுணி எழுநாழியும் கறியமுதுக்கும் நெய்யமுதுக்கும் தயி –

8. ரமுதுக்கும் அடைக்காயமுதுக்கும் நெல்லு ஐஞ்ஞாழியும் உடையார்க்கு காவேரிநிந்றும் நாள் ஒன்றுக்குத் திருமஞ்சணநிர் நாற்காலஞ்சு மப்பாநுக்கு நெல்லுக் குருணிருநாழியும் இதேவர் திருநந்தவநம் ராஜாதிராஜநி[ல்] குடிகளுக்கு கோயில் வெறுஞ்சோரு நீக்கி நித்த நெல்லுக்குறுணியிநாழியுமாக நாளொந்றுக்கு நெல் ஐங்குறுணியாக நாள முந்நூற்றைம்பதிந் கலமு நீக்கி நிந்ற நெல்லுக்கொண்டு திருவலம்புரநாயகரைத் திருவாராதனை பண்ணுவாருக்கும் வைகாசித் திருவுத்ஸ –

9. வமெழுந்தருளும்போதைக்குத் திருப்பள்ளித்தாமத்துக்கு திருவிளக் கொண் ணைக்கும் எறுபடியமுதுக்கும் ஸ்ரீபாதந்தாங்குவாருக்கும் வேண்டுமழிவு நீக்கி நிந்றதுகொண்டு திருவிழாச் சேவிக்க வந்த அடியார்க்கு பரிசட்டமுங் கொற்றுங் குடு[க்க]க் கடவிதாகவும் இப்பரிசு

இந்நிலத்தில் போகங்கொண்டு இவ்வழிவல்லது மற்று [அ]ழிக்கப் பெறாததாகவும் அழிப்பார் திருவாணையெந்றும் ஆக இப்பரிசு கல்வெட்டிக் குடுத்தோம் உடையார் திருவலம்[பு]ரமுடையார்க்குத் தலைச்சங்காட்டு மூலபரடைப்பெரும[க்]க ளோம் இதுவுமிதுவந்றியே திருவலம்புரமு –

10. டையார்க்கு அற்ச்சநைக்கு விட்ட நிலம் இவ்வூர்ப் பிடாகை சுத்தமலிநல்லூர் முந்பில் விளாகமெந்று பேர்கூவப்படு நிலம் பெருவழிக்குக் கிழக்கும் பெருவழிக்கே தெற்க்கும் அழிவாக்கலுக்கு மேற்கும் வஞ்சிவாய்க்கு வடக்கும் நடுவுபட்ட நிலத்துக் கண்ணாற்றுக்கு வடக்கும் திருபுவநமாதேவி வதிக்குக் கிழக்கும் இந்நா –

11. ந்கெல்லையிலு நடுவுபட்ட விளைநிலம் இருவேலியில் தெற்க்கடைய அற்சநைக்கு விட்ட நிலம் வேலியும் பூர்வதெசமும் கங்கையும் கடாரமுங் கொண்ட கோப்பரகேஸரிபந்மராந உடையார் ஸ்ரீ ராஜேந்த்$_3$ர சோழ தேவர்க்கு யாண்டு [3]2 ஆவது ஆளப்பிறந்தார் திருக்கல்யாணத்துக்கு கச்சோரம் கொட்டக் கொண்ட பொந் முப்பதிந் கழஞ்சு கொண்டு பலிசைக்கு இறைகாவல் செய்து குடுத்த வடக்கடைய நிலம் வேலியும் ஆக முலைக்காடெறுள்ப்பட விளைநில மூவேலியும் இதிலகப்படும் மனையும் ஞ்

12. செய்யும் களத் திடலும் [கோயி]ல் . . . வருள் த. . .டுங் காடு[ம்] நாற்றுக் கா[லும் பா]த்தியும் இந்நில[ங்கள் முந்] . . . [றைகாவல் செய்]து குடுத்த மையில் இந்நிலங்கள் இவ்வாண்டு முதல் சந்த்ராதித்தவற் வெள்ளாந் குடிமையும் வெட்டிமுட்டையாளும் வேலிக்காசு முள்ளிட்ட . . . மறுப்பார் திருவாணையெந்று கல்வெட்டிக் குடுத்தோ மு[லபரடைப்பெ]ருமக்க –
*(தொடர்ந்து கையொப்பம் இட்டவர்கள் பெயர்கள் உள்ளன.)*

## 20:6

இடம் : *சண்டேஸ்வரர் கோயில் வடக்குச் சுவர்கள், இ.க.ஆ.அ.194-1925*

காலம் : *இரண்டாம் இராசேந்திரன், யா.7, கி.பி.1059*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திருமாதர் புவியெந்நும் எனும் மெய்க்கீர்த்தி தொடக்கம் –

6. பிடித்து மாப்பெரும் புகழ் மிக வளர்த்த கோப்பரகேஸரி பந்மராந உடையார் ஸ்ரீராஜே$_3$ந்த்ர தே$_3$வர்க்கு யாண்டு 7ஆவது அபரபக்ஷத்து நாயற்றுகிழமையும் நவமியும் பெற்ற உத்திரட்டாதி நான்று ஜயங்கொண்டசோழவளநாடு ஆக்கூர்நட்டு தலைசங்காட்டு மூலபரடையோம் நம்முர் ஸ்ரீ மும்மடி சோழந் பேரம்பலத்தே கூட்டக் குறைவறக் கூடி இருந்து நம்முர் திருவாலங்குளமுடைய மஹாதேவர்க்கு முந்பு இறையிலியாக அவிபலி அர்ச்சநைக்கு விட்டு இத்தேவர் அநுபவித்து வருகிற நிலம் இவ்வூர்

7. பிடாகை சோழகேரள நல்லூர் நிலங்கள் மேடாய் நீர் பாயாதே ஒழிய குடிபற்றாமையிலும் போக ஆநி வந்த இதே$_3$வர்க்கு அவிபலி அற்சனைக்கு போதாதொழிய இந்நிலத்தால் விரிவு உள்ள நிலம் 1¼ ஒந்றே கால் ஸபைப்பொதுவாக [வா]ங்கி இதுக்கு மறுதலை நிலமும் ஒன்றேகாலும் இந்நிலத்துக்கு மேல் எற்[றமாக] குடுக்கிற நிலம் ஒந்றேகாலும் ஆக நி 2½ இரண்டரையும் [மா] வது இந்த இவ்வூர் மேல்பிடாகை கிடாரங்கொண்ட சோழநல்லூராந ராஜாஜநல்லூர் தெந்கரை முந்பு சங்கரபாடியாக கணவதி வெங்காடநுக்காய் இவந் இறை இறுக்கமாட் . . . ஆது ஸபை . . . ல்லையாவது மேல் பாற்கெல்லை

8. சாதகர்ணி சோமந் சுவர நிலத்துக்குக் கிழக்கும் வடபாற்க்கெல்லை கிடாரந்கொண்டாந் கண்ணாற்றுக்கு தெர்கும் கிழ்ப்பார்க்கெல்லை சாதகர்ணி பாணி நக்கந் நிலத்துக்கு மேற்கு தெந்பாற்கெல்லை சாதகர்ணி பாணி நக்க நிலத்துகும் சாதக்கர்ணி கொற்றந் வடுக நிலத்துக்கு வடக்கும் ஆக இவ்வைசைத்த இந்[நான்] கெல்லையிலு நடுவுபட்ட நி 2½ இரண்டரையும் பொத்தகப்படி மிகுதிக் குரைவுள்ளடந்க உள்[ள] நிலம் ஒழிவிந்றி உள்ளது முற்றும் இத்திருவாலங்குளமுடையாந் மஹாதேவற்கு சந்த்ராதித்தவற் நம்முர் ஈந்த பெருவையும் சில்வரியும் மி...காசும் வெள்ளாந் வெட்டியு –

9. ம் பந்மை பண்டவெட்டிக்காசும்எப்போற்ப்பட்ட இறைகளும் இந் நிலத்துக்கு இத்$_3$தே$_3$வரையும் மித்$_3$தே$_3$வர்க்கு ஸ்ரீகாரியஞ்செய் வாரையும் இத்$_3$தே$_3$வர்க்கு இநிலமுழுவாரையும் இத$_3$தே$_3$வர் பலபணி நிமந்தக் காறரையும் இச்சுட்டப்பட்ட இறைகள் காட்டுவோமாகில் திருவாணையே எந்று இந் நிலங்குடுத்து இந் நிலத்துக்கு இறைகாவலாக இத்$_3$தே$_3$வர்பண்டாரத்து கொண்ட காசு 200 இக் காசு இருநூறும் கொண்டு சந்த$_3$ராதி$_3$த்தவற் இப்பரிசு அவ்வவாண்டுகள் கிராமகாரியம் செய்வோமே இப்பரிசு அநுபவியாமை –

10. க்கு விடபநம் பண்ணுவோம் ஆகிலும் இறைகொள்வோம் ஆகிலும் திறுவாணையே எந்று கல் வெட்டிக் குடுக்ககடவோம் இப்பரிசு இப்பூமி சந்த்$_3$ராதி$_3$தவர் . . . இறையிலியே அனுபவிப்பிக்க கடவோம் ஆமிப் பூமி குடுத்தோம் உடையார் திருவாலங்குளமுடைய மஹாதே$_3$வற்கு தலைசங்காட்டு முலபரடையோம் இந்நிலத்து புந்செய் களத்திருடரு[ம்] இல்லிருள்க்கையும் குளமும் கிணரு[ம்] பல்லுருவில் பயந்மரமும் நீரும் வழியும் உளிட்டு கிழவநாண்டாந் காணி உடைய பரிசே ஆளப் பெறுவார்கள் ஆக விற்று இறையிலி செய் . . . யோம் ஆங்குக் கேட்ட ஊர்

11. கணக்கந் காடந் முக்கநு[ம்] ஆந்குள்ளிருந்து கேட்ட உள்ளாவணக்கள [ரி] தெந்தலை லக்ஷணத்தால் வந்த ஆழ்ச்சிகும் குத்துக்கால் உள்ளது [கி]ரத்து ஆள்வித்து கடவோமாய் ஆழ்ச்சிப் புணைப்பட்டோம்

மூலபரடையோம் மிவாவணவோலைத் தலைப்பட்ட நி இரண்டரைக்கும் விலையும் இறைகாவெறுமாகக் கொண்ட க[ா]சு 200 இருநூறும் ஆவணகளத்[து] ஒரு கிழியாலே கொ[ள்க] இதுவே இந்நிலத்துக்கு விலைபொருளும் இறைகாவலும் [எ]ப்பேற்ப்பட்டதுக்கும் எண்ணிக்காட்டி ஒருகிழிய[ாலே] வகைசெலக் கொண்டு[பொ]றுள் அற்றமையில் இப்பரிசு . . . தோம் திருவாலங்குளமுடை[ய]

12. மஹாதேவற்கு தலைச்சங்காட்டு மூலபரடையோம் மூலபரடை மாற்றம் கவிசியந் காடந் தேவ –

13. ந் தேவடிப்பட்டநும் தோமியந் தத்தங் சந்திரசேகர நும் மாற்றப்படிபணியால் இவ்வூர் கரண –

14. த்தாந் கடவூருடையாநாந கண்ணந் சேந்திரசேகரநேந் இவை எந் எழுத்து

15. இப்படி அறிவேந் கவிசியந் சோமந் சேந்தநேந் இப்படி அறிவேந் சுவரந் தத்தந் சோமநேந், இப்ப

16. டி அறிவேந் கவிசிகந் [சு]வர்...

## 20:7

இடம்: *கோயில் மண்டப வடக்குச் சுவர், இ.க.ஆ.அ.190/1925*

காலம்: *வீரராசேந்திரன், யா.3 கி.பி.1066*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ வீ[ர]ராஜேந்த்ரசோழவென்று யாண்டு மூன்றுவது கொண்ணதுரு –
2. டையான் திருவெங்காடுடையாள் மரித்தமயில் இவந் பாவத்து
3. இவநுக்கு தந்மம் ஆக கு[று] கொண்டார் அறுவரும் இவர்கள் இட்ட [உ]தீட்டுக் காணாமயில் திரு –
4. க் காவணக்கால் கொள்ள தந்த காசு எண்பது
5. இப்படிக்கிவை தலைச்சங்க –
6. ாட்டு [ஆச்ச] ார்யன் எழுத்து

## 20:8

இடம்: *கோயில் கருவறை, வடக்குச் சுவர்*

காலம்: *முதலாம் குலோத்துங்கன் யா.12, கி.பி.1082*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ த்ரிபுவனச்சக்கரவர்த்திகள் ஸ்ரீ கொலோத்துங்க சோழ தேவற்[கு] யாண்டு 1[2] ஆவது ஜயங்கொண்ட சோழவளநாட்டு ப்ரஹ்மதேசம் திருநன்னி பள்ளி உடைய பிள்ளையார் மாதாக்கள் ஸ்ரீ தேசம் உடைய பிள்ளையாரும் திருவோதனம் பண்ணியருளுத்தும் திருநன்னிபள்ளிய –

2. லே பிள்ளையார் திருவோதாரம் பண்ணியருளின பழ மாடத்திலே பிள்ளையார் கோயில் எடுத்து உடைய பிள்ளையாரைத் திருப்பிருதிஷ்டை பண்ணுகன்று திருவாய்மொழிந்தருளி அற்சனாபோகமாக தலைச்சங்காட்டில் விஷ்ணுக்களை மாறின நிலத்திலே பதிற்று வேலி நிலமிடத் திருவாய்மொழிந்தருளி

3. இதுக்கு நடுவில் முற்றத்து விஷ்ணுவை மாறின இராஜராஜ விளாகம் நி 5 வேலி ஆய்ப்பாடி விஷ்ணுவை மாறின மகேந்திர விளாகம் உள்ப்பட 3 வேலி மேலை முற்றத்து விஷ்ணுவை மாறின நிலம் 2 வேலி தரமிலி நிலம் 1 வேலி ஆக 10 வேலியுந் திருருநானசம்பந்தநல்லூர் எந்று பிறித்துக் குடுக்கவன்று பிரஸாதஞ் செய்தருளின திருமுகப் படிக்கும் உ –

4. ள்வரிப்படிக்கும் பிரிந்த நிலம் கங்கை கொண்ட சோழ நல்லூரில் ஸரஸ்வதி வதிக்கு மேற்க்கு தில்லையாளி வாய்க்காலுக்குத் தெற்க்கு 2 கண்ணாற்று 3ஞ் சதிரத்து நடுவில் முற்றத்து விஷ்ணுவை மாறின விளை நிலம் புஞ்செயுந் குளமும் நிலம் 3 கண்ணாற்று 3 சதிரத்து விளை நிலம்

5. புன்செயும் குளமும்...கிடந்த ம் கொல்லை நிலம் திருநலக்குடையான் வாய்க்காலுக்கு . . . த் . . . தெற்க்கு 1 கண்ணாற்று 3 சதிரத்து விளை நிலம் கொல்லை நிலம் பவித்திரமாணிக்கவதிக்கு மேற்க்கு தில்லையாளி வாய்க்காலுக்குத் தெற்க்கு 2 கண்ணாற்று 1 சதிரத்து விளை நிலம் திருநலக்குடையான் வாய்க்காலு –

6. க்குக் தெற்க்கு 1 கண்ணாற்று 1 சதிரத்துமேலே முற்றத்தான் நிலத்துக்கு மாற்றாக வி[ட்]ட விளைநி . . . புன்செய்யும் குளமும் நிலம் தில்லையாளி வாய்க்காலுக்குத் தெற்க்கு 1 கண்ணாற்று 3 சதிரத்து ஆய்ப்பாடி விஷ்ணுவின் விளை நிலம் புன்செய்யும் குளமும் நிலம் கொல்லை நிலம் இராஜேந்திரசோழ வாய்க் –

7. காலுக்குத் தெற்கு 3 கண்ணாற்று 3 சதிரத்து மேலை முற்றத்தா நிலத்துக்கு மாற்றாக நெற்குப்பை விஷ்ணுவின் விளை நிலம் புன்செய் நிலம் முடிகொண்டசோழநல்லூரில் [ரா]ஜசுந்தரவதிக்கு மேற்கு [ரா]ஜேந்திரசோழந்த [வாய்]காலுக்குத் தெற்கு 1 கண்ணாற்று 3 சதிரத்து ஆய்ப்பாடி விஷ்ணுவின் விளை நிலம் 3 கண்ணாற்று 3 சதிரத்து விளை நிலம் ஆக

8. தரம் பெற்ற நிலம் தரமிலி நிலத்தில் ஒபாதியும் ஆக நிலம் 10 வேலி யும் இக்கிடபுக்களாற் பிறிந்தமைக்கு இவை ஊர்க் கணக்கு தலைச் சங்காடுடையான் திருவெங்காடுடையான் திருச்சிற்றம்பலமுடையானான மூவாயிரவன் எழுத்து

*(தொடர்ந்து கையொப்பட்ட இட்டவர் பெயர்கள்.)*

## 20:9

இடம்: *கோயில் கருவறை, வடக்குச் சுவர்*

காலம்: *இரண்டாம் குலோத்துங்கன், யா. 4, கி.பி. 1137*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ பூமேவி வளர என மெய்க்கீர்த்தி தொடக்கம்

2. தருளிய கோவிராஜகேசரி பந்மராந த்ரிபுவநச்சக்ரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்கசோழதேவர்க்கு யாண்டு நாலாவது ஜயங்கொண்ட சோழவளநாட்டு ஆக்கூர் நாட்டு ப்ரஹ்மதேய்சம் [தலைச்சங்] காட்டுத் திருநன்னிபள்ளி உடைய மஹாதேவர்க்கு வேண்டும் நிவந்தங்களுக்கு இறுப்பதாக இவ்வூரில் இத்தேவர் ஊர்க்கீழ் இறையிலியாய் வருகிற நிலத்துக்கு ஊற்க்கணக்குத் தலைச்சங்காடுடையான் எழுத்திட்ட கணக்குப்படி நிலமாய் முன்னுடையாரும் பழம்பெயரும் ப்ரஹ்மதேயமாய் வருகிறபடியும் முன் இறை –

3. கட்டினபடியுந் தவிர்ந்து யாண்டு நாலாவது முதல் தேவதானம் இறையிலியாய் வேறு பிறிந்த திருநன்னிபள்ளி நீர்நிலம் பதினொன்றே முக்காலே முன்று மா முக்காணி அரைக்காணிக் கீழரையும் கொல்லை நிலம் நா[லரை]யே அரைமா அரைக்காணி முந்திரிகை கை நில[ம்] பதினாறாவது திரு உலகளந்த கணக்குப்படி இத்தேவர் திருநன்தவனமாய் நீங்கலுக்குடலாக நீக்கின நிலத்துக் கொல்லை நிலத்துக்குடலாக எழுதின நிலமாய் பழம்படியே நீங்கலுக்குடலாக நீக்கின நிலம் இரண்டேய்யொருமாவரைக்காணி நீக்கி கொல்லை நிலம் இரண்டே ஒன்பது மாவரை முந்திரிகையும் ஆக நிலம் பதிநாலேய்யெ –

4. ட்டு மாக்காணி அரைக்காணி முந்திரிகையும் தரமிலி நிலத்தும் உள்ள ...ளக்க குறைந்த நிலத்தும் ஒபாதி நிலம் அரையேய் நாலு மா முக்காணிக்கீழ் மிரண்டு மாவும் ஆ[க நி]லம் [பதி]ன்நை[ஞ்] செய் முன்று மா அரைக்காணி முந்திரிகைக்கீழ்ழரையேய் இரண்டு மாவும் பதினாறாவது திருவுலகளந்த கணக்குப்படி இவ்வூர் நீங்கலுக்கு உடலாக நீக்கின நிலத்து இத்தேவர் ஸ்ரீ கோயிலும் திருமுற்றமும் திருமடை விளாகமும் தீர்த்தக்குளமும் திருநன்தவனமும் நிலம் மூன்றேய் முக்காலேயொருமாவரைக் காணியும்

5. ஆக நிலம் பதிநெட்டேய் முக்காலே நாலு மாக்காணி முந்திரிகைக்கிழ்ழரையே இரண்டு மா இதில் ஸ்ரீ கோயிலுந் திருமுற்றமும் உள்ளிட்ட நீங்கல் நிலமாய் பழம்படியேய் நீங்கலுக்குடலாக நீக்கின நிலம் [மூ]ன்றேய் முக்கலேயொருமாவரைக்காணி நீக்கி நிலம் பதி[னை]ஞ்செய் மூன்று மாவரைக்காணி முந்திரிகைக் கீழரையேயிரண்டு மாவிநால் நிலவொபாதி பழவிறை நெல்லு எழுநூற்றிருபத்து ந[ாற்]கலநெய் குறுணி அறுநாழி நிச்[செ]சயித்த ஒபாதி நெல்லு ஐஞ்நூற்று ஐம்பதின் கல –

6. நெல் ஐங்குறுணி நாநாழிக்கு முப்பத்தைஞ்சாவது இறை கட்டின ஒபாதி நெல்லுஅறுநூற்றொருபத்து முக்கலநே ஐங்குறுணி எழு நாழி உரி இப்படி தவிர யாண்டு நாலாவது முதல் வேலி ஒன்றுக்கு நெல்லு நூற்று கலமாக [இ]றை கட்டின நெல்லு ஆயிரத்து ஐஞ்னூற்று ஒருபத்தறு கலநே குறுணி நாநாழியினால் பத்தாறாக்கி நெல் துளாயிரத்[து] ஒன்பதின் கலநே இரு தூணி மூவுழக்கும் யாண்டு நாலாவது முதல் தேவதான இறையிலி இட்டமைக்கு தலைச்சங்காட்டு

7. மூலபருஷையார்க்கு அபிஷேக தக்ஷணை இறையிலி இட்ட ஊர்களாய் இவ்வூரோடு கூட்டி இறுக்கிற ஊர்கள் கூட்டி தரமிட்டுத் தலைச்சங்கட்டுக்குத் தரம் பிறித்துத் தெரியாமையில் தரம் பிறித்துக் கண்டாற் தரவொபாதி நெல்லு ஊரில் சுருக்குவது வேறு பிறிகிற நிலத்துக்கு தரவொபாதி நெல்லு வேலி ஒன்றுக்கு அறுபதின் கலத்துக்கு மேல் எறுமாகிலும் அறுபதின் கலமாக இறை கட்டின நெல்லுக்கே அந்தராயங்கொள்வது இவை.

8. புரவு வரி ஸ்ரீகரணநாயகம் பொன்னுழான் எழுத்து இவை புரவு வரி ஸ்ரீகரணத்து முகவெட்டி தலைநாறுடையான் எழுத்து இவை புரவு வரி ஸ்ரீகரண நாய[க]ம் இளங்காரிருடையான் எழுத்து இவை புரவு வரி ஸ்ரீகரணநாயகம் பந்தநல்லூருடையான் எழுத்து இவை புரவு வரி ஸ்ரீகரணத்து முகவெட்டி தஞ்சாவூர் கிழவன் எழுத்து இவை புரவு வரி ஸ்ரீகரணநாயகம் வாணிகன் எழுத்து இவை வயநாட்ட –

9. ரையன் எழுத்து இவை புரவு வரி ஸ்ரீகரணத்துமு[க]வெட்டி தெங்கங்குடையான் எழுத்து இவை புரவு வரி ஸ்ரீகரணத்து முகவெட்டி வாட்கை உடையான் எழுத்து இவை களப்பாளராயன் எழுத்து இவை குருகுலராயன் எழுத்து

## 20:10

இடம்: *கோயில் கருவறை, வடக்குச் சுவர், இ.க.ஆ.அ. 181-1925*

காலம்: *விக்கிரம சோழன், யா.16, கி.பி. 1138*

1–4 புஸ்வஸ்தி ஸ்ரீ பூமாலை மிடைந்த என்ற மெய்க்கீர்த்தி தொடக்கம்

5. கோப்பரகேசரி பந்மரான த்ரிபுவனச்சக்கரவத்திகள் ஸ்ரீ விக்கிரம சோழ தேவற்க்கு யாண்டு 1[6] ஆவது பதினாறாவது மார்கழித் திங்கள் பின்னாட் பக்கம் ஆறு கிழமை திங்கள்நாள் உத்திரம் இந்நாளால் ஜயங்கொண்டசோழவளநாட்டு ஆக்கூர் நாட்டுத் தலைச்சங்காட்டு முலபருஷையோம் ஸ்ரீ மும்முடிசோழன் பே[ர] –

6. ம்பலத்திலே கூட்டங் குறைவறக் கூடியிருந்து ஸபா நடைசெலுத்தா நிற்க்க இராஜாதி[ரா]ஜவளநாட்டுத் தநியூர் பெரும்பற்றப்புலியூர் வாச்சியன் சங்கரன் திருச்சிற்றம்பலமுடையானான தெ[ன்]னவன் ப்ரஹ்மாராயரும் உடையார் திருச்சிற்றம்பலமுடையார் கந்மிகளும்

இக்கோயிலில்காலும் பிடாருஞ் செய்வார்களும் கூடவந்து ஆளுடையார்க்கு இலை அமுது தோட்டம் நிங்களே விட்டியொள் இன்நம் ஸ்ரீ வி[க்ர]ம சோழ தேவர் திருமகளார் ஆளுடைய நாச்சியார்க்கு இலை அமுது தோட்டமும் இரண்டுபடியும் இலை அமுது [இ]சக்குவார்க்கு ஜீவிதமும் நிங்களே விடவேணுமென்று சொல்ல நாங்கள் காசுகொள்ளா இறையிலி ஆக விடுகிற கொடித் தோட்டமும் விளை நில –

7. மும் ஆவது இவ்வூர் பிடாகை இராஜராஜநல்லூரில் நாகத்தமங்கலப்பால் முன்பு விட்ட கொடி விளாக[த்து]க்கு சோரவிடுகிற நிலத்துக்கு எல்லை இச்சேரியில் பதினஞ்சாங் கண்டத்து இக்கொடித் தோட்டத்துக்கும் விளை நிலத்துக்கும் எல்லையாவது மேல்பாற்கெல்லை கலையன் வாநின்றும் வடக்கு நோக்கி யந்தக் குளம் மேற்ப்பொன்குலைக்குக் கிழக்கும் வடபற்கெல்லை திருவெங்காடே யேறப்போற முடுக்கினுக்கு தெ[ற்கு]ம் கிழ்பாற்கெல்லை திருநாங்கூ[ர்]ரெல்லைக்கு மேற்க்கு தென்பாற்கெல்லை கலையன் வா[ய்]க்கும் ஆத்ரய பாலை நாராயணனுக்கும் வெள்ளாளன் பாலை காடனும்மடைய விளை நிலத்துக்கும் புன்செ[ய்]க்கும் வடக்கும் இவ் –

8. விசைத்த தவ்–இன்னா[ன்] கெல்லையிலும் நடுவுபட்ட விளை நிலம் அரையேயிரண்டு மாவும் விளை நிலம் புன்செய்நிலம் மாகாணியரைக் காணியும் கொல்லை நிலம் அரையே முந்று மாவுமாக விளை நிலமும் புன்செயுங் கொல்லையும் ஆக நிலம் ஒந்றே ஆறுமாக்காணி அரைக்காணி இதில் முந்பு ஆள்ளுடையார் திருநாமத்தால் காசுகொள்ளாவ் இறையிலியாய் நிங்கு நிலம் [இர]ண்டு [மா]க்காணி நிக்கி நிலம் ஒன்றே நாலுமாவரைக்காணி இந்னிலம் ஒன்றே நாலுமாவரைக்காணியும் இதிலுள்பட்ட மேநோக்கிந மரமும் கிழ்னோக்கின கிணறும் பல்லுருவிற் பயன்மரங்களும் நிரும் வ –

9. ழியும் உள்ளிட்டுக் கிழவன் ஆண்டாநங்காள்வுடைய பரிசேய்யாளப் பெறுவதாக ஆள்ளுடை நாச்சியார்க்கு இலை அமுதுக்கு காசுகொள்ளாவிற்[ஐ]இறையிலியாக விட்டோம் மூலபருஷையோம் இந்னிலம் ஆளுடை நாச்சியார்க்கு இலை அமுதுக்கும் இலை அமுது இசக்குவாற்க்கு ஜீவநத்து[க்]குக்

காசுகொள்ளாவி[றை]றயிலியாகச் சந்த்ராதித்தவற் செல்வக் கடவுதாக விட்டோம் மூலபருஷையோம் இப்பரிசு விட்டமைக்கு உடையார் கோயிலிலும் கல்லிலுஞ் செபேட்டிலும் எழுத்து வெட்டிக் குடுத்தோம் ஆளுடைய –

10. நாசியாற்க்கு மூலபருஷையோம் இவகள் பணிக்க எழுதிநேன் தலைச்சங்காடு உடையான் கரணத்தான் சிர்ரிளங்கோ மலைக்கிறிய நின்றாநேன் இவை என்

*(தொடர்ந்து அறுபதுக்கும் மேற்பட்ட கையொப்பப் பெயர்கள் உள்ளன.)*

20:11

இடம்: *கோயில் மண்டபம், வடக்கு, மேற்குச் சுவர்கள்*

காலம்: *இரண்டாம் இராசராசன், யா.14, கி.பி.1150*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ பூமருவிய பொழிலேழும் பொருப்பேழும் புவன் நித்திலத்தரம் நெடுங்குடை பொழிந்து தவள வெண்ணிலாக் குளிர் பொதியச் சுடற் சக்கர வெற்பில் தந் –

*(இரண்டாம் வரி இருந்ததா என அறியக்கூடவில்லை)*

3. . . . த செம்பொந் வீரஸிம்ஹாஸனத்துப் புவன்முழுதுடையாளோடும் வீற்றிருந்தருளிய கோப்பரகேசரிபந்மரான திரிபுவனச்சக்கரவத்திகள் ஸ்ரீ ராஜராஜதேவற்கு யாண்டு 14ஆவது பங்குநித் திங்கள் பிந்னாள் பக்கம் 13 கிழமை திங்கள் நாள் சதையம் இந்நாளது பருவமாக நன்பகலாவணத்துக்கேட்டு [நி]கந்த பொருள் இறையிலி ப்ரமாணம் ஜெயங்கொண்டசோழவளநாட்டு ஆக்கூர் நாட்டுத் தலைச்சங்காட்டு மூலபருஷைக்குச் சமைந்த அடைப்பு முதலிகளும் கூட்டப் பெருமக்களும் வேலிநாயகஞ் செல்வார்களும் உள்ளிட்ட இவ்வனைவொம் எங்களூர் இவ்வாண்டு ஆவணி மாஸத்தும் புரட்டாதி மாஸத்தும் நீர்த்தட்டுப்பட்டு ஒருபூ நடப்பெறாமையாலும் நட்டவையும் பயிர்ப்பாழாய் தட்டுப்பட்டமையில் [இத்த]ட்டு–

4. க்குடலாக நாங்கள் இந்நாட்டு அம்பநாடு உள்பட மேலிய திருக்கடவூர் உடையார் ஸ்ரீ ஸ்ரீஆலகால தேவர் கோயில் மூலப்ர்த்யராந ஆதி சண்டேச்ₒவரதேவற்கு இலையமுது தோட்டமாக நாங்கள் காசுகொள்ளா இறையிலியாக இறையிலி செய்து குடுத்த நிலமாவது எங்[க]ளூர் பிடாகை ராஜராஜநல்லூரில் பந்நிரண்டாங் கண்டத்து இத்தேவர் விலைகொண்டு இத்தேவர் காணியான நிலத்துக்கு எல்லையாவது மேல்பாற்கெல்லை உள்ச்சிறுமுடுக்கினுக்கும் சாதகர்ணி குமரந் தந்தியந் கொல்லைக்கு கிழக்கும் வடபாற்கெல்லை சாதகர்ணி குமரந் தந்தியந் கொல்லைக்கும் புந்செய்க்கும் தெற்கும் கீழ்பாற்கெல்லை உந்நதராமன் வாய்க்காலுக்கும் தோழியந் சுவரந் சுவரந் கொல்லைக்கும் தோமியந் சேந்தன் கலையந் கொல்லைக்கு மேற்கும் தெந்பாற்கெல்லை தோமியந் சேந்தந் கலையந் கொல்லைக்கும் திருவெங்காடேறப்போன பெருவழிக்கு வடக்கும் ஆக இவ்விசைந்த இந்நா[ன்கெ]ல் –

5. லையிலும் உள்பட்ட கொல்லைவிரவு நிலம் இந்நிலம் அரையே நாந்மாவரை அரைக்காணியு மிகுதிக் குறைவு உள்ளடங்க இவ்வாண்டு முதல் இத்தேவற்கு சந்திராதித்தவற்கு காசுகொள்ளா இறையிலியாக இறையிலிசெய்து குடுத்துக் கொண்ட காசு 300 இக்காசு முந்நூறும் கொண்டு இக்கொல்லை அரையே நாந்மாவரை அரைக்காணிக்கும் வந்த

சிற்றிறைப் பேரிறை எப்பேர்ப்பட்டதும் நாங்களே இறுத்து கோயில்வாசலல் போந்த குடிமை எப்பேர்பட்டுதும் நாங்களே செய்யக்கடவோமாகவும் இக்கொல்லைக்கு முன்பு அருபியாக இட்ட விளைநிலமுள்ளுது நாங்களே ஊரிலே ஊரிலே மிஞ்ச இருக்கக்கடவோமாகவும் இக்கொல்லை நோக்கி வந்த செந்னிர் வெட்டிமுட்டையாள் எச்சோறு கூற்றரிசி மற்றும் எப்பேர்பட்டுதும் உள்ளிட்ட .....களும் நாங்களே செய்யக்கடவோமாகவும் இப்படி சமதித்து இக்காசு [முன்]னூறும்கொண்டு சந்திராதித்தவற் காசடங்க இறையிலி செய்து குடுத்தோம் முலபரத்த்யரான ஆதிசண்டேஸ்வர தேவற்கு மூலபருஷைக்குச் சமைந்த இவ்வனைவோம் இக்கொல்லைக்கு மு –

6. ந்பு காணியாளர் அனுபவித்துவந்த அனுபோகப்படியே மிகிதிக் குறைவு உள்ளடங்கவும் புகவும் போதவும் உடைய உரிமைகளும் நீரும் வ[ழி]யும் உள்ளிட்டு கிழவன் ஆண்டானுக்காளவுடைய பரிசே ஆளப்பெறுவதாகச் சந்திராதித்தவற் காசுகொள்ளா இறையிலியாக இறையிலிசெய்து செம்பிலுங் கல்லிலும் வெட்டிக்கொள்ளக்கடவதாக இப்படி இறையிலி செய்து குடுத்தோம் மூலபர்த்தயரான ஆதிதிஅண்டேவ[ர] தேவற்கு மூலபருஷைக்குச் சமைந்த இவ்வனைவோம் பணியால் இவ்வூர் மத்யஸ்தந் இராவணாந்தகந் ஆதிமூலனேந் இவை எந் எழுத்து

*(தொடர்ந்து கையொப்பம் இட்டவர் ஏறக்குறைய 50 பெயர்கள் உள்ளன.)*

## 20:12

இடம் : *மலையாமடந்தை அம்மன் கோயில், தெற்குச் சுவர், இ.க.ஆ.அ. 195/1925*

காலம் : *இரண்டாம் இராசாதிராசன், யா. 2. கி.பி. 1165*

1. ...திரிபுவநச்சக்கரவற்த்திகள் ஸ்ரீ ராஜாதிராஜ தேவற்கு யாண்டு இரண்டாவதுதுந்டசோழவளநாட்டு ஆக்கூர் நாட்டு உடையார் திருநங்குபள்ளி உடையார் திருக்[கு] . . .

2. ருளுவித்த மூலபருஷை விநாயகப்பிள்ளையாற்கு நித்தத் திருப்படி மாற்றுறுமுதுக்கும் கோயிற்றமப்பேறாய் வருகிற அங்காடிப்பாட்டமும் திர்த்த அங்காடிப் –

3. ப்பலபணி நிமந்தக்காறர் தங்கள் நிமந்தத்தில் அட்டுக்கா[க] ஒருபடியும்...படியும் கழித்து திருப்படிமாற்றுக்கு இவர்கள் குடுத்தபடியும் கைக்கொ –

4. ...சி நாநாழியும் கறியமுது முன்று[பா]கத்துப் பந்நிருபலமும் [எ]ட்டுத் தி... சந்திராதித்தவற் செல்லக்கடவதாக சம்மதித்து விட்டது இதுக்கு விடு

## 20:13

இடம்: *கோயில் வெளியே பிராகாரக் கிழக்குச் சுவரில் பதித்துள்ள உதிரிக் கற்கள். இ.க.ஆ.அ. 196/1925*

காலம்: *இரண்டாம் இராசாதிராசன், யா. 2, கி.பி. 1165*

1. ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீ த்ரிபுவனச்சக்கரவத்திகள் ஸ்ரீ ராஜாதிராஜ தேவற்கு யாண்டு இரண்டாவது ஜயங்கொண்ட சோழவளநாட்டு ஆக்கூர் நாட்டு உடை[ஐயார்திருநன்னி]ப[ள்ளி] உடையா[ர்] திருமடைவிளாகத்து
2. தெற்கில் [திரு] வீதியில் கடம்புடையான் குலையாத செ[ல்]வ னான ஆண்டார் எடெதிரிட்டாருக்கு ஆண்டார் முடமுடையார் கு. . .துத்து அநுப[வித்]துவருகிற இயற்பகை [ஸ்ரீ]வல்லவர் பக்கலும் எடுப்புவிலைகொண்டு ஸ்ரீபண்டாரத்திலே
3. எழரைக்கும் கோ[யி]ல் இறையாய்வருகிற இந்நெல்லு இருகலநே இருதூணி அறுநாழி உ[ரி]க்கும் பெரியதேவற்கு நாற்பத்தில் இரு[பத்து]நாலினானா...யாய் வருகிற உள்ள இந்நெல்லு இருநூறுக்கு
4. பொலிசையால் உள்ளுது இறைக்குடலாக கல்வெட்டித்திக் கொள்ளக் கடவதாக எழுத்திட்ட பிரமாணத்துக்கு கோயிற்கணக்கு திதி$_3$ஆடு உடையான் ...பொலிசையால் உள்ளுது இறைக்குடலாலா

4அ. [சில வரிகள் சிதைந்துள்ளன]

5. சுந்தரன் எழுத்து ஸ்ரீகாரியம் குமரக்கிழவன் வில்ல[வன்] மூ[வேந்]த [வே]வ[ளா]ன் எழுத்து திருமடைபள் ...காணி[யு]

## 20:14

இடம்: *கோயில் மண்டபம், வடக்குச் சுவர், இ.க.ஆ.அ. 189/1925*

காலம்: *இரண்டாம் இராசாதிராசன், யா. 3, கி.பி. 1166*

1. ஸ்வஸ்தி த்ரிபுவநச்சக்ரவத்திகள் ஸ்ரீ ராஜாதிராஜ தேவர்க்கு யாண்டு முன்றாவது கற்கடக நாயற்று அப...
2. ஆக்கூர் நாட்டு உடையார் திருநந்நிபள்ளி உடையார் கோயிலில் முலப்ர்த்தி ஆதித்தசண்டேடேவரருளால் இக்கோயிலில் ஸ்ரீமாஹேச்$_2$ வரக்கங்காணி – செய்வார்களும் ஸ்ரீகார்யஞ்செய்வாரும் கோயில் கணக்கரும் இவ்வூர் [அநுலோம]காரனாந கண்மாளரில் திருச்சிற்றம்பல முடையந் ஸ்வேதவநப்பெருமாளாந ராஜநாராய[ண]ஆசார்யநுக்கும் நாயகந் திருநடம்புரிஞ்சாநாந மூலபருஷை ஆசார்யநுக்கும் ராஜேந்த்ரசோழநல்லூரும் திருநந்திபள்ளியும் மரத்தச்சக்காணி
4. ட்டந் சிரா[ளா]மநாந திருநந்திபள்ளிப்பெருந்தச்சநுக்கு கணவதி சங்கரதேவநாந ராஜேந்த்ரசோழப்பெருங்கொல்லநும் தட்டாரில் கல்பகந்

தாழியாந அஞ்னூற்றுவப்பெருந்தட்டாநும் கல்தச்சரில் திருவகத்திபள்ளி

5. அதியநாயகப்பெருந்தச்சநுக்கும் அருமொழிதேவந் உடையாநாந தழுவக்குழைஞ்சப்பெருந்தச்சநுக்கும் இந்மையதெருவாந் ஆண்டவ[ன் தே] சாந்திரச் சிற்றம்பலப் – பெருந்தச்சநுக்கும் நம்பிகோழியாந திருமாளிகைப்பெருந்தச்நுக்கு[ம்]

6. அம்பலக்கூத்தந் பெரியானான நாலாயிரப்பெருந்தட்டாநுக்கும்...

## 20:15

**இடம் :** *கோயில் கருவறை, தெற்குச் சுவர், இ.க.ஆ.அ. 188/1925*

**காலம் :** *வீர கிருஷ்ணதேவமகாராயர், சகம் 1439, யா. கி.பி. 1517*

1. ஸுபமஸ்தி ஸ்ரீ கணாதிப தயே நமஹ நமஸ்துங்க [ஸி]
2. ரச்$_2$வாமிபித சந்திற சாமர [சாரவே] த்ரைலோக்யநகர[ர]ம்பமுல –
3. ஸதம்பாய சம்புவே ஸுபமஸ்த ஸ்வஸ்தி ஸ்ரீ விஜயாத் –
4. புத சாலி[வாஹ]ந ச[க] வருஷம் 143[9]ல் மேலச் செல் –
5. லாநி[ன்ற ஈ]ச்$_2$வர ஸம்வ[த்ஸ]ரத்து புஷ்யஸ்பிய பௌர்ணமை ஸ்ரீம
6. ந் மஹாராஜாதிராஜபரமேமேவர ஹரியாய விபாடந் பா–
7. ஷைக்குத் தப்புவராயரகண் யவனராச[ஸ்த்] ஆபனாசாரிய ப்ரதா–
8. பருத்தர கெஜபதி ஸப்தாங்கஹரண ஸ்ரீ விரக்ரிஷ்ணதேவராயம–
9. ஹாராயர் சோழமண்டலத்து விஷ்ணுஸ்தாநம் சிவஸ்தாநம் முதலான
10. தேவஸ்தானங்களுக்கு சோடி அரசுபேறு சர்வம்[மா]ந்யமாக விட்ட தன்–
11. மஸாதன இராசயஸம் ஸ்ரீமும் விஜயன்நகர பட்டணத்தில் இருந்து பூறுவ
12. திக்குவிசை[ய]யாத்ரெ ஆக புறப்பட்டு உதைய கிறித்துற்கமும் ஸாதிச்சு திருமலை
13. இராகுத்தமராயனையும் பிடித்துகொண்டு வினிக்கொண்டை னாகார்–
14. ற்சினகொண்டை வெல்லமுகொண்ட கொண்டவீடு கொண்[ட]ப்பள்ளி இராசமவேந்திறாபுரம் முதலாகிய து[ர்க]ங்களுங் கட்டிக்கொண்டு பர்தாபருத்தி[ர] கெசபதி

16. குமாரன் விரபத்ரசென்னஅகெசபதி ப்ரதா[ன] பூபதி பர்கலாதன் சிரச்சந்திரன் மல்லு[க்]கானன்
17. உத்தண்டகானன் முதலான பாதிறசாமந்தர்[க]ளையும் சிவிக்கிறமமாகப் பிடித்துக்கொண்ட–
18. [ரு] ப்ரதாபருத்திர [கெ]சபதியையும் முறியக்குத்தி சிங்காத்திரிக்கு எழுந்தருளி பொட்டனூரி[ல்]

# 38. குன்றப்பாளையம் நடுகல் கல்வெட்டு

கு. பாபு, ஈரோடு

**இடம்:** சேலம் மாவட்டம், ஓமலூர் வட்டம், குன்றப்பாளையம், பெரியவடகம் பட்டியிலிருந்து கிழக்கே ஒரு கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது.

**காலம்:** கி.பி.14 - 15ஆம் நூற்றாண்டு

**செய்தி:** சிலைக்கோயில் என உள்ளூர் மக்களால் அழைக்கப்படும் நடுகல்லில் கல்வெட்டுப் பொறிப்பு வீரன் மற்றும் இரு புறங்களில் இரு பெண்களின் உருவமும் காணப்படுகிறது. வீரனின் இடுப்பில் குறுவால் ஒன்றும், அவனது இடது கையில் வில்லும், வலது கையில் அம்பும், அணிகலன்களும் காணப்படுகின்றன கல்வெட்டு சிதைந்துள்ளது. கண்ணசயி வேளவன் எனக் குறிக்கப்பட்டுள்ளது.

1. . . . ழுரில்
2. திரும . . . கண்ண
3. சயிவேளவன்



# 39. திருச்செந்தூர் வள்ளி குகைக் கல்வெட்டு

த.த. தவசிமுத்து, ஆறுமுகநேரி.

**இடம்:** *தூத்துக்குடி மாவட்டம், திருச்செந்தூர் முருகன் கோயில் அடுத்துள்ள வள்ளி அம்மன் குகையில் 4.5X1.5 அடி அளவுள்ள பலகைக் கல்.*

**காலம்:** *சகம் 1580 கி.பி. 1656*

**செய்தி:** *இக்குகை மணற்கல்லால் ஆன பெருங்கற்காலக் குடைவரைத் தாழ்வரையாகும். இக்குகை வள்ளி குகையாகக் கருதப்படுகிறது. முருகனை மணம் முடிக்க வள்ளி சிவபெருமானை இலிங்க வடிவமாய் வழிபட்ட இந்த இடத்தில் சகம் 1580ல் கிணறு மண்டபம் முதலியவை ஏற்படுத்தப்பட்டு தினசரி வழிபாடு நிகழ்ந்து வருகிறது. முத்தைய ஜோசியன் என்பவர் இதற்கு அரசனிடம் அனுமதி பெற்று ஏற்பாடுகள் செய்தார் என்ற செய்தி சொல்லப்படுகிறது.*

1. முருகன் அருளால் நட
2. ந்து வருகின்றன கந்
3. த கடவுளாருக்கு வல்
4. லியை மணம் செய்ய வே
5. னுமென்று சம்புவை
6. ஆறாகித்தனள் உடனே லிங்
7. க சுரூபிலாயினர் லிங்
8. க விழவின்றாகிய சிவபெரு
9. மான் சதாதேவனாய்ப்
10. பூஜை செய்யும் இடத்துக்
11. கு வல்லி ஒலிக்குள் மவ
12. ள் நாடெனபெயர் தங்கிய
13. இந்த தலஸ்தலத்தில் ஸ்தல புறா
14. ணத்தில் இருக்கின்றன [இ
15. தை] 1580 [வருசத்தி]ல் திருச்
16. செந்தூரில் றாஜர் கல்
17. பிச்சகட்டளை ஏற்படுத்

18. திய சமையம் முத்தை
19. ய அவதானியை கல்
20. பிச்சுப் பாத நமஸ்காரம்
22. செய்ய ஏற்படுத்தினர்
23. அவறால் பிறிதிக்கு கொ
24. ண்டு வந்த இதை [மேற்படி] வ
24. கையறாகள் முத்தய்ய
25. ஜோஸியன் கந்த
26. ப்பிறவு உத்தரவின
27. ம்படி யிந்தப்படிக்கி
28. கிணரு சகல மண்ட
29. பம் யிவை தயாநி
30. தி முருகன் அருள
31. ால் நித்திய பூசை
32. யும டைந்து வருகி
33. றது 4 உ வைகாசி
34. . . .



# 40. இலுப்பூர் கல்வெட்டு

**க. கருப்பையா, சென்னை.**

இடம்: புதுக்கோட்டை மாவட்டம், இலுப்பூர் வட்டம், ஶ்ரீவாசிநாதர் கோயில் திருச்சுற்று வாயிலின் வலதுபுறம் நடப்பட்டுள்ள கல்.

காலம்: கி.பி.16-17 ஆம் நூற்றாண்டு

செய்தி: கல்லின் ஒரு புறத்தில் தன் கழுத்தைத் தானே அறுத்துக் கொள்ளும் ஒருவரின் புடைப்புச் சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது. மறுபுறம் கல்வெட்டுள்ளது. கீழைக்குறிச்சி ஊராளிகளில் ஒருவரான அழகன் கோனாட்டுப் பரையன் ஆதி இதனைச் செய்தளித்துள்ளார்.

கல்வெட்டு

1. கீழைக்குறிச்சி ஊராளிகளில்
2. அழகன் கோனாட்டுப் பரைய –
3. ன் ஆதி தன்மம் உ

# 41. கொத்தனூர் பெரியநாச்சியம்மன் கோயில் கல்வெட்டு

**வி.ப. யதீஸ்குமார், பாண்டிச்சேரி**

**இடம் :** *திருப்பூர் மாவட்டம், தாராபுரம் வட்டம், கொத்தனூர், பெரிய நாச்சியம்மன் கோயில்*

**காலம் :** *கலி 4895, சகம் 1716, கி.பி. 1794*

**செய்தி :** *பெரியநாச்சியம்மன் கோயிலுக்கு கருவரை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் ஆகியவற்றை கத்திபாரான் வேணா பாப்பானச்சாரி செய்தமை.*

1. கலியுகசகார்த்தம் 4 8 9 5
2. சாலிவாகன 1716 சகாப்தம்
3. மேல் செல்லாநின்ற ஆன –
4. ந்த வருஷம் சித்திரை மாசம் பெரி
5. யனாச்சி அம்மன் திருப்பணி
6. கெற்பகிரகம் அர்த்தமண்டபம்
7. மகாமண்டபம் பூந்தேர் பொ –
8. ன்னுசல் கத்திபாரன் வேணா பாப்பானசாரி
9. உடையான் உபயம்



# 42. முத்தரையர் செப்பேடு

செ. இராசு, ஈரோடு

**இடம்:** கோவை மாவட்டம், உடுமலைப்பேட்டை வட்டம், கணியூர்

**காலம்:** கலியுகம் 4774:சகம 1596, கி.பி.1673.

**செய்தி:** முத்தரையர் தோற்றம், பெருகி வளர்ந்த வரலாறு, குடியேறிய இடங்கள், ஆட்சி செய்த இடங்கள், செய்த திருப்பணிகள் இவைகளை விரிவாகக் கூறி அவர்கள் அனைவரும் கூடி பழனியில் மடம் ஒன்று கட்டி அதற்குக் கொடுக்க வேண்டிய சமுதாய வரி முதலியவைகளை இச்செப்பேடு விளக்குகிறது. பழனியில் ஒன்று கூடிய வன்னிமுத்தரசர் முத்தரையர்கள் இனத்தைச் சேர்ந்தவர். கி.பி. 1674ஆம் ஆண்டு திருவாவினன்குடிக்குக் கீழ்புறம், சரவணப் பொய்கைக்குத் தென்மேல்புறம் மடம் ஒன்றைத் தங்கள் பெயரில் உருவாக்கினர். வேலாயுத உடையான் மகன் கொளந்தைவேலு உடையான் வசம் மடத்தை நிர்வாகத்துக்கு அளித்தனர். முத்தரையர்கள் அனைவரும் பெரிய ஊருக்கு 10 பணமும், சிறிய ஊருக்கு 5 பணமும் கொடுக்க வேண்டும். பண்ணையத்துக்கு 2 பணமும், பயலாள்கள் ஒரு பணமும் கொடுக்க வேண்டும். திருமணத்திற்கு மாப்பிள்ளை வீடும் பெண் வீடும் இரண்டிரண்டு பணம் கொடுக்க வேண்டும். தேருக்கு ஒரு பணம் கொடுக்க வேண்டும். குற்றத்திற்கு விதிக்கும் தண்டனைப் பொருளில் மூன்றில் ஒன்று மடத்திற்குக் கொடுக்க வேண்டும். மடத்தில் பரதேசிகட்கு உப்பு, ஊறுகாய், நீராகரம் கொடுக்க வேண்டும். அடியார்கட்கு அன்னமிட வேண்டும் என்று விரிவாகச் செப்பேடு எழுதி கொளந்தைவேலு உடையான் வசம் கொடுத்தனர். இச்செப்பேட்டு வாசகம் எழுதியவர் இராமசாமிக் கவிராயர் என்பவர்.

1. உ வைய்ய நீடுக மாமளை மன்னுக மெய் விரும்பிய அன்பற் விழங்குக சைவ நன்னெரி தாந்தழைத்தோ
2. ங்குக தெய்வ வெண்திரு நீறு சிரக்கவே, கறுணைபொழி திறுமுகங்க ழூறும் வாழி கரகமல பன்னிரெண்டு கைவேல் வ
3. ாழி யிருசரண மென்றலைமேல் னாழு மோங்க யிந்திரபதவிக் கப்பாலும் யினிதும் வாழி அறுள்பரவி அமரற்சிரை மீட்
4. டேயாண்ட ஆரிரெண்டு திருநயனத் தழகும் வாழி மருவணியும்

பைங்கடப்பந் தாறும் மாற்பும் வாழி பரிமயில் சேவல் கெ

5. ாடியும் வாழி வாழி, அடைந்தவற் துணைவா வாழி அடயலற் கரியாய் வாழி மடந்தைதன் மைந்தா வாழி மாதவன் மறுகா வாழி

6. திடம்புனை வேலா வாழி தேவறா றுயிரே வாழி படற்ந்தபோற் அசுரர் கூற்றன் பறமனே வாழி வாழி, நன்னெரி முகமும் வாழி நா

7. தமும் முடியும் வாழி பன்னிறு சுரமும் வாழி பாதபங் கயமும் வாழி கன்னிமாற் றெழுவற் வாழி கதியொடு பழனிவாழி யென்னருள் வினை

8. யை நீக்கும் யிழையவன் வாழி வாழி, ஶ்ரீபுவன தகன பறமேஷ்பற குமாறன் அமறர்சிரை மீட்ட தேவற்கள் தேவன் தெய்வ

9. லோக னாயகன் அகிலாண்ட கோடி பிரமாண்ட னாயகன் கோகநகனைச் சரசமாடி குட்டிக் குடுமியை நெட்டி போக்கி

10. கோல விறுமபதங் கொடுத்த குமாற கெம்பீறன் கொக்கறுவரை யாழி கொட்ட றாவுத்தன் வக்கிரமிடு அசுரேசற் வட்ட

11. நீரொப்ப உக்கிர மயிலேரி வரும் உத்தண்ட தீரன் பக்கறப் பகட்டறக்கர் பட்டிடப்படக் கழுத்தில் கொக்கரித் துடல் கிழித்த குக்குட

12. க் கொடிக் குமாறன் கூளி கொட்டக் கூகை பசாசுகள் தொக்க நிற்த்த தாழமொற்ற சூரன் மாழவதற்கு பாரிய நீடிய கச்சை

13. கட்டி பாற வேலெடுத்த சேவுக தீரன் அசுரற் குலைகாறன் அமறாபதி காவலன் தோடு செறி காதினன் தோகைமயில் வா

14. கனன் சீதரன் றிருமருகன் சிவசுப்பிரமணியன் சண்டப் பிரசண்டன் அன்டற்க் கொரு மிண்டன் ஆறாறு நூறாரு அஷ்டமங்

15. கலம் ஆவிநன்குடி பன்றிமலை பூம்பரை பழனிமலை காவலன் யிடும்பன் மலையென யீராறெனும் பள்ளி யி

16. லங்கும் வைகாபுரி நாட்டுக் கிறைவன் பத்திப் பிரியன் பக்த வச்சலன் பார்பதி புத்திரன் சிவசுதகணபதி விக்கின விநாயக [ச] கோதர

17. ன் யெல்லாத்தேவர்க்கும் வல்லவறாகிய ஶ்ரீவீர பழனிமலை வேலாயுத சுவாமியார் திருவருள்படிக்கி வீரவாகு தேவராுளிய

18. பாடல், சுப்பிரமணிய ஸ்தலமாகிய திருச்செந்தூர் திருப்பரங்குன்றம் சீருலாவிய திருவாவினன்குடி திருவேரகம் திரு

19. ச் சோலைமலை திருக்கழுக்குன்றம் பிரப்பதியாகிய ஆறு தலத்திலும் யெழுந்தருளி மகாபூசை கொண்டருளா நின்ற சுப்பிரமணிய

20. சுவாமியார் திருவருள்பெற்ற தமது அடியார் பக்தசனமாகிய பேருக்கு தலத்தில் எழுந்தருளிய திருமுகமாவது சுகஸ்திரிமன்

21. மகாமண்டலீசுரன் அரியர் ராயர் தள விபாடன் பாஷைக்கித் தப்புவராய கண்டன் மூவராய கண்டன் கண்டநாடு கொண்டு கொண்

22. டநாடு கொடாதான் பூர்வ தெட்சன பச்சிய உத்தர சமுத்திராதிபதி யெண்மண்டலமுந் திரைகொண்டருளிய ராஜாதிராஜன் ரா

23. ஐ பரமேசுபரன் ராஜப் பிரதாபன் ராஜமார்த்தாண்டன் ராஜகெம்பீரன் மறைபுக்கார் காவலன் அசுபதி கெசபதி நரபதி நவபதி நவ

24. கோடி நாராயணன் வங்களர் சிங்களர் சீனகர் சோனகர் ஆரியர் பப்பரர் ஒட்டியர் மதங்கர் மாளவர் மலையாளர் கொங்கர்

25. கலிங்கர் துலுக்கர் கன்னடியர் சத்திரியர் முத்திரியர் வசியர் மறாஷ்டவர் யென்னப்பட்ட பதினெண் பூமியும் யேழு தீவு சூழ்ந்த

26. அன்பத்தாறு தேசாதிபதியான சோழமண்டலப் பிரதாபனாசாரியார் பாண்டிய மண்டல பாவனாசாரியார் சேரமண்டலஞ்சீப

27. னாசாரியார் தொண்டமண்டலம் சண்டப் பிரசண்டனாசாரியார் பறாபரமாகிய பறமேஷ்பறன் தராதலம் படைக்கத் தாநினைந்தருளி

28. பறாபறத்தில் சகலமு உண்டாக்கி நடந்த வருகிற காலத்தில் றாச சத்ரு பத்திரிய மதிகமாயி கெசமுகாசூரநிங்கிரவன் தெய்வலோ

29. கத்திலே வந்து தேவேந்திரன் முதலான தேவ றிஷிகளையும் துறத்திவிட்டு தெய்வலோகத்தையும் கட்டிக்கொண்டிருந்த ப

30. டியினாலே தேவேந்திரன் தேவறிஷிகளுங் கூடி கயிலாச கிரியிலே வந்து பறமேஷ்பறனிடத்தில் முரையிட்டார்கள்

31. அதற்குப் பயப்படாதீ[ர்]கழென்று அபயஸ்த்தங் கொடுத்து கெசமுகா சூறனைச் சங்கரிக்க சிங்காறத் தோப்பிலே கணபதி பிறந்து

32. யுத்தத்தில் கிசமுகாசூறனை தன்னுடைய கொம்புனாலே குத்தி செயம்பண்ணி பெரிச்சாழி வாகனமாக்கி யேரிக்கொண்டு கண

33. பதி வருகிறபோது முன் பார்பதி சாபத்தினால் பாம்பாயிருந்த மகாவிஷ்ட்ணு விக்கிநேஷ்பறனை கண்டபோது சாபமு நீங்கி

34. யபோது மகாவிஷ்ட்டுணுவும் பிள்ளையார் னோம்பு னோக்கி செய்தார் ரெண்டாவது தக்கன் வேழ்வியை யழிக்க அகோர வீரபத்தி

35. ரன் பிறந்தாற், மூன்றாவது சூறபற்மாவை செயிக்க சுப்பிர மண்ணியர் பிறந்தார். தாருகாசூரனையும் சிங்கமுகாசூறனையும் வதைத்து

36. சூறனுடைய சரீறத்தை வேலாயுதத்துனாலே பிழவை செய்து ஒரு பிழவை சேவலும் ஒரு பிழவை மயிலு வாகனமா

37. க யேரிக்கொண்டு தேவற் சிரையும் விடிவித்து தெய்வேந்திரனுக்கு பட்டாபிசேகமும் சூட்டி வைத்து கயிலாசகிரிக்கி வந்து

38. விட்டார் னாலாவது தெய்லோகத்திலே தேவேந்திரன் முதலான தெய்வ ரிசிகழு முனியீஷ்பற்றும் கிண்ணறர் கிம்புறுடற் அ

39. ஷ்ட்ட வயிறவற் சித்தி வித்தியாதறர் ஆயிறத்தொரு சத்திகள் கெருட

காந்துருவற் அஷ்ட்டதிக்கு பாலகற் முதலான தேவற்களு

40. ங்கூடி சுவாமியானவற் திரிபுர தாண்டவம் சங்காரமாகிய பரமேஷ் பரனுக்கு கயிலாசத்திலே திருத்தேற் ரெழுந்தரு

41. ளி திருவலப் பிரகாரமாக வருகையிலே கெண்டபேறண்டமாகிற பட்சி சகல மிருகங்கழையும் வதைத்து சாப்பிட்டுக் கொண்டு

42. சிங்காறத் தோப்பையும் திருநந்தவானத்தையும் பூங்காவனமெல்லாம் அழித்துப்போட்டு பறமேஷ்பறனுடைய திருத்தேருக்கு வழிவி

43. டாமல் முன்னமே நின்று வழிமறித்துச் சிறகால் மரைத்துக் கொண்டது அதுகண்டு சகல தேவர்களும் பயந்து பரமேஷ் பரனுடை

44. ய திருத்தேற் மரபிலே வந்து நின்றார்கள் அப்பொழுது பரமேஷ்பரன் பாற்த்துப் பயப்படாதிருங்களென்று அபையஸ்தங்

45. கொடுத்தாற், அந்தப் பட்சியின் பேரிற் கோபமாய்த் திருத்தேரை நிறுத்திக்கொண்டு நிற்கையில் பரமேஷ்பரனுடைய வலது

46. திருத் தோளிலே ஒருவேற்வை கண்டுது அந்த வேற்வையொரு முத்தாய்த் திரண்டுது பரமேஷ்பரி கண்டு அந்த முத்தைப் பூமியின்

47. கண்ணிலே வாங்கிவிட்டாள் அந்த முத்து யிரு பிளவையாக வெடித்து யிரண்டு வன்னிமுத்தரசர் பிறந்து பின்குடுமி பூ

48. நூலும் வேலும் வில்லும் கட்டின கச்சையும் உருவின மந்திர வாளும் பதினெட்டாயுத முஸ்த்தீப்புடனே வந்து சுவாமியி

49. னுடைய திருப்பாதத்தைத் தொழுது நின்றார்கள் நின்ற அடியார்களைப் பார்த்து வாறும் பிள்ளாய் பெரிய வன்னி முத்தரச

50. னே சின்ன முத்தரசனே யிந்த திருத்தேருக்கு வழிவிடாமல் முன்னமே நிற்கிற பட்சியை வெட்டிச் சம்மாரஞ் செய்து

51. கொண்டு வாருங்களென்று விடைகொடுத்தார். அந்தப் பட்சியுடனே யுத்தஞ் செய்து சிரகற் வெட்டி யிரு துண்டாக்கி யிரண்டு பே

52. ரும் யிரண்டு அம்பு முனையிலே கோற்த்துத் தூக்கிக்கொண்டு வந்து சுவாமியினுடைய திருப்பாதத்துக்கு முன்னமே வைத்து வ

53. ணங்கி நின்றார்கள் நின்ற அடியார்களைப் பார்த்து அவர்கள் பேரிலே சந்தோஷப்பட்டு உங்களுக்கு யென்ன வரம் வேண்டு

54. மென்று கேட்டார் பூமியின் கண்ணிலே யெங்களுக்கு ராச்சிய பரிபாலினஞ் செய்துவரும்படி கட்டளையிட வேணுமென்று

55. கேட்டுக் கொண்டார்கள். அந்தப்படியவர்களுக்கு வரமுங் கொடுத்து விருது பவளக்குடை பட்சைக்குடை முத்துக்குடை வெள்ளை

56. க்குடை சிவப்புக்குடை வெள்ளைக்குதிரை பல்லக்கு வெண்சாமரை புலிக்கொடி வாடாத மாலை வலம்புரிச்சங்கு வாத்தியமுப்

57. பத்திரண்டும் பஞ்சவர்ன்ன விருதுங் கொடுத்துச் சுவாமி கயிலாசத்துக் கெழுந்தருழி யாகித் தேவேந்திரனுடனே தெய்வலோக

58. த்துக்குப் பெரிய வன்னி முத்தரசனை பாதுகாவலாயிருமென்று கூட்டியனுப்பினார் அதின் பின்பு திருவாரூருக்கு வந்து தியாகரா

59. சரையுந் தரிசனஞ்செய்து திரிச்சிரகிரியில் சிவந்தீசுபரரையுஞ் செம்புலிங்கத்தையும் தரிசனஞ் செய்துகொண்டு பெ

60. ரிய வன்னி முத்தரசனுந் தேவேந்திரனும் அமராபதிப் பட்டணத்துக்குப் போனதின் பிறகு சின்ன வன்னி முத்தரசனை ஸ்ரீரங்கத்தி

61. லேகுரநாயகருக்குப் பாதுகாவலாயிருமென்று அனுப்பினார். அப்படிப் பாதுகாவலாயிருந்து வரும் நாளையிலே கோப்பு

62. லிங்கராசாவின் வம்சத்திலே ஒரு பெண்ணை கலியாணஞ் செய்து கொண்டான் அவன் வயிற்றிலே ஒரு சின்னனென்கிற

63. வன்னி முத்தரசன் பிறந்தான் அவன் வயிற்றிலே சென்னியவள நாடனென்றும் சேமனென்றும் அகளங்கனென்றும் ராசாக்கன்

64. நயினாரென்றும் நல்ல நாச்சியாளென்றொரு பெண்ணும் நாலுபேர் வன்னி முத்தரசர்கள் பிறந்தனர். நால்வருஞ் சோழராசா

65. வினிடத்திலிருந்தார்கள் அப்போது சோழராசாவுக்கும் பாண்டியராசா வுக்கும் யெல்லைப் பிசகுச் சண்டையானபோது யிந்

66. த நால்வரும் பாண்டியன் படையை முறிய வெட்டி மதுரைமட்டுந் துரத்திவிட்டார்கள் யிவர்கள் பராக்கிரமத்தைக் கண்டு பாண்

67. டியராசன் தன்னுடைய தானாபதிகளை யனுப்பி வைத்து நல்ல நாச்சி யாளென்கிற பெண்ணைப் பாண்டிய ராசனுக்குக் கலியாண

68. ஞ் செய்து கொடுத்தார்கள். பாண்டியராசன் தனக்கடங்காத சீர்மையும் அழகிய சொக்கத் தம்பிரானென்கிற பட்டத்துப் பரியை

69. யுங் கொடுத்தான் அந்தப்படிக்கி யடங்காத பேர்களை வெட்டிச் செயங்கொண்டு ஆண்டு வருகிர நாளையிலே பாண்டியராசா

70. யிவர்கள் நால்வரையும் பார்க்கவேணுமென்று அளைத்தார். அவர்கள் யெண்ணவொண்ணாத சேனையுடனே அழகிய சொக்கத்த

71. ம்பிரானென்கிற குதிரையின் பேரிலேரிக்கொண்டு வந்து கண்டார் யிவர்களுக்கித்தனை பராக்கிரமமானால் நமக்கு யிவர்கள் அ

72. டங்கார்களென்று பரியைப் பரித்துப் பந்தியில்க் கட்டினான் பரியைப் பரித்த பாண்டியன் மதுரையை நான் வன்னிமுத்தரசன் பட்

73. டம்பகலிலே வெட்டிச் சிறைகொள்ளுவேனென்று பந்தியில் புகுந்து பரியின்மேல்க் கொண்டுவருகையில் பரியின் பிற

74. கே படையெடுத்துவந்த பாண்டியன் படையை வெட்டிச்

செயங்கொண்டு வலது தோளிலே வந்த வன்னியப் பிரதாபன்

75. மூவர்முடி காவலோர் வல்லமும் தஞ்சையும் வழப்பமுடையோர் சென்னியுங் கொல்லியுஞ் சிகையுமுடையோர் ஆனைக்

76. கண்ணும் வளநாடும் அரசுமுடையோர் கயிலையங்கிரி காவலோர் இராமநாத தேவரையும் ஓராச்சென்று பிடிப்போர் வல்லா

77. ழர் தேவரையும் வாளரங்கம் பொருதுவோர் பாண்டிய ராசனுக்குச் சம்மந்தக் குடியோர் யேழாயிரம் பண்ணையிலரசாளும்

78. செப்புப் பரிப் பாண்டியன் மழுக் குதிரையேறித் திலுப்பின வன்னி முத்தரசர் சிவகிரியில் அரசாளும் திருவாரூரில் ஆயிரக்கால்

79. மண்டபங் கட்டிவைத்த வன்னிமுத்தரசர் வேப்பங்குளத்தில் அரசாளும் வன்னிமுத்தரசர் ஸ்ரீரங்கத்தில் யேகாதெசி சொக்கவா

80. சல் திருநாளன்றைக்குப் பதினெட்டாழ்வாருக்கு மோட்சங் கொடுத்த ரெகுநாயகர் வந்திரங்க மண்டபங் கட்டி வைத்தவன்னி

81. முத்தரசர் தனிக்கோடிக் காவலோர் சூரிய வம்மிசத்தோர் திருப்பதி காவேரி கொல்லிமலை கனவெள்ளாறுடையோர்

82. கவிதைக்கு மிண்டர் சூரிய வன்னியர் மறையுக்கார் காவலோர் மலை குலிங்கினுங் கடல் கலங்கினு மனங்கயங்காதகண்டர்

83. அடைக்கலங் காத்து அரசு நிலையிட்ட வன்னியப் பிரதாபர் சென்னிவள நாடன் சேமனகளங்க ராசாக்கள் நயினார் யீளமுங் கொங்

84. கும் யாள்ப்பாணமும் யெம்மண்டலமுங் கொங்கு திரைகொண்டருளிய ராசாதிராசன் ராஜபரமேஸ்பரன் ராச தேவேந்திரன்

85. ராஜகெம்பீரன் யெழுபத்தேழு பாளையமுந் திறை கொ[ண்]டு துஷ்ட நிற்கிரக சிஸ்ட பரிபாலினஞ் செய்து விசைய நகரத்தில் வீ

86. ர சிம்மாசனத்தில் யெழுந்தருளிய மகாமன்னிய ராசஸ்ரீ பிரபிட தேவமகாராயர் சதாசவிமகாராயர் நரசிம்மராயர் ஸ்ரீரங்க

87. தேவமகாராயர் யிவர்கள் பிரதிவு ராச்சிய பரிபாலினஞ் செய்து செங்கோல் செலுத்தியருளா நின்ற காலத்தில் சொக்க

88. லிங்க நாயக்கர் திருமலை நாயக்கர் யிவர்கள் செங்கோல் செலுத்தி மதுரையம் பதியில் ஓதியுணர்ந்து ஒரு குடைக் குள்ளான்

89. டு வேதவொலியும் விளாவறா வீதியும் தபோதனர் மடங்களுஞ் சைவநெறியும் தரும சத்திரமும் சகல தருமங்களுக்குள்ளாய் நட

90. ந்து வரகுற சாலியவாகன சகார்த்தம் 1596ன் மேல்க் கலியுக சகார்த்தம் 4774ன் மேல்ச் செல்லாநின்ற

91. ஆனந்த வருஷம் தை மாதம் 3 தேதி சோமவாரமும் பூச நட்சேத்திரமும்

அமுத யோகமும் கூடிய சுபதினத்தில் கீழ்சமுத்திரத்துக்கு மேற்க்

92. கு சிதம்பரஞ் சீர்காளி கும்பகோணம் தஞ்சாவூர் திருப்பந்துருத்தி யிதைச் சேர்ந்த சோழவள நாட்டிலுள்ள வன்னி முத்தர

93. சரனவோ(ர்)களும் திரிசிரபுரம் வீமநாயக்கன்பாளையம் அல்லித்துரை அதவத்தூர் யெட்டரைகோப்பு அயிலாப்பேட்டை நவ்வலூ

94. ர் யிந்த யேழுநாட்டைச் சேர்ந்த வன்னிய முத்தரசரனவோர்களும் ஸ்ரீரங்கம் திருவானைக்காவல் உத்தமசேரி துரையூர் மங்

95. கலம் கரிகாலிநாடு யிதைச்சேர்ந்த வன்னிமுத்தரசரனவோர்களும் தென் சமுத்திரத்திற்கு வடக்கு கன்னிகுமரி திருக்குற்றா

96. லம் திருச்செந்தூர் சேது ராமநாதபுரம் காளையார் கோயில் சிவகங்கை திருப்புவனம் யிதைச்சேர்ந்த வன்னி முத்தரசரனவோ

97. ர்களும் திருப்பத்தூர் புதுக்கோட்டை பிரமலை முருங்கைநாடு தாடிக் கொம்பு பதினெட்டுப் பாளையப்பட்டிலுள்ள வன்னி முத்தரச

98. ரனவோர்களும் பாளையங்கோட்டை திருநெல்வேலி யேழாயிரம் பண்ணை சிவகிரி சேத்தூர் அணைத்தலை சமுசாபுரம் வேப்பங்

99. குளம் மதுரை யிதைச்சேர்ந்த பாண்டிய நாட்டிலுள்ள வன்னிமுத்தரசரன வோர்களும் மேல் சமுத்திரத்திற்குக் கிளக்கு கொ

100. ச்சி கள்ளிக்கோட்டை வண்ணார்க்காடு பாலைக்காடு கொல்லங்கோடு கொடுவாயி பாலைக்காட்டைச் சேர்ந்த முத்துவன்

101. னியரும் கோயமுத்துஊரு சேலம் சீறங்கப்பட்டணம் சென்னப் பட்டணம் கங்கோத்தி வெட்டுவாய்த்தலைக்குங் கிளக்

102. கு காவேறிக்கும் தெக்கு வுய்யக்கொண்டான்னாற்றுக்கும் வடக்கு சிந்தாமணி தேண்ணூற் ஆண்டுகொ

103. ண்டானாற்றுக்கும் மேற்க்கு யிராசகெம்பீர வளநாட்டிற் தொண்ணூத் தாரு கிராமத்தில் உள்ள முத்த

104. றசரும் விளாவறாவீதி வளநாட்டிற் றிருவாணைக்காவல் ஸ்ரீரங்கஞ் சீலிவழநாடு வடகரை வீறசி

105. ங்கி நாடு கண்டாரதித்தநாடு ஆலம்பாக்கஞ் சிவப்பிளையார் திருப்பந் துருத்தி மல்லப்ப முத்தரசன்

106. தையாக்கவுண்டன் ஆமூற் பறந்து வெட்டி வீறறாய தேவற் மருச்சிலவ காத்தானுக்கும் கிளக்கு கொ

107. ல்லிடக் கறைக்கும் வடக்குவளிப் பற்றுக்கும் தெக்கு வீசனம்பதி யன்பிலறியலூற் திருச்சினாப் பள்

108. ளிக்கும் கிளக்கு அறியமங்கலம் முருதன்கயூற்க்கு மேற்க்கு வுய்யம்க்கொண்டான் கரைக்கும் வடக்கு

109. காவேறிக்கும் தெற்க்கு ஆலத்தூற் கற்கண்டாற் கோட்டை கீள்க்குறிச்சி வுய்யக்கொண்ட வள

110. நாடு கண்டராதித்தநாடு ஆலம்பாற்க்கமான னேளுகரை நாட்டாற் திருவெள்ளாறு திருப்பங்கிலி

111. பாச்சலூற் விக்கலூற் செம்பியன்குடி யிலந்தைக் கோட்டம் உத்தமநல்லூர் மாலுபாக்கரை வள

112. நாடு விட்டபற்றுநாடு வெண்பாநாடு திருவெழ்ழறைநாடு கீள் வள்ளுவப்பநாடு மேல் வள்ளுவப்

113. பதநாடு ஆமூற்நாடு முசிறி கண்ணனூற் றறுபத்திநாலு கிறாமத்தில் நாலு கிறாமத்திலுள்

114. ள முத்தரசரும் செட்டிகுளம் கோட்பித்தூற் திருப்பட்டூற் தச்சங் குறிச்சி எதுமலை யிறங்குடி

115. துங்கான்துரை யூற்றுக்கரை மாதேவி மங்கலம் கரிகாலிநாடு தலைமலை தண்டலையலுக்கரை நா

116. டு அயிலூற் தொட்டியம் காடுபட்டி காட்டுப் புத்தூர் விமலை நாடு கொல்லிமலைக்கும் மேற்க்கு கோனூ

117. ற் சிந்தாமணி நாமக்கல் பறமத்தி வாளவந்திநாடு யிடையாரு சேந்தமங்கலந் தென்கரை னித்தவி

118. னோதவளநாடு குன்று சூள்ந்த குலிசை வளநாடுகளுக்கு வளநாடு சுடலைவளநாடு களுதூர்ப்பர

119. நாடு மதுக்கறைக்கு மேற்க்கு வேங்கலநாடு மணநாடு தலையநாடு தட்டயநாடு தேங்கறைநாடு

120. வைகாபுறிநாடு அண்டநாடு நல்லுருக்கநாடு பொன்குலுக்கிநாடு ஆனைமலைநாடு ஆருநாடு பா

121. லைக்காட்டுச்சேறி கொல்லங்கோடு கொடுவாய் கேறளதேசத்து முத்தறசரும் கொங்கு இருப

122. த்துநாலு நாட்டிலுள்ள முத்தறசரும் சோழ தேசத்தில் தறாசலப் பேட்டை நாட்டிற் காத்துக்

123. கோட்டை முத்தறச னல்லா முத்தறசன் மடந்தைபாக முத்தறசனாயிர முத்தரசன் மல்லப்

124. ப முத்தறசன் திருவாரூர் அம்மையப்பன் மொன்னையப்பன் ஆண்டியப்பனய்யன் சந்திலை

125. காட்டுப்பள்ளி திருவையாரு கடுவளிக்கும் கிளக்கு சிதம்பறஞ் சீற்காழி புள்ளிருக்கும் வே

126. ளூற் திருவிடைமருதூற் திருவலஞ்சுழி மன்னாற்கோயில்

பட்டுக்கோட்டை தானமநாடு வளுவா

127. டி சிதம்பறம் அறந்தாங்கி கோனாட்டுப் புலியன் பெறியான் அரையகுளம் பற்று வெள்ளாம்

128. பற்றுப் பேறாம்பூற் ராசசிங்க தேவறக்கலூற் சூரைக்குடி விறாளியூர் தேவற்பாக்கநாடு மணப்

129. பாறைநாடு மருங்கிநாடு துவறாபதிநாடு சேங்காறிநாடு கீள்ச் சேங்காறிநாடு கவிநாடு

130. சிவப்பாநாடு காறிநாடு களிக்காநாடு பிறான்மலை முருங்கைநாடு அஞ்சுநிலைநாடு கேரளவளசி

131. ங்கப்ப நாடு திருப்பத்தூர் நாறுத்தாமலைநாடு காநாடு கவிநாடு திண்டுக்கல் வெள்ளிப்பனை தாடிக்

132. கொம்பு பதினெட்டுப் பாளையப்பட்டிலுள்ள முத்தறசரும் பாண்டிவளநாடு மதுரை வைகைக்குத்

133. தெற்கு அறுப்புக்கோட்டை வன்னிமுத்தறசன் மந்தியோடை வளத்தா முத்தறசன் பனக்கிரு

134. ப்பு தீத்தான் முத்தறசன் மாதிறை அளக முத்தறசன் சந்தையூற் வீற முத்தறசன் பளிக்கு

135. கங்கை முத்தறசன்ம்பாளையம் பட்டியுடையாறேம்பல் விருதுக்கு வெட்டி வில்லூர்க்

136. காசக்குளம் முருக்காநாடு மாநாடு வறிசைநாடு றாமனாதபுறங் கீழ்க்கரைக் கமுதி தொண்டி திரு

137. வாடானை சாகிக்கோட்டை சிவகங்கை திருனெல்வேலி நாஞ்சிநாடு மற்றும் சேறம

138. மண்டலம் சோழமண்டலம் பாண்டிய மண்டலம் தொண்டைமண்டலம் மின்னான்கு ம

139. ண்ட முதலாகிய காசிக்கும் தெக்கு கண்ணியா குமரிக்கும் வடக்கு நாகப்பட்டணத்துக்கும் மே

140. க்கு கோளிக்கூட்டுக்கும் கிளக்கு அன்பத்தாறு தேசத்திலுள்ள முத்துவன்னியறும்

141. பழனித் தலத்துக்கு வந்து சுவாமி தெறிசினை செய்து திருவாவிநன்குடிக்கும் கீள்புறம் சறவ

142. ணைப் பொய்கைக்கும் தென்மேல்புறம் மடவாலையங் கட்டி வைத்து மடத்துக்கு வேலாயுத உ

143. டையாற் குமாறற் கொளந்தை வேலுடையாறுக்குத் தாம்பூற சாதினம் எழுதிக் குடுத்து மடத்தி

144. ல் நீறாகாறமும் உப்பும் ஊறுகாயும் மயேஸ்வர பூசையும் நடக்கும்படிக்கு பேறூறுக்குப் பத்து

145. ப் பணமும் சித்தூருக்கு அஞ்சு பணமும் முண்ணட்டுப் பண்ணைக்கி ரெண்டு பணமும் பயலாளுக்கு

146. ஒரு பணமும் கலியாணத்துக்கு மாப்பிள்ளை வீட்டுக்கு ரெண்டு பணமும் பெண்வீட்டுக்கு ரெண்டு பண

147. மும் சாதியில் குற்றா குற்றம் தீற்ந்த பணத்தில் மடத்தய்யனுக்கு மூன்றிலொரு பங்கும் தேற்

148. க்கு ஒரு பணமும் கட்டளயிட்டபடிக்கி புத்திறா பௌத்திரா பறம்பறிக்கை சந்திறாள் சூரியாள் உ

149. ள்ள வரைக்கும் நடத்திவரக் கடவோமாகவும் யித்தன்மத்துக்கு யாதாமொருவர் கொடாதிருந்தால்

150. நாட்டாற் மறித்து மங்கலமொதுக்கி வெங்கலம் அடகெடுத்துக் கொடுப்போமாகவும் யித்தற்மத்துக்கு யா

151. தாமொருவர் விகாதம் செய்து யில்லை போவென்று கடுத்துச் சொன்னபேற்களுக்கு கெங்கைக்கரை

152. யில் காறாம்பசுவைக் கொன்ற தோஷத்தில் போகக் கடவாறாகவும் தங்கள் மாதா பிதா

153. குருக்களைக் கொன்ற தோசத்தில் போகக்கடவாறாகவும் பஞ்சமா பாதகறாய்ப் போவாறாகவும் யித்

154. தருமத்துக்கு யாதாமொருத்தர் வாக்குச் சகாயம் அன்ன சகாயம் சறீற சகாயம் செய்த பேருக்கு

155. கொள்ளும் பலன் காசி விசுவநாதரையும் ராமலிங்கத்தையும் சொக்கலிங்கத்தையும் பழனி

156. யாண்டவரையும் சேவித்த பலன் பெறுவாராகவும் மஞ்சாங் கோப்பில் சமூகம் கூடி எழுதின பட்டயம்

157. எழுதினது ராமசாமிக் கவிராயர் ஆனந்தத் துரையே வாழி திருச்சிற்றம்பலம்

# 43. சேவூர் காளிக் கோயில் செப்பேடு

**சி. வீரராகவன், மங்கையர்க்கரசி,**
**விழுப்புரம்**

இடம் : கோவை மாவட்டம், திருப்பூர் வட்டம், சேவூர் திரு. அங்கப்பன் என்பவரிடம் உள்ள செப்புப் பட்டயம்.

காலம் : மைசூர் தேவராசுடையார், கலியுகம். 4842, கி.பி. 1741

செய்தி : திருப்பூர் மாவட்டம், அவினாசிக்குட்பட்ட சேவூரில் காளிக் கோயிலில் இடம்பெற்றுள்ள முத்துகுமார சித்தரை குலதெய்வமாகக் கொண்ட கைக்கோள முதலிகள் மேற்படி சித்தருக்கு அளித்த பட்டயம். "சிவமயம் கடவுள் துணை" என்ற வாசகம் முதல் பக்கத்தில் தலைப்பில் உள்ளது. சூரியன், சந்திரன் வடிவம் செதுக்கப்பட்டுள்ளன. இதன் கீழ் முத்துக்குமார சித்தர், கணபதியார், காளி, மயில் மீது முருகன் ஆகியவர்களின் வடிவம் கோட்டுருவில் அழகாகச் செதுக்கப்பட்டுள்ளன. முன்பக்கத்தில் 58 வரிகளும் பின் பக்கத்தில் 19 வரிகளிலும் செய்திகள் பொறிக்கப்பட்டுள்ளன. செப்புப் பட்டயத்தில் உள்ள செய்திகள் யாவும் எளிமையாகவும், பொருள் அறியும் வகையிலும் அமைக்கப்பட்டுள்ளன. விஜயநகர ராயர்களின் பின் மைசூரை ஆட்சி செய்த உடையார்களின் வம்சாவழிப் பட்டியல் உள்ளது. கொங்கு 24 நாட்டார்களும் எழுகரை நாட்டார்களும் இடங்கை வகையராக்களும் ஒன்று கூடி முருகன் அருள் பெற்ற முத்துக்குமார சித்தருக்கு பூசை புஷ்கரனங்கள் நடத்துவதென முடிவெடுத்ததைப் பற்றி இச்செப்புப் பட்டயம் எடுத்து இயம்புகிறது.

**முன் பக்கம்**

1. பூவுலகத்திலே கலியுசகாப்தம் நாலாயிரத்து எண்ணூற்று நாற்பத்து இரண்டு **4842**-ல் துந்திபி மார்கழி மாதம் [3] தேதி சுக்கிர
2. வாரமும் திரிதிகை புணர் பூச நச்செத்திரத்தில் கட்சி அண்ணாமலை முதலி மகன் முத்து குமாரசாமி நாயினார் ஆறு
3. காடு சேவூரில் திருப்பரணேரிக்கு முத்தலகு பாச்சிச் சிவலோக மேதினார் . . . ஸ்ரீமன் மஹாமண்ட –
4. லேஸ்வரன் அரிராய விபாடன் பாசைக்குத்தப்புவராய கண்டன் மூவவராய கண்டன் கண் –

5. ட நாடு கொண்டு கொண்ட நாடு கொடாதான் துலுக்கர் தளவிபாடன் துலுக்க மோகன் தவிர் –

6. த்தோன் யீட்டியர் தளவிபாடன் ஒட்டியர் மோகந்தவிர்த்தோன் ஒட்டியர் துலுக்கரை ஒட்டி ெ –

7. வன்றான் அஷ்டகிரி மட்டும் அரசானாளமன்னன் கோஷ்டம் பதினெட்டும் கொண்ட சிரு –

8. பாகன் துஷ்டனுக்கிரகன் கிஷ்யீபாலனன் தன்னுயிர் போல மன்னுயிர்க்கிரங்கும்

9. காராஜன் அறிவுக்கு அகத்தியன் பொறுமைக்கு பூமாதேவி குளிர்ச்சிக்குச் சந்திரன்

10. நிதிக்குப் பொன் வில்லுக்கு விசையன் சொல்லுக்கு தர்மன் மல்லுக்கு பீமன்

11. கொடைக்குக் கர்ணன் ராஜாதிராஜ பரமேஸ்வரன் இராஜ மார்த்தாண்டன் ராஜ கம் –

12. பீரன் ராஜ ரணசூரன் தேசமைம் பத்தாரிலும் ஜெயங்கொண்ட வாரகிய விசை மா –

13. நகரில் ரத்தினச் சிங்காசனத்திற்குக் காரணக் கர்த்தயாகி நரசிங்கராயர் வீரசந்திர

14. ராயர் விருப்பாச்சி ராயர் பிரபுட தேவராயர் மகாதேவராயர் மல்லிகாச் சுனராயர் கி –

15. ருஷ்ணராயர் அச்சுதராயர் சதாசிவராயர் வெங்கடபதிராயர் இரங்க ராயர் ஆணைகுந்தி

16. ராயர் மனு நீதி விபரமும் ஆறிலொரு கடமை கொண்டு ஒரு குடைக்கு கீழ் ராச்சிய ப –

17. ரிபாலனம் பண்ணியருளிய மகா ராஜனவர்களின் காரியப் பிரதான ராகிய மைசூரி –

18. ல் சாமராசுடையார் தெண்டிவீர ராசுடையார் நரச ராசுடையார் தேராகுடையார்

19. சிக்கு தேவராசுடையார் மகாராஜனவர்தன் கொங்கு தாரபுரம் சீமையைச் செங்கோ –

20. ல்ச் செலுத்துகின்ற சாலிவாகனன் கலியும் 4842

21. கணாவாயுக்குங் கீழ் வகிக்கா நின்ற சீமைமுகாசி ஆறு நாடு சேவூரில் ஸ்ரீ வெங்க –

22. டராயரையர் அரச்சில் குமார சோழியக் கவுண்டர் நீதி செலுத்தி கின்ற நாளில்

23. சுப்ரமண்யமூர்த்திக்குத் துணைவராகிய வீரவாகு வீரகேசரி வீரமயேந்திர –

24. ன் வீரமயேஸ்பார் வீரபுரந்தார் வீரராக்கதர் வீரமார்த்தாண்டர் வீரராந்தகர்வீ –

25. ரதீரர் நவவீரராகிய சிவன் மைந்தர் திருமேனி காவலர் எவரிலங்கிலும் நா –

26. விலங்காதவர் பட்டமானம் பழுதாக்காதவர் இட்டபரணேரி யிரங்காதவர்

27. வல்லா வென்ற வாசி வேணைக்காரர் பொய்த்தலைக்கு மெய்தலை கொடுத்தவந் –

28. தன்றுசர் காமாச்சி வாயுபுத்திரர் பஞ்சாட்சரம் பஞ்சவர்ன விருது, மஞ்சள் பாவாடை படை

29. யர், ருத்திராஷமாலிகாபாணர் அரிபூசை, குருபூசை, மயேஸ்வர புசையுள்ளவரில் வண்டை

30. மல்லரி முதல் 32 வாத்தியம் பெற்றவர் இயத்தப் படை சந்தரகாந்திப் பாவாடையும்

31. பஞ்ச வர்ணக்குடை பகல் பத்து உடையவர் அர்த்தனாரிக் குஞ்சமும் ஆயரும் பெற்றவர் ஆவ –

32. டி சேவடி திருவடி பெற்றவர் காஞ்சிபுரத்தில் கருமாரி நிலை கொண்டவர் சற்சன சுத்த சிவாச்சாரியந்

33. அசுரர் குல காலர் செருமுனைகண்டு பின்னடையாதவர் சென்ற திசை முழுதும் வென்ற தீரர்

34. செங்கை வடிவேலினர் சீர்பாத சேகரர் என்றும் மனுநிதி கெடாதவர் செம்பியன் மனமெச்சும் செ –

35. ங்குந்த வீரர் தம்பியை மனமொத்த சாதியை யொழிப்பா ரேழுகத்திலும் வீராதி வீரர் துஷ்ட நி –

36. ச் சிரகர் சிஷ்ட பரிபாலனர் பல்லோர் புகழ்தடப் பட்டணங் கார்த்தவர் சோனாடு காத்த சுகு –

37. ண தீரர் வீணாள் கெடாத மேன் மீகையுள்ளவர் சேவல் கொடியுஞ்சீ கண்டியுடையவர்

38. வரம்பிலா வாமனர் சிறை மீட்டவர் கடம்பமாலை கமழு மார்பினர் மந்தாரமாலை வாடேன் பூண்

39. டவர் நமச் சிவாயன் தேவியராகிய ரூவமாதர் ஈன்ற 196 பதின் பாரினந் றுணைவர் கைலை க –

40. ாவலர் கைலாயத்தில் பார்வதி பரமேஸ்வரர் அடையா பாணமும் கைலையங்கிரி மகாமேரு கிரியை –

41. யும் பார்வதி தேவியார் தலை மகனாகிய வீரவாகு முதல் 196 சூ கூ வீரரிடத்தில் ஒப்புவித்து இது சு –

42. னை யெல்லாங் கைக் கொள்ளுங்களென்று திருவாக்களித்த மது திருக்கரத்தால் திருநீடப் பெற்ற –

43. து முதல் கைக்கோள முதலிமாரென்று திருநாமம் பெற்றவர் இரவி பாவிட இல்லசையாதவ –

44. ர் புரவலர் புகழும் போர் முகவீரர் பஞ்சாட்சரப் பரிபூரணர் வீர சிங்காசன மேவி வீற்றிருப் –

45. பவர் ஒட்டக்கூத்தரின் ஒப்பிலாத் தமிழுக்குச் சிரச் சிங்காசன மீய்ந்தவர் வணங்காடியி –

46. னர் சித்திர புலிக்கொடி சீராய்ப் பெற்றவர் வாசியும் விருதும் வண்மை யு முடியுத் –

47. தேச மதிகச் செத்துப் பிறந்தவர் வாசி சடயனே மகாதேவனார்க் கண்டு சாந்தி ப –

48. ாதத்திற் கருமாரி பாய்ந்தவர் சென்ற நான்முகனைச் சிறைப் பிடித்தவர் கண்டு வ –

49. ணங்காவிதன் கைத்தாளம் பிடிங்கினோர் இறப்பதற்கென்று மேங்காத்தீரர் நா –

50. னென்றனது நன்மருகரென் சீரணி தாரணி செப்பிடப் பெற்றியர் மன்மதனி –

51. ருத்த மந்திரபுரியை வினவுமுடன் புகுந்து வெட்டியழித்தவர் வாணி குரு மொழியை

52. மறவாத செங்குந்தர் கோத்திரம் நீடுழிகாலம் வாழி கருமாரி கண்ட கைகோள முதலிமா –

53. ராகிய கந்தன் அருள் பெற்றவர் கொங்கு 24 நாட்டுச் சமய முதலி பட்டக்காரர் நாட்டாண்மைக்காரர்

54. உறவின் முறையார் எழுகரை நாட்டுச் சமயமுதலி பட்டகாரர் நாட்டாண்மைக்காரர்

55. நம்ம இடங்கையார் கைமபளத்தார்கள் எல்லோருங்கூடி கலியுக சகாப்தம்

56. 4842ல் துந்திபி மார்கழி மாதம் 2 தேதி குரு வாரமும் புணர்பூசஞ் நசத்திர

57. மும் சுபரும யோகமும் கூடிய சுப தினத்தில் செம்பியாங்கிழா நாட்டுக்குச் சேர்ந்த

58. சேவூர் ஆறு நாட்டில் கூடி முத்துக் குமாரசாமியாரவர்கள் மஞ்சள் நீர் குடித்து

59. வானதின மகன் குப்பமுத்து முதலிக்கு முத்து குமார நயினாரவர்கள் சிவபூசை

60. மு[ஸ] தேதியெல்லாம் அப்பித்துக் கொடுத்து தமது நாட்டிலே சுத்திவருகிற ப –

61. டிக்கு நாடு கூடி குப்பமுத்து முதலிக்கு ராஜாதிபதி மண்டலாதிபதி மடாதிபதி யென்று

62. விளங்கிய னவார் புதிய பட்டமுங் கொடுத்து நாட்டிலே வரி நடந்து வருகிற படிக் –

63. கு எழுதிக் கொடுத்த சாசனம் பூசை நடக்கும் படிக்கு பேரூருக்கும் சித்தூருக்கும்

64. உள்பட வைரா பிதிவரி பக்கத்துக்கு ஒரு பூட்டு நூலும் வந்த ஆள்களுக்

65. கு பரிகாசமும் இந்தப்படி சம்மதித்து கொங்கு [24] நாட்டார்களும் எழுகரை நா –

66. ட்டார்களும் நம்ம இடங்கை வகைராக்களும் கூடி முத்துக்குமார நாயனார்

67. பாசத் தீர்த்து சந்திர சூரியருள்ளவரைக்கும் நடந்து வரும் படியாக சேவூர் தி –

68. ருக்காளி வாலிஸ்வரர் சன்னதியில் எழுதியது எறுகரு வசாகத்தகுப் பட்டரைக்கு

69. இந்த தர்மத்தை சந்திர சூரியருள்ள வரைக்கும் மேல் கண்டச் சிலரும் நடத்தி வ –

70. ருவோமாகவும் இந்த தர்மத்திற்கு யாதாமொரு அகுதம் பண்ணிண பேர்க –

71. ள் காசிக்கு கங்கையிலே கோதாவரிலே கன்னியாகுமரியிலே பாவ நாசத்திலு –

72. ம் திருக்குற்றாலையத்திலும் பிராமணரையும் யோதீஸ்பரரையும் குருக்களையும்

73. தாய் தந்தையையும் காரம் பசுவையும் கொன்ற தோசத்திலே போகக் கடவர்க –

74. ள் இந்தத் தர்மத்தைப் பரிபாலனம் பண்ணின பேர்களுக்கு அஷ்ட ஐஸ்வரியமும் ஆ –

75. யு ராரோக்கியமும் சந்தான சமுரத்தயும் தெய்வ பிரசாதமும் குரு பிரசாதமுமார ஐப்பிர

76. தாபமும் மேன்மேலு முண்டாகத்தக்கதாக காமாசி தேவியும் சுபரமண்ணிய சாமியு

77. ம் முத்து குமார சுவாமியும் கிருபை செய்து ரட்சிபார் சுபம்

# 44. திருவரங்கம் தெற்குவாசல் சிற்பக் கல்வெட்டு

கி. ஸ்ரீதரன், சென்னை

**இடம் :** திருச்சி மாவட்டம், திருவரங்கம் கோயில் தெற்கு முதல் கோபுரம் வடக்குச் சுவர் நுழைவு வாயில்.

**காலம் :** கி.பி.17 ஆம் நூற்றாண்டு

**செய்தி :** கோபுர நுழைவு வாயிலில் வடக்குப் பகுதியின் உச்சியில் ஒரு சிறு பிறை போன்ற அமைப்பில் கோயிலை நோக்கி வணங்கிய நிலையில் ஒரு அடியவரின் சிற்பம் காணப்படுகிறது. அதன் மேல் பகுதியில் தெலுங்கு கல்வெட்டும் கீழ்ப்பகுதியில் தமிழ்க் கல்வெட்டும் காணப்படுகின்றன. இவர் தெற்கு வாசலைக் கண்காணிப்பவராகலாம்.

1. தெற்கு வாசள்
2. ரங்க சடகோ –
3. பைய்யன்



# 45. ஆழ்வார்குறிச்சி நடுகற் கல்வெட்டுகள்

பார்வதி, குற்றாலம்

**45:1**

**இடம் :** *திருநெல்வேலி மாவட்டம், வட்டம், ஆழ்வார்குறிச்சி ஈமப்புறக் காட்டில் உள்ள நடுகற்கள்*

**காலம் :** *கொல்லமாண்டு 982, கி.பி.1806*

**செய்தி :** *இறந்தவர்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.*

982

ஸூமாசி

*மீ*வீரக ஸஅூ

செட்டிகு

ன்குன்றீனந. ம

**45:2**

சீவமயம்

982

ஸூபுரட்டா

சிவ *மீ*

. . . தல்



# 46. காஞ்சிபுரம் காமாட்சி அம்மன் கோயில் கல்தொட்டிக் கல்வெட்டு

**கி. ஸ்ரீதரன், சென்னை**

**இடம் :** காஞ்சிபுரம் மாவட்டம், காமாட்சி அம்மன் கோயில் கொடி கம்பம் அருகே மதிற்சுவரை ஒட்டி கல்தொட்டி .

**காலம் :** கி.பி.17-18ஆம் நூற்றாண்டு

**செய்தி:** காஞ்சி காமாட்சி அம்மன் கோயிலில் தண்ணீர் சேகரித்து வைக்க ஓங்கோட்டை (தற்போதைய ஓங்கோல்) சேர்ந்தவர் தொட்டியை தானமாக அளித்த செய்தி.

1. **ஓங்கோடு சேநமைள**
2. **சய்யன் தன்மம்உ**



# 47. கலிங்கியம் தேர்க்கலசக் கல்வெட்டு

**சூலூர் தெய். சேஷகிரி, சென்னை**

**இடம்:** *ஈரோடு மாவட்டம், கோபிசெட்டிபாளையம் வட்டம், கலிங்கியம் கரிய காளியம்மன் கோயிலின் சிதலமடைந்த தேரிலிருந்து எடுத்து வைக்கப்பட்டுள்ள ஸ்தூபி கலசம்.*

**காலம்:** *பிரமாதி வருடம் கார்த்திகை மாதம் 20ஆம் தேதி கி.பி.1833.*

**செய்தி:** *1.150 மீட்டர் உயரமுடைய இக்கலசம் மூன்று பகுதிகளாகச் செய்யப்பட்டு ஒன்றன்மீது ஒன்றாகச் சேர்க்கப்பட்டுள்ளனது கீழ்ப்பகுதியில் 2 வரிகளில் எழுத்துக்கள் உள்ளன. கலிங்கியம் கரிய காளியம்மனுக்கு இக்கிராம கணக்கு கோபால பிள்ளை, குடியானவர்கள், செட்டிமார், மூப்பன்மார்கள் மற்றும் பிறர் சேர்ந்து கூடி இக்கலசத்தை அமைத்துள்ளனர். பொண்ணளகன் மூப்பன் என்பவர் 82 ரூபாய் இதற்காகக் கொடுத்துள்ளார்.*

1. தேவிசகாயம் பிரமாதி வருஷம் கார்த்திகை மாதம் 20ந் தேதி கலிங்கியம் கரிய காளியம்மன் தேர்க் கலசம் மேற்படி கிறாமம் கணக்கு கோபால பிள்ளை முதலான குடியானவர்கள் செட்டிமார் மூப்பர்கள் மற்றுமுள்ள சகலமான பெருமக்கள் கூடி பல உபகாரமாயி வாங்கின கலசம்
2. பொண்ணளகன் மூப்பன் ரூபாயி 82

# 48. அறந்தாங்கி வட்டத்தில் சில புதிய கல்வெட்டுகள்

அ. சந்திரபோஸ், புதுக்கோட்டை,
கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்.

**48:1**

**இடம்:** புதுக்கோட்டை மாவட்டம், அறந்தாங்கி வட்டம், சுனையக்காடு கிராமத்தில் கிணற்றில் பதிக்கப்பட்டுள்ள கல்.

**காலம்:** கி.பி.18ஆம் நூற்றாண்டு

**செய்தி:** பாலையவனம் விஜய அருணாசல வணங்காமுடி பண்டாரத்தார் இச் சுனையை எடுப்பித்தார் என்ற செய்தி.

1. பிரபவா வருஷம்
2. ஆவணி மீ
3. ம[கா]ராசராச ராம
4. சந்திற வி –
5. ஜய அருணா –
6. சல வணங் –
7. காமுடி ப –
8. ண்டாறத்த –
9. ாறவற்கள்
10. பிரதிஷ்டை



**48:2**

**இடம்:** புதுக்கோட்டை மாவட்டம், அறந்தாங்கி வட்டம், நற்பவளக்குடியில் ஐயப்பன் கோயில் வளாகத்தில் கிடக்கும் ஒரு கல்லில் உள்ள கல்வெட்டு.

**காலம்:** கி.பி.17 ஆம் நூற்றாண்டு

**செய்தி:** அறந்தாங்கி அரசு உடையார் பிச்சர் தொண்டைமானார் காடவராய பட்டனுக்கு கூத்தனூர் வயலில் இராசகரம் கழித்துக் குடுத்த நிலம் பற்றிய செய்தி.

**முன் பக்கம்**

1. விளம்பி_வ 2. ருஷம் ஆடிமா

| | | | |
|---|---|---|---|
| 3. | தம் 19 தேதி [அ] | 4. | றந்தாங்கி அரசு |
| 5. | உடையார் பிச் – | 6. | சர் தொண்டை |
| 7. | மானார் கேச – | 8. | வப் பெருமா – |
| 9. | ளான காடவ | 10. | ராய பட்டனு – |
| 11. | க்குக் கல்வெ – | 12. | ட்டி குடுத்த |
| 13. | கூத்தனூர் | 14. | வயலில் ம – |
| 15. | ண்ணல் வ – | 16. | லியபெருமா – |
| 17. | ள் வயக்கல் | 18. | சந்திராதித்த |
| 19. | வரைக்கு | | |



**பின் பக்கம்**

| | | | |
|---|---|---|---|
| 20. | இராசகரம் | 21. | கழித்துக் கு – |
| 22. | டுத்த அளவுக்கு | 23. | இன்மரியாதி |
| 24. | இச்செய் அனு – | 25. | பவித்துக் போத |
| 26. | க் கடவராக – | 27. | வும் இன்மரியா |
| 28. | தி இழிய இது | 29. | க்கு இராசத– |
| 30. | ரம் கேட்க்கு | 31. | மவன் தந்தா – |
| 32. | ய்க்கு தான்மி – | 33. | ணாழ ஸமம். |

## 48:3

இடம் : *மேற்படி கோயில் முன்பு உள்ள கல்*

காலம் : *கி.பி.14ஆம் நூற்றாண்டு*

செய்தி : *இவ்வூர் கம்பன் முதலிமான் அலைவில் அஞ்சாதநல்லூரில் நில தானம் வழங்கியமை.*

**முதல் பக்கம்**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ இவ்வூர்
2. கம்பன் முதலி ம –
3. ான் அலைவில் அ –
4. ஞ்சாதா நல்லூர்
5. சத்தியம் மென்னி –
6. றான் சொக்கன்
7. வயக்கல் திருவ –
8. கத்தி வயக்கல்
9. தர்சுகு தாமும் . . .

**இரண்டாம் பக்கம்**

10. நம்பியன்
11. வயக்கல் க –
12. ளக்கனார் து –
13. டவல் பெரிய
14. நஞ்சை பா –
15. ண்டிப் பெ –
16. ருமாளொ
17. . ப்பர் வ
18. . டய . . .

# 49. திருத்தங்கூர் கல்வெட்டு

அ. சந்திரபோஸ், புதுக்கோட்டை,
கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்.

இடம்: *சிவகங்கை மாவட்டம், காரைக்குடி வட்டம், திருத்தங்கூர் நாகநாதசுவாமி கோயில் மற்றும் சொர்ணவல்லி அம்மன் கோயில் ஆகியவற்றிற்கிடையே உள்ள திருநிலைக் காலில் உள்ள கல்வெட்டு.*

காலம்: *18ஆம் நூற்றாண்டு*

செய்தி: *பாடிகாவல் சுதந்திரம் கொடுத்தது.*

**கீழ நிலைக் கால்**

1. திருத்த –
2. ங்கூறா –
3. ண்ட த –
4. ம்பிரா –
5. னார்கா
6. ரியத்து
7. க்கு கடவதா
8. ஆதி சண்டே –
9. சுரகு சேம –
10. ன் சலிப்பு –
11. லிப் [பே]பரைய –
12. ன் சவெ
13. ....
14. ....
15. ....
16. ...
17. றைண்று –
18. க்கு முற்
19. கி....
20. ளென்று
21. பூசை –
22. க்கிறாம.
23. த்து க்கு ஸ
24. ட்ட நாத
25. ன் குளம்
26. மு[ம்] வயலு
27. ம் இதற்கு
28. எல்லை கி
29. ள் பாற்கெ –
30. ல்லை எல்லை
31. ஊரணிக் –
32. கீள்கரை –
33. க்கு மேற்கு

**மேல் நிலைக்கால்**

1. தென்பா –
2. ற்கெல்லை
3. தண்டு க –
4. ரைக்கு

| | | | |
|---|---|---|---|
| 5. | வடக்கு | 6. | மேல்பா – |
| 7. | ற்கெல்லை | 8. | மட்டை |
| 9. | காட்டுக்கு | 10. | கிளக்கு வ – |
| 11. | டபாற்கெல் – | 12. | லை யித்தி |
| 13. | யூரணிக் – | 14. | கு தென்க – |
| 15. | ரைக்கு ெ – | 16. | தற்கு இற்படி |
| 17. | வாண்டை | 18. | யா[ர்] பற்றுக்கு அ – |
| 19. | ற்றபடி காவ – | 20. | ல் சு[வ]ந்திர – |
| 21. | ம் நடக் | 22. | கவும் இவ – |
| 23. | [ர்]கள் சொ | 24. | படி நாட் – |
| 25. | டு[க்]கணக் – | 26. | கு கொங்கி |
| 27. | ராயர் ஏக – | 28. | ன் எழுத்து |

# 50. விராலூர் நகரத்தார்களின் பழனி மடத்துக் கல்வெட்டு

**கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்**

**இடம்:** *திண்டுக்கல் மாவட்டம், பழனி வட்டம், விராலூர் நகரத்தார்களின் மடத்துச் சுவரிலுள்ள கல்வெட்டு*

**காலம்:** *கலி 4981, கி.பி. 1879*

**செய்தி:** *புதுக்கோட்டை மாவட்டம் விராலூர் நகரத்தாரின் பழனியிலுள்ள பழைய மடத்தினைப் புதுப்பித்தமைக்கானது. இங்கிலீஸ் வருசம் என்பதை இ என்ற குறியீட்டில் எழுதப்பட்டுள்ளது.*

1. கலியுகாதி ௵ 4981
2. இ. 1879 சு. பிரமாதி
3. காத்திகை *மீ* த்தில் யிதுக்கு
4. முன் கலியுகாதி 4907
5. அட்சய ௵ ஆவணி *மீ*
6. விராலிமலைச் செட்டிகள –
7. ாகிய விராலூர் நகரத்த –
8. ாரால்க் கட்டியிருந்த
9. மடத்தை நாளது தே –
10. தியில் ஷெ யாரால்
11. புதிதாய்க் கட்டி
12. யிருக்குர ஷெ யார்
13. கள் மடம். உ
14. தெண்டாயுதபா –
15. ணி துணை



# 51. கதிர்காமம் வேல்மேடை செப்புக் கவசப் பொறிப்பு

சு. இராசகோபால், சென்னை

**இடம் :** *இலங்கை கதிர்காமம் கோயிலின் ஒரு பகுதியாக உள்ள பழனியாண்டவர் கோயில் முன்பாக நடப்பட்டுள்ள வேல் மேடையை சுற்றி அமைக்கப்பட்டுள்ள செப்புக் கவசம்*

**காலம் :** *27.11.1936*

**செய்தி :** *சிவராமானந்த சுவாமிகளின் முயற்சியால் மலையாளம் மற்றும் தமிழ் மக்கள் உதவியுடன் வேல் மேடை அமைக்கப்பட்டது என்றும் இந்த வேலிற்கு அபிஷேகம் செய்து பட்டுத்துணி அணிவித்து, அர்ச்சனை முதலானவை செய்து பக்தர்கள் பயனடைய வேண்டும் என்ற செய்தியும் சொல்லப்படுகிறது. கார்த்திகை தீப நாளில் 27.11.1936ல் அன்று இது செய்து வைக்கப்பட்டது.*

1. உ சிவமயம்
2. வேலும் மயிலும் துணை
3. க.கு. சிவறாமானந்த சுவாமியின் பிரயாசையாலும் மலையாளம் தமிழ் மக்கள் மகா புண்ணிய
4. ஜனங்களுடைய உதவியாலும் செய்யிது வைத்த வேல் பீடம் இந்த மழை தீபதேறின வேலின்
5. சருவ அபிஷேகம் பட்டு சாத்தி அர்க்ஷனை முதலாகியது செய்து
6. இஸ்ட சித்தி பெற்றுக் கொள்ள வேண்டியது
7. கொல்லம் 1112 ௵ கார்த்திகை *மீ* கார்த்திகை தீபத்துக்கு செய்து வைத்தது. 27.11.1936

# 52. குமாரகோவில் புதிய கல்வெட்டுகள்

செந்தீ நடராசன், சுந்தரம், ராஜ்குமார்
அ.கா. பெருமாள், செல்வதரன், நாகர்கோவில்

**52:1**

**இடம் :** *குமரி மாவட்டம் கல்குளம்வட்டம் குமாரகோவில் மடப்பள்ளி.*

**காலம் :** *கொல்லம் 540 சித்திரை 10. 1365.*

**செய்தி :** *கோயில் மூலவர் வேலாயுதப்பெருமாளுக்குத் தினமும் நாழி ஆசியும், இரண்டு மாலையும் கொடுக்க குழிக்கோடு தேசத்தைச் சார்ந்த அய்யப்பன் மகன் அய்யப்பனான சுப்பிரமணி இரு இடங்களில் அமைந்த 4மா நிலம் கொடுத்தமை.*

1 கொல்லம்
2 540 ஆண்டு சித்திர
3 மாதம் 10 தியதி நயினார்
4 வேலாயுதபெருமாள்
5 குகு நித்தல் நாழி அரி –
6 சி பூசைக்கு சிலவு –
7 ம் வச்சு இரண் –
8 டு மாலையும் மக
9 கொண்டு வருமா –
10 குழிகோடு தேசகந
11 தனவானும் கூட
12 குழிகோடு தே –
13 சத்து ஸ்ரீ அய்யப்ப –
14 ன் அய்யப்ப
15 ன் சுப்பிறமணி
16 கொண்டு
17 விட்டு கொடுத்தது பி –
18 ரம்மபுரத்து பெரிய
19 குளத்தின் கீள் உள்ள
20 நத்தமறை தடி 1
21 2மாவும் பழவயக –
22 றை தடி 1 2மா –
23 வும் மேல்படி தடி னால்
24 செலவும் க்கு கட்ட
25 துக்கு பா –
26 ட்ட நெல் 6– வும்
27 கொண்டு மேல்படி சீ –
28 பண்டாரத்தில் நின் –
29 று நடத்திவிச்சு
30 கொள்ளுவாரா –
31 கவும் இப்படிக்கு
32 ஸ்ரீ அய்யப்பன் அய் –
33 யுப்பன் எழுத்து

**52:2**

**இடம் :** *மேற்படிக் கோவிலின் முன்மண்டபப் பொருள்வைப்பறை.*

**காலம் :** *கொல்லம் 854 தை 26 - 1679*

**செய்தி :** *கோயில் மூலவர் வேலாயுதப்பெருமாளுக்கு வீரகேரளநல்லூர் ஆண்டிச்சிமகள் இராமனாச்சி போல் திக்கெல்லாம் புகழும்பெரும்மாள் பராக்கிறமபாண்டியப் பெருமாள் அளித்த கொடை பற்றியது. இவன் முன்னோர் நயினார் மகள் பாண்டியனார் ஏற்கெனவே ஈசான மூலையில் கோசாலை மடம் அமைத்து சிவபாண்டி ஆண்டார் பூசைக்கும் மகேசுரபுசைக்கும் கொடுத்த கொடையோடு இக்கொடையும் அளிக்கப்படுகிறது.*

1. சகாத்தம் **1600**ன் மேல் செல்லா நின்ற கொல்லம் **854** ஆண்டு தை மாதம் **26** தேதி
2. மலைமண்டலத்து பிரம்மபுரத்து நயினார் வேளிமலை வேலாயுதப் பெருமாள் சீபண்டாரம்
3. காரியஞ்செய்வார்களுக்கு நாஞ்சினாட்டு வீரகேரளநல்லூரில் ஆண்டிச்சிமகள்இராமனாச்சி –
4 க்கு திக்கெல்லாம்புகழும்பெருமாள் பராக்கிறமபாண்டிப் பெருமாளு மோம் உதகபுற்வ தன்மத்துப் பிறமாணமாக விட்டு
5. கொடுத்த பரிசாவிது முன் எங்கள் பெத்தியார் நயினார் மகள் பாண்டியனார் மேல்படி வுர் ஈசானத்தில் கோ –
6. ச்சாலை மடத்தில் நீராக்க, சிவபாண்டி ஆண்டார் பூசைக்கும் மயேசுரபுசைக்கும் விட்டு கொடுத்த சுவாத்தியத்தின் கூடிந
7. **854** வருடம் தை மாதம் **26** தேதி சிலவு நடத்தியும் விளையும் மனைகளும் ஆள்அடி மையும்விட்டு கொடுத்து மேல்படி மடத்தில்
8. நின்று மடதன்மமும்நடத்தி மேல்படி நயினார் வேலாயுதப்பெருமாள் உஷாபூசையில் பாயித பூசை நடத்திவ –
9. றக்கும் கூட மேல்படி மடத்தில் கல்லிலும் செம்பிலும் வெட்டி விட்டு கொடுத்தபடியே பாயித நெய்வேத்திய –
10. த்துக்கு நாள் **1** க்கு ஆசி நாழிக்கு நெல் நாழி வீசமும் சற்கறைக்கு நெல் வீசம் உரி ம் பழம்தேங்காய்க்கும் நெல் நாழிஉரியும் ஆக நாள்**1**க்குநெல் **6**நாழிஉரி
11. நாள்**365**க்கு நெல் . . . மேல்படி நெல்லினை வீரகேரளநல்லூரில் நின்று–
12. . . . சத்த கூலிக்கு பணம் **6** க்கு. . . இந்நாள் முதல் . . .
13. . . . ஆண்டுவரையும் காபாதியை–மடத்தில் நின்றும் கொடுத்து வரும்படிக்கு மடத்தில் கல்லிலும் செம்பிலும் வெட்டி உதகஞ் செ

14 ய்யே சீபண்டாரத்தில் . . . கொள்ளுமாரகலும் மேல்படி. . . சொல்லும்படிக்குபாயிதபூசை

15 ல் . . . ாண்ணிகொடுத்த . . .

16 . . . கிலும் மடத்தன்மத்துக்கும்–வி–சுவாத்தியத்தியங்களுக்கும் விக்கினம் வந்தாலும் . . . வீரகேரளநல்லூர்

17 உள்ளாரும் காறமையும் கூட விக்கினமும் திறப்பிச்சு கொடுத்து பாயிதபூசை நெல்லும் வேண்டி கலச

18 இந்த பூசைக்கும் மடதன்மத்துக்கும் விக்கினம் செய்தபோகள் கெங்கைகரையில் காராம்பசுவைக் கொன்ற தோஷத்தி –

19. லும் பஞ்சமாபாதகஞ்செய்த தோஷத்திலும் போவாராகவும் யிந்த பூசையும் மடதன்மத்தையும் பரிபாலனம் பண்ணி

20. ன பேர்கள் புத்திறகிளத்தினாதிகளுடனே யின்மையிலே வாழ்ந்த சாயுச்சியபதம் அடைந்திருப்பாராக

21. யிந்தபடி கல்லிலும் செம்பிலும்வெட்டி சந்திராதித்தா வரை பாயித பூசை நடக்கும்படிக்கு உதகபுர்வ

22. தன்மதானப் பிறமாணமாக விட்டுகொடுத்த ஆண்டிச்சி மகள் இராமஞ்சியார் ஒப்பு ஸ்ரீதிக்கெல்லாம் புகழும்

23. பராக்கிறமபாண்டிப்பெருமாள் எழுத்து இத்தானபிறமாணம் நடுவெழுதின மேல்படி நாட்டு வீரகேரளநல்லூர்

24. சாத்தாங்குளம் திருச்சிற்றம்பலம் எழுத்து வேலே துணை தாணுவே துணை

25. 825வருடம் தை மாதம் 23தேதி வேளிமலை வேலாயுதப்பெருமாள் சீபண்டாரத்துக்கு நாஞ்சினாட்டுப் புதுகிராம –

26. த்து அணஞ்சபெருமாள்லானேன் தானப்பிறமாணம் எழுதிக் கொடுத்த பரிசாவிது மேல்படி நயினாருக்கும் . . .

27. . . .திருப்பள்ளிச்சை பூசைக்கு நாள் 1க்குஅமுது . . . நாள் 30க்கு –

28–32 . . .

33. . . . பூசையும் இந்தபடி நடக்கும்படிக்கும் . . . சிபண்டாரத்தில் நின்–

34. . . . கொண்டு நடத்தி வரும்படிக்கும்

# 53. வேலூர் மாவட்டத்தில் தொல்லியல் கண்டுபிடிப்புகள்

**கி. குமார், சென்னை**

வேலூர் மாவட்டம், ஆர்க்காடு வட்டத்தில் ஆர்க்காட்டிற்கு தென்கிழக்கே சுமார் 15 கி.மீ. தொலைவிலும் அரும்பாக்கத்திற்கு மேற்கே சுமார் அரை கி.மீ. தொலைவிலும் பாலாறு அணைக்கட்டிலிருந்து ஏரிகளுக்கு நீர் கொண்டு செல்லும் தென்னம்பட்டு மற்றும் மேச்சேரி பாசன கால்வாய் உள்ளது. இக்கால்வாயின் மேற்குப் பகுதியில் உள்ள பரந்த மேடான பகுதியிலிருந்து பல தொல்லியல் எச்சங்கள் காணப்படுகின்றன.

## இடை மற்றும் கடைப் பழங்கற்கால கருவிகள்

தென்னம்பட்டு மற்றும் மேச்சேரி பாலாறு பாசன கால்வாயின் மேடான பகுதி மற்றும் அதன் சரிவுகளிலிருந்து இடைப் பழங்கற்காலம் மற்றும் கடைப் பழங்கற்காலத்தைச் சேர்ந்த பல கற்கருவிகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. குறிப்பாக, அரும்பாக்கம் கிராமத்திற்குச் செல்லும் சாலையின் வடக்குப் பகுதியிலிருந்து ஏராளமான கற்கருவிகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவற்றுள், இடைப்பழங்கற்காலத்தைச் சேர்ந்த கைக்கோடரி, சில்லு கருவிகள், சீவுக் கருவிகள் மற்றும் சுரண்டிகள் ஆகிய வகைக் கற்கருவிகளும், கடைப் பழங்கற்காலத்தைச் சேர்ந்த பிளேடு, சில்லு கருவிகள், கரண்டிகள், கூர்முனைகள் மற்றும் பல முற்றுப் பெறாத கற்கருவிகளும் குறிப்பிடத்தக்க கற்கருவி வகைகளாகும். இங்கு கண்டெடுக்கப்பட்டுள்ள கற்கருவிகள் அனைத்தும் இதே பகுதியில் கிடைக்கின்ற குவார்ட்சைட், குவார்ட்ஸ், செர்ட் போன்ற வகையான மூலக்கற்களிலிருந்து செய்யப்பட்டுள்ளன.

## இரும்புகால தடயங்கள்

மேலும், இதே மேட்டுப் பகுதியில் இரும்பு காலத்தைச் சேர்ந்த பல முதுமக்கள் தாழிகள் சிதைந்த நிலையில் காணப்படுகின்றன. இக்காலத்தைச் சேர்ந்த கருப்பு, கருப்பு - சிவப்பு மற்றும் வண்ணம் தீட்டப்பட்ட சிவப்பு நிறப் பானை ஓடுகளும் ஆங்காங்கே சிதறிக் கிடக்கின்றன. இரும்பை உருக்கப் பயன்படுத்தப்பட்ட பல உருக்கு உலைகளும் அருகில் ஏராளமான இரும்பு கழிவுகளும் கடுமண்ணாலான குழாய்களும், சில இரும்புப் பொருட்களும் உடைந்த நிலையில் காணப்படுகின்றன. மேலும், கருப்பு - சிவப்பு நிற பானை ஓடுகளும் இதன் அருகிலேயே காணப்படுகின்றன.

## கண்ணாடி மணிகள் செய்யும் தொழிற் பட்டறை

இரும்பு உருக்கு உலைகள் அமைந்துள்ள அப்பகுதி யிலேயே கண்ணாடி மணிகள் செய்யும் தொழிற் பட்டறையும் சிதைந்த நிலையில் காணப்படுகிறது. பச்சை மற்றும் நீல நிறத்தாலான மணிகள் இப்பட்டறையிலிருந்து செய்யப்பட்டுள்ளன. மணிகளைச் செய்யப் பயன்படுத்திய சுடுமண்ணாலான அச்சு வார்ப்படமும், பச்சை மற்றும் நீல நிற கண்ணாடி கழிவுகளின் பாகங்களும், சுடுமண்ணாலான குழாய்களும் அதிக அளவில் காணப்படுகின்றன. இரும்புக் காலத்தைச் சேர்ந்த இரும்பு உருக்கு உலைகளுக்கு மிக அருகிலேயே கண்ணாடி மணிகள் செய்யப் பயன்படுத்தப்பட்ட பட்டறையும் காணப்படுவதால் இது இரும்பு காலத்தைச் சேர்ந்ததாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது. இவ்வகையான கண்ணாடி மணிகள் செய்யப் பயன்படுத்தப்பட்ட பட்டறை வேலூர் மாவட்டத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது இதுவே முதன்முறையாகும்.





## எர்த்தாங்கல் பாறை ஓவியங்கள்

வேலூர் மாவட்டம், குடியாத்தம் - பேரணாம்பட்டு சாலையில் குடியாத்தம் நகருக்கு மேற்கே சுமார் 5 கி.மீ. தொலைவில் எர்த்தாங்கல் அமைந்துள்ளது. இவ்வூருக்குத் தெற்கே சுமார் ஒரு கி.மீ. தொலைவில் எர்த்தாங்கல் ஏரிக்கு தெற்குப் பகுதியில் எர்த்தாங்கல் மலை அமைந்துள்ளது. இம்மலையின் கிழக்கு மற்றும் மேற்கு சரிவுப் பகுதிகளிலும், மலையை ஒட்டியுள்ள சமவெளிப் பகுதிகளிலும் புதிய கற்காலம், இரும்புக் காலம் மற்றும் வரலாற்று ஆரம்ப காலம் ஆகியவைகளைச் சேர்ந்த வசிப்பிடப் பகுதி ஒருங்கே காணப்படுகிறது. இவ்வசிப்பிடப் பகுதியில் தொல்லியல் எச்சங்கள் அதிக அளவில் காணப்படுகின்றன. குறிப்பாக புதிய



கற்காலத்தைச் சேர்ந்த புதிய கற்காலக் கற்கருவிகள் மற்றும் சாம்பல் நிறப் பானை ஓடுகளும், இரும்புக் காலத்தைச் சேர்ந்த கருப்பு - சிவப்பு, கருப்பு மற்றும் சிவப்பு வண்ணம் தீட்டப்பட்ட பானை ஓடுகளும், இரும்பு உருக்கு உலையில் பயன்படுத்தப்பட்ட சுடுமண் குழாய்களும், இரும்புக் கழிவுகளும் ஏராளமாகக் காணப்படுகின்றன. மேலும், வரலாற்று தொடக்க காலத்தைச் சேர்ந்த பல்வகை பானை ஓடுகளும் பரவிக் காணப்படுகின்றன.

### பாறை ஓவியங்கள்

எர்த்தாங்கல் மலையின் சரிவுப் பகுதிகள் மற்றும் மலையை ஒட்டிய அடிவாரப் பகுதிகளில் இயற்கையாக அமைந்த 10க்கும் மேற்பட்ட பெரிய குகைகள் காணப்படுகின்றன. அவற்றுள், இரண்டு குகைகளில் வெண்மை நிறத்தில் தீட்டப்பட்ட பல ஓவியங்கள் காணப்படுகின்றன.

அவ்விரண்டு குகைகளுள் ஒரு குகையானது எர்த்தாங்கல் மலையின் தென்மேற்கு சரிவுப் பகுதியில் அமைந்துள்ளது. தெற்கு நோக்கியவாறு அமைந்துள்ள இக்குகையானது சுமார் 10 மீட்டர் நீளம், 8 மீட்டர் அகலம் மற்றும் 3 மீட்டர் உயரம் கொண்டுள்ளதாக உள்ளது. இக்குகையின்

உட்பகுதியில் கூரையில் பல ஓவியங்களும் குறியீடுகளும் வெண்மை நிறத்தில் தீட்டப்பட்டுள்ளன. அவற்றுள் பல மனித உருவங்கள், பறவைகள், இனங்கான இயலாத விலங்குகள், விலங்குகளின் மீது சவாரி செய்யும் மனிதர்கள், சடங்கு சாாந்த குறியீடுகள் போன்றவை மிகவும் அழகாக தீட்டப்பட்டுள்ளன.

மனித உருவங்கள் நடந்து செல்லுதல், வேட்டையாடுதல் போன்ற தோற்றங்களிலும், சில மனிதர்கள் நின்று கொண்டிருப்பதைப் போன்றும், கைகளில் ஆயுதங்களை ஏந்தியுள்ளது போன்றும், கைகளை மேலே உயர்த்திக் கொண்டிருப்பதைப் போன்றும் தீட்டப்பட்டுள்ளன. இவை அனைத்தும் கோட்டுருவங்களாகவே தீட்டப்பட்டுள்ளன. மேலும், இனங்கான இயலாத சில விலங்குகளின் உருவங்களும் காணப்படுகின்றன.

சூரியன், நட்சத்திரம், உடுக்கை, வட்டம், முக்கோணம் போன்றவை கோட்டுருவங்களாக தீட்டப்பட்டுள்ளன. திரிசூலம், பல முட்களைக் கொண்ட கூர்மையான ஆயுதம், அம்புமுனை, ஒரு பக்கத்தில் மூன்று முனைகளும், மற்றொரு பக்கத்தில் இரண்டு முனைகளையும் கொண்ட ஆயுதம். மற்றும் சுவஸ்திகம், நாமம் போன்ற குறியீடுகளும் அதிக அளவில் வரையப்பட்டுள்ளன. சில ஓவியங்கள் புகைபடிந்த நிலையில் மங்கலாக தோற்றமளிக்கின்றன.

ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ள இரண்டாவது குகையானது எர்த்தாங்கல் மலையின் வடக்குச் சரிவில் ஏரிக்கு மிக அருகில் அமைந்துள்ளது. இக்குகை இரண்டு பெரிய பாறைகளுக்கிடையே உயரமான இடத்தில் உள்ளது. வடக்கு நோக்கியவாறு அமைந்துள்ள இக்குகையிலுள்ள ஓவியங்களும் வெண்மை



நிறத்திலேயே காணப்படுகின்றன. மனித உருவம் ஒன்று கைகளை மேலே உயர்த்தியவாறு நின்று கொண்டிருப்பதைப் போன்ற தோற்றத்தில் உள்ளது. மேலும் ஒரு பெண் உருவம், மூன்று மனித பாதங்கள், திரிசூலம், முக்கோணம் மற்றும் பல குறியீடுகள் கோட்டுருவங்களாகத் தீட்டப்பட்டுள்ளன.

எர்த்தாங்கல் மலைக்கு தெற்கே சுமார் ஒரு கி.மீ. தொலைவில் அமைந்துள்ள பட்டனக்கல் என்ற மலையின் வடபகுதியில் உள்ள ஒரு சிறிய குகையின் கூரையிலும் வெண்மை நிறத்தில் தீட்டப்பட்ட திரிசூலம், நாமம் போன்ற பல குறியீடுகள் காணப்படுகின்றன.

மேற்குறிப்பிட்ட ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ள குகைகளின் உட்புறங்களிலும் மற்றும் அவற்றைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் இரும்புக் காலத்தைச் சேர்ந்த பானை ஓடுகளும் வசிப்பிடப் பகுதிகளும் காணப்படுவதால் இவ் ஓவியங்கள் அனைத்தும் இரும்புக் காலத்தைச் சேர்ந்ததாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

# 54. பிள்ளையார்பட்டி அகழாய்வு 2011

வீ. செல்வகுமார், தஞ்சாவூர்

*தஞ்சாவூர்ப் பகுதியில் உள்ள செம்மண் பரப்பில் பரவலாக வரலாற்றுக்கு முற்பட்ட காலத் தொல்லியல் சான்றுகள் காணப்படுகின்றன. தஞ்சாவூருக்கு மேற்கே அமைந்துள்ள பிள்ளையார்பட்டி கிராமத்தின் பகுதியாக உள்ள தமிழ்ப் பல்கலைக்கழக வளாகத்தில் 2011 சூன் மாதம் இந்திய அரசு தொல்லியல் துறையின் நல்கையுடன் அகழாய்வு மேற்கொள்ளப்பட்டது.*

*2009 மற்றும் 2010ஆம் ஆண்டுகளில் தோண்டப்பட்ட அகழாய்வுக் குழிகள்* **I & II** *ஆகியவை (பார்க்க ஆவணம் இதழ் 20, 21) மேலும் இவ்வாண்டு தோண்டப்பட்டன. இவை சற்று வித்தியாசமான சான்றுகளை வெளிக்கொணர்ந் துள்ளன.*

### அகழாய்வுக் குழி ஒன்று (PPT I)

*அகழாய்வுக் குழி* I*ல் 2008ஆம் ஆண்டு தரை மேற்பரப்பி லிருந்து 70 செ.மீ. வரை அகழாய்வு செய்யப்பட்டது. இவ்வகழாய்வுக் குழி கிழக்கு மேற்காக 5.5 மீ. நீளமும் வடக்கு தெற்காக 5 மீ. அகலமும் உடையது. 2011இல் இரண்டாவது மண்ணடுக்கு அகழாய்வு செய்யப்பட்டது. இம்மண்ணடுக்கில் இரும்புச் செறிவுள்ள சரளைக் கற்கள்* (ferricrete) *செம்மண்ணுடன் கலந்து காணப்படுகின்றது. இவ்வடுக்கில் நுண்கற் செதில்களும், கூர்முனைகள், துளையிடும் கருவி, கருக்கற்களும் காணப்பட்டன. இவ்வடுக்கில் 110-115 செ.மீ. வரை கற் செதில்களின் எண்ணிக்கை குறைந்து காணப்பட்டது. பின்னர் 125 செ.மீ. ஆழத்தில் உள்ள செம்புறாங்கல் கலந்த மண்ணடுக்கில் பெரிய அளவிலான பழங்கற்காலக் கற்கருவிகளும், கருக்கற்களும், செதில்களும் காணப்பட்டன.*

*இக்குழியில் உள்ள மண்ணடுக்குகளில் காணப்பட்ட தொல் பொருட்களின் பரவல் அகழாய்வுக் குழி* PTT II-*ஐக்காட்டிலும் சற்று வேறுபட்டிருந்தது குறிப்பிடத்தக்கதாகும். அகழாய்வுக் குழி* PPT II *போலல்லாது நுண்கருவிகள் கிடைக்கும் அடுக்கிற்கும் அதன் கீழே உள்ள பழங்காலக் கருவி கிடைக்கும் மண்ணடுக்கிற்கும் இடைவெளி இல்லாதது குறிப்பிடத்தக்கதாகும். அதாவது இங்கு தொடர்ச்சியாக கற்கருவிகள் கிடைக்கின்றன.*

### அகழாய்வுக் குழி இரண்டு (PPT III)

*இவ்வகழாய்வுக் குழி கிழக்கு மேற்காக 7 மீ. நீளமும் வடக்கு தெற்காக 5 மீ அகலமும் உடையது. இவ்வகழாய்வுக் குழியில் 2010ம் ஆண்டு ஒரு மெருகேற்றப்பட்ட கற்கோடரி கண்டெடுக்கப்பட்டது. இதன் கீழ் உள்ள*

மண்ணடுக்கில் இரும்புச் செறிவுள்ள சரளைக் கற்கள் செம்மண்ணுடன் கலந்து காணப்படுகின்றது. இக்குழியில் PPT Iஐவிட அதிக அளவில் நுண்கருவிகள் காணப்பட்டன. இங்கு குழி PPT Iஐப் போலல்லாது 110-115 வரை கற்செதில்களின் எண்ணிக்கை குறையாமல் காணப்படுகின்றது. பின்னர் 125 செ.மீ. ஆழத்தில் உள்ள செம்புறாங்கல் கலந்த மண்ணடுக்கில் பழங்கற்காலக் கருவிகள் தொடர்ந்து காணப்படுகின்றன. இக்குழியில் ஒரு சதுர மீ. அளவுள்ள ஒரு மாதிரிக்குழி தோண்டப்பட்டது. அம்மாதிரிக் குழியில் 180 செ.மீ. வரை கற்கருவிகள் காணப்பட்டன. அதற்கு கீழே செம்பாறாங்கற் படிவு காணப்பட்டது. இப்பாறையில் கற்கருவிகள் எதுவும் காணப்படவில்லை.

## பண்பாட்டு நிலைகள்

2001இல் நடத்தப் பெற்ற அகழாய்வுகள் இப்பகுதியில் இரும்புக் காலம், நுண்கற்காலம் மற்றும் பிந்தைய பழங்கற் காலப் பண்பாடுகள் நிலவியதை உறுதிப்படுத்துகின்றன.

## கற்கருவித் தொழிற்கூடம்

### நுண்கற்கருவிகள்

இங்கு கண்டுபிடிக்கப்பட்ட நுண்கற்கருவிகள் பெரிதும் குவார்ட்ஸ் வகைக் கல்லால் செய்யப்பட்டவை. இங்கு பிறைச்சந்திரன் வடிவ கருவிகள் (லூனேட்), கூர்முனைகள், கரண்டிகள், துளைப்பான்கள் ஆகிய கற்கருவிகள் பளபளப்புடன் காணப்படுகின்றன. சில செர்ட் வகைச் செதில்களும் காணப்படுகின்றன.



## பழங்காலக் கற்கருவிகள்

பழங்காலக் கற்கருவிகளின் அளவு நுண்கற்கருவிகளைவிட பெரியதாகக் காணப்படுகின்றது. இக்கருவிகள் மண்படிவுடன் சற்றுப் பழைய தோற்றத்துடன் காணப்படுகின்றன. இது பழங்கற்காலக் கருவிகளின் பழைமையை உணர்த்துகின்றது. இக்கருவிகள் நீரோட்டத்தில் சிறிதளவு தூரம் நகர்த்தப் பட்டிருக்கலாம் எனத் தெரிகின்றது.

## விவாதம்

இவ்விரண்டு அகழாய்வுக் குழிகளும் (I & II) அகழாய்வுக் குழி IIல் கிடைத்ததைப் போன்று பழங்கற்காலச் சான்றுகளை வெளிப்படுத்தியுள்ளன. இது இங்கு பழங்கற்காலப் பண்பாடு நிலவியதை உறுதிப்படுத்துகின்றது. இங்குள்ள மண்ணடுக்குகளின் மண் மாதிரிகள் காலக்கணிப்பிற்காக சோதனைக் கூடத்துக்கு அனுப்பப்பட்டுள்ளன. மேலும் மண்மாதிரிகள் மண்ணாய்வுக்கும், தாவரக்கல் ஆய்வுக்கும் உட்படுத்தப்பட்டுள்ளன. இவற்றின் முடிவுகள் கிடைக்கும்போது இப்பண்பாடுகள் மற்றும் இவற்றின் சூழ்நிலைகள் குறித்த புதிய தகவல்கள் கிடைக்கும்.

# 55. ஓமலூர் வட்டாரத் தொல்லியல் கண்டுபிடிப்புகள்

இரா. ரமேஷ், சென்னை

## ஆண்டிக்கரை (செலக்கல்)



ஆண்டிக்கரை எனும் ஊர் மேட்டூரிலிருந்து வடகிழக்கே 18 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூருக்கு மேற்கே அமைந்துள்ள மலையில் இரும்புக்கால ஈமச்சின்னமான கல்வட்டங்கள் காணப்படுகின்றன. கல்வட்டங்களின் அளவு சுமார் 2 மீ முதல் 4 மீ வரை காணப்படுகின்றன.

## செம்மானப்பட்டி

ஓமலூரிலிருந்து வடமேற்கே 7 கி.மீ. தொலைவில் அரங்கனூர் செல்லும் சாலையில் அமைந்துள்ள செம்மானப்பட்டி ஊருக்கு வடக்கே ஒரு கி.மீ. தொலைவில் உள்ள ஏரிக்கு அருகில் வரலாற்று கால வாழ்விடப் பகுதியும் நடுகல்லும் காணப்படுகிறது. இவ்விடத்திற்கு அருகில் தற்கால பெருமாள் கோயில் அமைந்துள்ளது. மேலும் ஏரியின் அருகில் இரும்புக்கால ஈமச்சின்னமான நெடுங்கற்கள் இரண்டு நடப்பட்டுள்ளன. அவற்றின் உயரம் 2 மீ. ஆகும். ஆனால் ஈமச்சின்னங்கள் முழுவதும் அழிக்கப்பட்டுள்ளன. வாழ்விடப் பகுதியில் கருப்பு, சிவப்பு பானை ஓடுகள் அதிக அளவில் காணப்படுகின்றன.

## கல்லுக்கோட்டை



செம்மானப்பட்டியிலிருந்து மேற்கே 5 கி.மீ. தொலைவில் கல்லுக்கோட்டை அமைந்துள்ளது. இவ்வூர் ஒரு சிறிய குன்றின் மேல் அமைந்துள்ளது. கல்லுக்கோட்டை எனும் பெயர் அப் பகுதியில் காணப்பட்ட கற்பதுக்கையின் பெயரைக் கொண்டே வந்திருக்க வேண்டும். கல்லால் ஆன

கோட்டைச் சுவர் ஒன்றும் இங்கு காணப்படுகிறது. இரும்புக்கால ஈமச்சின்னங்கள் முழுவதும் அழிக்கப்பட்டு விவசாய நிலமாக பயன்படுத்தப்பட்டுள்ளதால் ஈமச்சின்னங்களில் காணப்படும் கற்பலகைகள், மூடுகற்கள் மட்டும் ஆங்காங்கே காணப்படுகின்றன.

## ஆரியகவுண்டனூர்

ஆரியகவுண்டனூர் எனும் ஊர் மேச்சேரியிலிருந்து வடக்கே சோலியனூர் செல்லும் வழியில் 6 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. ஊருக்கு மேற்கே இரும்புக்கால ஈமச்சின்னமான கற்குவை, கற்பதுக்கைகள், மூடுகற்கள் மற்றும் இடுதுளையுடன் கூடிய கற்பதுக்கை போன்றவை காணப்படுகின்றன. சுமார் 5 ஏக்கர் பரப்பளவில் 30க்கும் மேற்பட்ட கற்குவைகள் பல சிதைக்கப்பட்ட நிலையிலும் சில முழுமையாகவும் காணப்படுகின்றன. ஒரு சிதைக்கப்பட்ட கற்குவையிலிருந்து கற்பதுக்கை மூடுகல்லுடன் தெரிகிறது. மூடுகல்லின் அளவு 3ஒ3ஒ60 மீ. கற்பலகையின் அளவு 2ஒ1.5ஒ30 மீ. கற்பலகையில் ‘ரு’





கற்குவையிலிருந்து மூடுகற்கள் நன்கு வெளியே தெரிகின்றன. அவ்வாறு தெரியும் நடுகல் ஒன்றில் குழிகள் காணப்படுகின்றன. சிதைக்கப்பட்ட கற்பதுக்கையிலிருந்து கருப்பு சிவப்பு பானை ஓடுகள், பளபளப்பான சிவப்பு பானை ஓடுகள் சிதறிக் கிடக்கின்றன.

## கோபால் காடு

இவ்வூர் ஆரியகவுண்டனூரிலிருந்து மேற்கே 2 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இரும்புக்கால ஈமச்சின்னமான கற்குவை, கற்பதுக்கை போன்றவை சுமார் 5 ஏக்கர் பரப்பளவில் 30க்கும் மேற்பட்டவை காணப்படுகின்றன. 2 மீ. முதல் 12 மீ. வரையிலான விட்டம் கொண்ட கற்குவைகள் காணப்படுகின்றன.

# 56. நன்னிலம் வட்டாரத் தொல்லியல்

இரா. சுரேஷ், தஞ்சாவூர்

திருவாரூர் மாவட்டத்தில் நன்னிலம் வட்டம் காவிரியின் கிளை ஆறுகளான வளப்பாறு, சுக்கனாறு, புத்தாறு, முடிக்கொண்டான் ஆறு, திருமலைராஜன் ஆறு, அரசலாறு, நாட்டாறு மற்றும் நண்டலாறு பாசன பரப்பில் அமைந்திருக்கிறது. புத்தாறு மற்றும் முடிக்கொண்டான் ஆற்றுப் படுகையில் 2010இல் கள ஆய்வுகள் மேற்கொண்டபொழுது இரும்புகால மற்றும் இடைக்கால தொல்லியல் இடங்கள் கண்டுபிடிக்கப்பட்டன.

## முந்தைய ஆய்வுகள்

இவ்வட்டாரப் பகுதியில் வளப்பாற்று வடகரை படுகையில் 2008இல் தென்னிந்திய வரலாற்று நிலப்பட ஏடு திட்டத்திற்காக கள ஆய்வு மேற்கொண்ட செ. கௌரிசங்கரால் ஓரிரு இரும்புகால இடங்களும் அரசலாறு மற்றும் முடிகொண்டான் ஆற்றுப்படுகையில் வீ. செல்வகுமாரர் சில இரும்புகால இடங்களையும் கண்டுபிடித்தார். இக்கட்டுரை ஆசிரியர் கீழ்க்கண்ட தொல்லியல் இடங்களைப் புதியதாகக் கண்டுபிடித்துள்ளார்.

## கீழ்க்குடி (மதுரை வீரன் தோப்பு)

நன்னிலம் - குடவாசல் சாலையில் நன்னிலத்தில் இருந்து 4 கி.மீ. மேற்குத் திசையில், புத்தாற்றின் வடகரையில் அமைந்துள்ள இவ்வூரின் தெற்குத் தெருவின் வடதிசையில் உள்ள மதுரை வீரன் தோப்பில் புதிதாக தோண்டப் பெற்ற குளத்தின் தரைப் பகுதியில் இரண்டு உறை கிணறுகள் காணப் பட்டன. அதனைச் சுற்றிலும் செங்கல் நிரப்பப்பட்டு இருந்தது. செங்கல் 23x11x7 செ.மீ. அளவுடையதாக இருந்தன. வரலாற்றுக்கால சிவப்பு நிறமுடைய முழு உருவ மண்பானை ஒன்றும் கண்டறியப்பட்டது.



## பெரிய தோப்பு

மதுரை வீரன் தோப்பிலிருந்து வடமேற்கில் உள்ள பெரிய தோப்பில் காளவாய்க்கு (செங்கல் சூளை) மண் தோண்டும்போது தரைமட்டத்தில் இருந்து மூன்று அடிக்குக் கீழ் பரவலாக பானை ஓடுகள் காணப்பட்டது. இவற்றில் பெரும்பாலும் வேலைப்பாடுடன் கூடிய இடைக்காலத்தைச் சேர்ந்த பானை ஓடுகளே மிகுதியாகக் காணப்பட்டன. பிற்கால நில நிறக்கோடுகளுடைய வெள்ளை நிற பீங்கான் துண்டுகளும் கண்டெடுக்கப்பட்டது.

## அபிசேக கட்டளை

நன்னிலம் - குடவாசல் சாலையில் நன்னிலத்தில் இருந்து 5 கி.மீ. மேற்குத் திசையிலும் திருவாஞ்சியத்தி லிருந்து ஒரு கி.மீ. கிழக்குத் திசையிலும் முடிக்கொண் டான் ஆற்றின் தென்கரை யிலும் அபிசேக கட்டளை அமைந்துள்ளது. தற்போ தைய ஊரிருக்கைப் பகுதி யிலிருந்து கிழக்கே உள்ள வயல்வெளிப் பகுதியின் இடையே அமைந்திருக்கும் ஐந்து திடல்களில் முதலாவதாக உள்ள வீரன் திடலில் கை வேலைப்பாடுடன் கூடிய நீலநிற கண்ணாடி மணியும் குவார்ட்ஸிலான செதில் ஒன்றும், செரிந்த நிலையில் இரும்புத் துண்டு ஒன்றும் கண்டெடுக்கப்பட்டது. இதன் காலம் தெரியவில்லை. இத்திடலில் பறையர் குல தெய்வ வழிபாட்டில் உள்ள வீரன் சாமி சூலம் ஒன்றும் ஏழு சப்த கன்னிகளின் செங்கல் உருவங்களும் உள்ளன. ஏனைய திடல்களில் உடைந்த பானை ஓடுகள் சேகரிக்கப்பட்டன. அவைகள் பெரும்பாலும் இடைக்காலத்தைச் சேர்ந்தவை.



## கீழகரம் (கீழாரம்)

நன்னிலம் - கும்பகோணம் சாலையில் நன்னிலத்திலிருந்து 2 கி.மீ. மேற்கிறலும் முடிக்கொண்டான் ஆற்றின் தென்கரையை ஒட்டிய பகுதியில் அமைந்துள்ள கீழகரத்தில் பொ.ஆ. 11ஆம் நூற்றாண்டில் கட்டடப்பட்ட சிவன் கோயில் (ஆதிபுரீஸ்வரர்) ஒன்றுள்ளது. இக்கோயிலின் வலது புறத்தில் உள்ள வயலில் காளவாய்க்கு (செங்கல் சூளை) மண் தோண்டும்போது 4 அடிக்குக் கீழ் விலங்கின எலும்பு ஒன்றும், இரும்புக் கால கருப்பு வண்ண பானைகளின் ஓடுகளும், விளிம்புப் பகுதிகளும் சேகரிக்கப்பட்டது.



## சீகார் பாளையம்

நன்னிலத்திலிருந்து 2 கி.மீ. மேற்கிலும் முடிக்கொண்டான் ஆற்றின் வடகரையில் சீகார்பாளையம் அமைந்துள்ளது. தற்போதைய வாழ்விடப் பகுதியின் மேற்குப் பகுதியில் உள்ள திடலில் கள ஆய்வு மேற்கொண்ட போது இரும்புக் கால கருப்புசிவப்பு மற்றும் கருப்புப் பானை ஓடுகள் மற்றும் தாழியின் அடிப்பகுதி போன்றவை கண்டறியப்பட்டது.



## நன்னிலம் (நட்டுகளம்)

நன்னிலத்திலிருந்து ஒரு கி.மீ. மேற்கிலும், முடிக் கொண்டான் ஆற்றின் வடகரையிலிருந்து 500 மீ. தொலைவில் வயல்வெளியில் அமைந்துள்ள சுமார் 4 ஏக்கர் பரப்புள்ள திடல் பகுதியின் கிழக்குப் பகுதியில் இடைக்காலப் பானை ஓடுகளும் அழிந்த கோயில் தளத்தின் தடயங்களும் கிடைத்தன.

நன்னிலம் வட்டத்தில் இரும்புக் கால இடைக்கால எச்சங்கள் கிடைத்திருப்பதன் மூலம் இப்பகுதி தொன்மையான வரலாற்றைக் கொண்டு விளங்குவதை அறியமுடிகிறது. தற்கால குடியிருப்புகள் வேளாண் நிலங்களால் இப்பகுதியில் மேற்பரப்பு கள ஆய்வு வழியாக தொல்லியல் இடங்களை கண்டறிவது கடினமாக உள்ளது.



# 57. விழுப்புரம் பகுதியில் நில அளவுகோல்கள்

**வீ. செல்வகுமார், தஞ்சாவூர்**

விழுப்புரம் மாவட்டத்தில் திருவெண்ணைநல்லூர், திருவாமத்தூர், திருமாணிக்குழி ஆகிய கோயில்களில் நில அளவுகோல் குறியீடுகள் கண்டுபிடிக்கப்பட்டன.

கடலூரிலிருந்து 16 கி.மீ. தொலைவில் விழுப்புரம் சாலையில் அமைந்துள்ள திருமாணிக்குழி கோயிலின் உள்சுற்றுப் பாதையின் வடமேற்குச் சுவரில் இரு அளவைக் கோல்கள் + குறியீட்டால் குறிக்கப்பட்டுள்ளன.

இவற்றில் வடக்குப்புறச் சுற்றுப்பாதையின் விளிம்பில் உள்ள அளவுகோல் ஒன்றின் நீளம் 203 செ.மீ. ஆகும். இதில் 102 செ.மீ. மற்றும் 101 செ.மீ. இடையே இதன் அரை அளவு ஒரு செங்குத்துக்கோட்டால் குறிக்கப்பட்டுள்ளது. மேலும் இக்கோலின் மேற்குப் பகுதியில் 102 செ.மீ. தொலைவில் மற்றொரு செங்குத்துக்கோடு உள்ளது. இக்கோடு சுற்றுப்பாதையின் மேற்கு விளிம்பிலிருந்து 54 செ.மீ. தொலைவில் உள்ளது.

மற்றொரு அளவு கோல் மேற்குப்புறச் சுற்றுப்பாதையின் வடமேற்கு மூலையில் உள்ளது. இங்கு 54 செ.மீ. அளவுள்ள ஒரு கோல், ஒரு சூலக் குறியீடு மற்றும் + குறியீட்டால் குறிக்கப்பட்டுள்ளது.

திருவாமாத்தூர் விழுப்புரத்திற்கு வடகிழக்கே 20 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள திருவாமாத்தூர் அபிராமேஸ்வரர் கோயிலில் நான்கு அளவுகோல்கள் காணப்படுகின்றன.

கருவறையைச் சுற்றி உள்ள முதல் சுற்றுமதிற் சுவரின் பின்புறத்தில் கோப்பெருஞ்சிங்கனின் கல்வெட்டுக்குக் கீழ் உள்ள அளவுகோல் 419.5 செ.மீ. நீளமுடையது. இதன் மையப் பகுதியைக் குறிக்க 208.5 செ.மீ.லும், கால் பகுதியைக் குறிக்க 105 மற்றும் 106 செ.மீ.லும் செங்குத்துக் கோடுகள் உள்ளன.

இக்கோயிலின் பின்புறத்தில் உள்ள மேற்குக் கோபுரத்தின் நுழைவுவாயிலின் உட்பக்கச் சுவர்களின் அதிட்டானப் பகுதியில் இருபுறமும் ஒன்றாக இரண்டு அளவுகோல்கள் காணப்படுகின்றன. இவற்றின் கிழக்குப் பகுதியில் + குறியீடும், 82 செ.மீ.யிலும், 167 செ.மீ.யிலும் இரண்டு செங்குத்துக் கோடுகளும் உள்ளன. இவற்றின் மேற்குப் பகுதி மண்ணில் புதைந்துள்ளது. இக் கோல்களின் மொத்த நீளம் சுமார் 334 செ.மீ. ஆகும்.

கருவறையைச் சுற்றி உள் முதல் சுற்று மதிற்சுவரின் வடக்குப் பக்கத்தில் ஒரு அளவுகோல் குறிக்கப்பட்டுள்ளது. இதன் மொத்த நீளம் 327 செ.மீ.

ஆகும். இது 164, 163 செ.மீ. அளவுள்ள இரு பகுதிகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது.

திருவெண்ணைநல்லூர் விழுப்புரத்திலிருந்து 20 கி.மீ. தொலைவில் உள்ளது. இங்குள்ள கிருபாபுரீஸ்வரர் கோயிலில் நான்கு அளவுகோல்கள் உள்ளன.

முதல் அளவு கோல் கோபுரத்தின் வெளிப்புறத்தில் தெற்குப்புற அதிட்டானப் பகுதியில் உள்ளது. இது 200.5 செ.மீ. அளவுடையது. இது 100 மற்றும் 50 செ.மீ. அளவுள்ள பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

இரண்டாவதாக, முன் மண்டபத்தின் வெளிப்புறத்தில் வடக்கே அதிட்டானத்தில் அளவுகோல் குறியீடுகள் உள்ளன. இங்கு 261 செ.மீ.யில் இரு + குறியீடுகளும், பின்னர் 56 செ.மீ. இடைவெளி விட்டு 323 செ.மீ. இடைவெளியில் இரண்டு குறியீடுகளும் காணப்படுகின்றன. இவை இரண்டு தனித்த அளவுகோல்களைக் குறித்திருக்கலாம்.

மூன்றாவதாக திருச்சுற்று மாளிகையின் கிழக்குப்புறத்தில் அதிட்டானப் பகுதியில் அளவுகோல் குறியீடுகள் உள்ளன. இங்கு 162 செ.மீ. அளவுக்கிடையே இரண்டு குறியீடுகளும், 81 செ.மீ. இடைவெளிக்குப் பிறகு 116.5 செ.மீ. இடைவெளியில் இரண்டு குறியீடுகளும் உள்ளன. இவை இரண்டு தனித்த அளவுகோல்களைக் குறித்திருக்கலாம்.

நான்காவது அளவுகோல் திருச்சுற்று மாளிகையின் வடக்குப்புற அதிட்டானப் பகுதியில் உள்ளது. இங்கு இரு சூலக் குறியீடுகளுக்கிடையே 752 செ.மீ. இடைவெளியில் ஓர் அளவுகோல் குறிக்கப்பட்டுள்ளது.

திருவக்கரை விழுப்புரத்திற்கு வடகிழக்கே 20 கி.மீ. தொலைவில் உள்ளது. இங்குள்ள சந்திரமௌலீஸ்வரர் கோயிலின் முன்பு உள்ள மண்டபத்தில் அதிட்டானத்தில் ஒரு + குறியீடு மட்டும் உள்ளது. இங்குள்ள வேறு குறியீடுகள் அழிந்து போயிருக்கலாம். இம்மண்டபத்தில் அதிட்டானம் முடியும் இடம் இக்கோலின் மற்றொரு முனை என்று கொண்டால் இதன் நீளம் 362.5 செ.மீ.யாக எனக் கருதலாம்.

இங்குள்ள கோயில்களில் காணப்படும் அளவுகோல் குறியீடுகள் பல முழுவதுமாகவோ, பகுதியாகவோ அழிந்துவிட்டன. சில அளவுகோல் குறியீடுகள் அவற்றின் அளவோ அல்லது பெயரோ குறிப்பிடப்படாமல் உள்ளன. எனவே இவற்றின் காலத்தை நிர்ணயிப்பது கடினமாக உள்ளது.

# 58. வைகை ஆற்றுப் படுகை தொல்லியல்

பா. பாலமுருகன், புதுச்சேரி.

வைகை ஆற்றுப் பகுதியில் இதுவரை பல தொல்லியல் மற்றும் வரலாற்று ஆய்வுகள் இராபர்ட் புருஸ்பூட், கேவி. இராமன், குருராஜாராவ், கா. ராஜன், வீ. செல்வக்குமார் போன்ற ஆய்வாளர்களால் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இவ்வாய்வுகள் பெரும்பாலும் வைகை ஆற்றின் நீர்பிடிப்பு பகுதியான மேற்பகுதியில் அதாவது மதுரைக்கு மேற்கே உள்ள பகுதியில் மட்டுமே மேற்கொள்ளப்பட்டுள்ளன. இக்கட்டுரை மதுரையின் கரைப் பகுதியான வைகை ஆற்றின் இரு மருங்கிலும் ஆய்வு மேற்கொள்ளப்பட்டு ஏறத்தாழ 56 தொல்லியல் இடங்கள் கண்டுபிடிக்கப்பட்டமை குறித்தது.

இவ் ஆய்வில் இரும்புக்கால பண்பாட்டுக் கூறுகளைக் கொண்ட இடங்கள் அதிகளவில் காணப்படுகின்றன. பொதுவாக இவ்வாற்றின் வலக்கரையை விட இடக்கரையில் அதிக அளவு இரும்புக் கால இடங்கள் காணப்படுகின்றன. இங்கு காணப்படும் இரும்புக்கால ஈமச்சின்னங்களில் முதுமக்கள் தாழிகள் கொண்ட இடங்களே அதிகம் காணப்படுகின்றன. இத்தாழியானது உள்ளூர் மக்களால் குழுமை, மதமதக்கசால், குளுக்கை என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. பொதுவாக இவ்வாறு காணப்படும் இடங்கள் திடல் காடு என்றும், பொட்டல்காடு என்றும் அழைக்கப்படுகின்றன. மானாமதுரை, சிவகங்கை வட்டத்தில் கல்வட்டத்துடன் கூடிய கற்பதுக்கை, கல்வட்டத்துடன் கூடிய முதுமக்கள் தாழியும் அதிகளவில் காணப்படுகின்றன. இங்கு காணப்படும் கல்வட்டங்கள் செம்பாறங்கல்லால் ஆன கற்களைப் பயன்படுத்தி அமைக்கப்பட்டுள்ளன. இவ்விடங்கள் குந்தாங்கல் காடு என்று பொதுமக்களால் அழைக்கப்படுகின்றன.

இவ்வாற்றின் பகுதிகளில் காணப்படும் இரும்புக்கால இடங்களில் பொதுவாக கருப்பு சிவப்பு மட்பாண்ட வகையைச் சார்ந்த சிறிய பானைகள், கிண்ணங்கள் மற்றும் சிவப்பு மட்பாண்ட வகையைச் சார்ந்த சிறிய பானைகள் மற்றும் கருப்பு மட்பாண்ட வகையைச் சார்ந்த மூடிகள், தாங்கிகள் போன்றவைகள் காணப்படுகின்றன. அவற்றில் ஒரு சில இடங்களில் காவி வண்ணம் பூசப்பட்ட சிவப்பு நிற மட்பாண்டமும் கிடைக்கின்றன.

மேலும் வைகையாற்றின் இடக்கரையில் அமைந்துள்ள வாணி, புதுக்குளம், இளையான்குடி போன்ற பகுதிகளில் கண்ணாடி மணிகளும்,

சங்கு வளையல்களும் ஆய்வு மேற்கொள்ளப்பட்டபொழுது சேகரிக்கப்பட்டன. மேலும் கட்டிக்குளம், புதுக்குளம், கல்குளம் பறைக்குளம், நாகமுகுந்தன்குடி போன்ற பகுதிகளில் கருப்பு சிவப்பு மட்பாண்ட வகையைச் சார்ந்த பானையோடுகளிலும், சிவப்பு மட்பாண்ட வகையைச் சார்ந்த பானையோடுகளிலும் ஏணிபோன்ற குறியீடும், நட்சத்திரம் போன்ற குறியீடுகளும் கிடைக்கின்றன. இவை பொருந்தல், சிறுதாவூர் போன்ற இடங்களில் அகழாய்வில் கிடைத்த குறியீடுகளுடன் ஒத்துக்காணப்படுகின்றன.

பெரும்பாலான தொல்லியல் எச்சங்கள் நகரமயமாக்குதலின் காரணமாக அழிக்கப்பட்டு தொல்லியல் எச்சங்கள் இருந்தற்கான அடையாளம் இல்லாமல் காணப்படுகின்றன. ஆயினும் ஒரு சில தொல்லியல் இடங்கள் தொன்மை மாறாமல் காணப்படுகின்றன. கல்குளம், தெக்கூர், இளமனூர், இளையான்குடி, நாகமுகுந்தன்குடி, பறக்குளம், புதுக்குளம் போன்ற இடங்களைக் குறிப்பிடலாம்.

| இடம் | அட்ச ரேகை | தீர்க்க ரேகை |
|---|---|---|
| ஆலம்பச்சேரி | 78.53060 | 9.61939 |
| அனஞ்சூர் | 78.23784 | 9.86439 |
| அண்டக்குடி | 78.54926 | 9.53504 |
| அரசனேந்தல் | 78.46817 | 9.66782 |
| அரிமண்டபம் | 78.41404 | 9.65237 |
| அதிகரை | 78.59942 | 9.60224 |
| ஆத்தூர் | 78.44045 | 9.83725 |
| இளமனூர் | 78.64470 | 9.76326 |
| இளையான்குடி | 78.61039 | 9.62713 |
| இளமனூர் | 78.19838 | 9.89547 |
| இந்திரா நகர் | 78.405307 | 9.79248 |
| கச்சாத்தநல்லூர் | 78.55550 | 9.57372 |
| கடம்பன்குடி | 78.51012 | 9.75558 |
| கலியனேந்தல் | 78.32937 | 9.69524 |
| கல்குளம் | 78.49307 | 9.80500 |

| | | |
|---|---|---|
| காமன்கோட்டை | 78.69972 | 9.457185 |
| கரிசல்குளம் | 78.44629 | 9.61711 |
| கட்டனூர் | 78.33431 | 9.67456 |
| கட்டிகுளம் | 78.36601 | 9.70951 |
| கீழாயூர் | 78.60773 | 9062726 |
| கொடுமலூர் | 78.48063 | 9.47780 |
| கீழப்பெருங்கரை | 78.51100 | 9.57222 |
| கோ-ஐயர்மடம் | 78.87349 | 9.43502 |
| குளத்தூர் | 7879407 | 9.44148 |
| மேழாயூர் | 78.58880 | 9.63904 |
| மேழாய்க்குடி | 78.56197 | 9.51457 |
| மேலநெட்டூர் | 78.53673 | 9.62459 |
| மீனாட்சிபுரம் | 78.34811 | 9.79153 |
| நாகமுகுந்தன்குடி | 78.58798 | 9.66446 |
| பாம்புவிழுந்தான் | 78.49973 | 9.49200 |
| பனிக்கனேந்தல் | 78.57363 | 9.54284 |
| பறக்குளம் | 78.61413 | 9.71988 |
| பெரியகண்ணனூர் | 78.58005 | 9.72401 |
| பெரியநாகாட்சி | 7874507 | 9.46873 |
| பொதுவக்குடி | 78.54514 | 9.55830 |
| பொட்டபனையூர் | 78.22043 | 9.90965 |
| புதுக்குளம் | 78.58378 | 9.77545 |
| புதூர் | 78.41923 | 9.59649 |
| செவ்வூர் | 7874007 | 9.44687 |
| சிருபாலை | 78.64861 | 9.58959 |
| சோமத்தூர் | 78.42732 | 9.61328 |
| தரிகொம்பன் | 78.68111 | 9.59181 |
| தாயமங்கலம் | 78.62875 | 9.68730 |
| தொண்டூர் | 78.55922 | 9.63506 |

| தெ. புதுக்கோட்டை | 78.68108 | 9.52329 |
|---|---|---|
| வல்லம் | 78.68108 | 9.52329 |
| வாணி | 78.64545 | 9.57446 |
| வேளானேரி | 78.42394 | 9.60889 |
| வேளான்குளம் | 78.36852 | 9.83684 |
| வேலூர் | 78.42542 | 9.75046 |
| வீரவலசை | 78.43311 | 9.83293 |
| விசயன்குடி | 78.56617 | 9.65140 |
| விளத்தூர் | 78.35079 | 9.7224 |
| ஏனதிகோட்டை | 78.47299 | 9.62823 |
| தெக்கூர் | 78.41695 | 9.77928 |

# 59. தருமபுரி மாவட்டத்தில் பெருங்கற்கால ஓவியம்

த. பார்த்திபன், தருமபுரி

தருமபுரி மாவட்டத்தில் பாலக்கோடு வட்டத்தில் பாலக்கோட்டில் இருந்து சுமார் 4 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது பி.கொல்லப்பட்டியில் இருந்து மேற்கே வாழைத் தோட்டம் என்ற இடத்திற்கு செல்லும் சாலையில் சுமார் ஒரு கி.மீ. தொலைவில் சாலையின் இடதுபுறமாக முத்துராயன் குண்டு என்று அழைக்கப்படும் மலை ஒன்று உள்ளது. இம்மலை தனித்தப் பாறையாக இல்லாது பல பெரிய பெரிய பாறைக் குண்டுகளால் உருவாகியுள்ளது.

இம் மலையின் மேற்குப் பார்த்த திசையில் உள்ள பாறையில் இயற்கையாக அமைந்த இரு குழிவான பகுதிகள் உள்ளன. இக் குழிவான பகுதியில் வைத்துள்ள கற்கருவிகளை 'முத்துராயன்' என்று அழைத்து அப்பகுதி மக்கள் வழிபட்டு வருகின்றனர்.

இம்மலையின் பாறைகளில் வெளிப்புறத்தில் நான்கு தொகுப்பாக வெள்ளை வண்ணத்தால் தீட்டப்பட்ட பெருங்கற்கால ஓவியங்கள் காணப்படுகின்றன. இவற்றின் காலம் கி.மு.1000 எனக் கணிக்கலாம்.

பாறையின் கீழ்ப்பகுதியில் வடக்குமுகமாக தீட்டப்பட்டுள்ள ஓவியம் : விலங்கு மீது மனித வடிவம்.

இப்பகுதியில் கட்டத்துள் உள்ள ஒரு முக்கோணமும், இதற்கு அடுத்துத் தீட்டப்பட்ட கட்டங்கள் போன்ற வடிவங்கள் தெளிவற்றுத் தெரிகின்றன.

பண்டில் விளக்கு வடிவம் ஒன்று மேல்வரிசையில் தீட்டப்பட்டுள்ளது.

விலங்கு மீது மனித வடிவம் ஒன்றும், அருகில் வேறு ஒரு துணை மிருகம் ஒன்றும் தீட்டப்பட்டுள்ளன. குதிரை மீது அமர்ந்த மனிதனும், வேட்டைக்கு உடன் அழைத்துச் சென்ற நாய் ஒன்றின் காட்சியாக இதை உருவகிக்க முடிகிறது.

இரண்டு மனிதவடிவங்கள் தெளிவாக உள்ளன. மற்ற வடிவங்கள் குறியீடுகள் போலத் தோற்றம் தரும் இவை பெரிதும் சிதைந்துள்ளன.

குறியீடு மற்றும் மனித உருவமும் அடுத்து இரண்டு தெளிவற்ற குறியீடுகளும் இடம்பெற்றுள்ளன. இதில் இடம்பெற்றுள்ள முத்திரையை ஒத்த குறியீட்டை நாம் கீழ்வாலை ஓவியத்திலும் காணமுடிகிறது.

# 60. கோவை வட்டாரப் பகுதிகளில் தொல்லியல் கண்டுபிடிப்புகள்

டி.வி. கனகரத்தினம், புதுச்சேரி

குடகொங்கு, மீகொங்கு என்றழைக்கப்பட்ட கோவை மாவட்டத்தின் கோவை வட்டத்தில், கோவையிலிருந்து சுமார் 15 கி.மீ. தொலைவில் மேற்கே குருடிமலை அடிவாரத்தின் ஊரான சின்னத் தடாகத்தின் சுற்று வட்டாரப் பகுதிகளில் இரும்புக் காலம் மற்றும் வரலாற்றுக் காலத்திற்கான எச்சங்கள் களஆய்வில் கண்டறியப்பட்டுள்ளன. அவை முறையே, இரும்புக்கால எச்சங்களான கல்பதுக்கைகள், முதுமக்கள் தாழிகள், கருப்பு - சிவப்பு மண்பாண்ட துண்டுகள் போன்றவை குருடி மலையின் அடிவாரத்தில் அமைந்துள்ள ஊர்களான 24, வீரபாண்டி, சின்னத்தடாகம், நஞ்சுண்டாபுரம், வரப்பாளையத்திலும், வரலாற்றுக்கால எச்சமான இரண்டு வீரகற்கள் ஆனைகட்டிப் பகுதியில் அமைந்துள்ள சேம்புக்கரையிலும் கண்டறியப்பட்டுள்ளன.

## புதிய கண்டுபிடிப்புகள்

களஆய்வில் புதியதாகக் கண்டறியப்பட்ட இரும்புக்கால இடங்கள் நிலவிட அமைப்பு முறையில் மேற்கிலிருந்து கிழக்காக 24 வீரபாண்டி, சின்னத்தடாகம், நஞ்சுண்டாபுரம், வரப்பாளையம் என தொடர்ச்சியாக குருடிமலை அடிவாரத்தில் அமைந்துள்ளது.

## 24. வீரபாண்டி



இப்பகுதியில் இரும்புகால புதைவிடங்கள் சுமார் 10 ஏக்கர் பரப்பளவில் கண்டறியப்பட்டுள்ளது. இங்கு கல்வட்டத்துடன் கூடிய கல்பதுக்கைகள் கல்வட்டத்துடன் கூடிய கற்குவை, கல்வட்டத்துடன் கூடிய முதுமக்கள் தாழிகள் காணப்படுகின்றன. இக்கல்வட்டங்கள் 3 மீ முதல் 15 மீ விட்ட அளவுகளில் உள்ளன. இவ்விடத்தில் பளபளப்பான கருப்பு மண்பாண்ட துண்டுகள், கருப்பு - சிவப்பு மட்கலன்களும் உடைந்த துண்டுகள் காணப்படுகின்றன. இப்பகுதி, உள்ளூர் மக்களால் 'மூலைக்காடு' என அழைக்கப்படுகிறது.

## சின்னத்தடாகம்



24. வீரபாண்டியிலிருந்து கிழக்குத் திசையில் சுமார் 2 கி.மீ. அமைந்துள்ள சின்னத்தடாகம் ஹால் இரும்புக் காலத்தைச் சார்ந்த மட்கலத்துண்டுகள் கிடைக்கின்றன. இங்கு கல்வட்டங்கள் வேளாண்மைப் பயன்பாட்டிற்காக முற்றிலும் சிதைக்கப்பட்டு விட்டது. செங்கல் உற்பத்திக்காக மண்ணைத் தோண்டும்பொழுது இரும்புக்கால எச்சங்கள் வெளிப்படுகின்றன. இப்பகுதியில் கள ஆய்வு மேற்கொண்ட பொழுது, கட்டை விரல் அச்சுகொண்ட உடைந்த முதுமக்கள் தாழியின் ஒரு பகுதி கிடைத்துள்ளது.

இதோடு, உடைந்த நிலையில் சிறிய கருப்பு - சிவப்பு மண்கலம் கண்டெடுக்கப்பட்டது. அதன் உயரம் 5.5 செ.மீ. வாயின் அகலம் 7.5 செ.மீ. ஆகும். இவ்விடம் குருடி மலையின் எல்லையில் அமைந்துள்ளது. அவ்வூர் மக்கள் 'கொத்துக்காடு' என இப்பகுதியை அழைக்கின்றனர்.

## நஞ்சுண்டாபுரம், வரப்பாளையம்

சின்னத்தடாகத்திற்கு அடுத்துள்ள மலையின் எல்லையில் நஞ்சுண்டாபுரம், வரப்பாளையம் ஊர்கள் தொடர்ச்சியாக அமைந்துள்ளன. இங்கு கல்வட்டங்கள் வேளாண்மைப் பயன்பாட்டிற்காக முற்றிலும் சிதைக்கப்பட்டு விட்டது. செங்கல் உற்பத்திக்காக மண்ணைத் தோண்டும்பொழுது இரும்புக்கால எச்சங்கள் வெளிப்படுகின்றன. ஆயினும் செங்கல் உற்பத்திக்காக எச்சங்கள் முழுமையாக சிதைக்கப்பட்டு வருகின்றன.



சின்னத்தடாகத்திலிருந்து சுமார் 10 கிமீட்டருக்கு மேற்கே ஆனைக்கட்டி ஒதுக்கப் பட்ட காட்டுப் பகுதியில் அமைந்துள்ள பழங்குடி மக்களின் ஊரான சேம்புக் கரையின் சுடுகாட்டில் ஓர் புலிகுத்திக் கல்லும், திட்டுக் கல்லுக்கு எதிர்புறம் மற்றொரு நடுகல்லும் கண்டறியப்பட்டுள்ளன.

## நடுகல் 1

சுடுகாட்டில் அமைந்துள்ள நடுகல்லின் நீளம், அகலம், உயரம் முறையே 83 செ.மீ., 23

செ.மீ., 86 செ.மீ. ஆகும். அதில் ஒரு வீரன் நின்ற நிலையில் வலது கையில் வாளும், இடது கையில் கேடயமும், கைகளில் வளையமும், காலில் தண்டையும் அணிந் துள்ளான். இரண்டாவது வீரன் பாயும் புலியை தன் வாளால் குத்துவது போல அமைந்துள்ளது. இவ்வீரனும் கைகளில் வளையமும், காலில் தண்டையும் அணிந்துள்ளான். இக்கல்லைத் தெய்வமாக அம்மக்கள் வழிபடுகின்றனர்.

## நடுகல் 2

நடுகல் 1இலிருந்து கிழக்கு திசையில் 100 மீ. தொலைவில் திட்டுக்கல் என்றழைக்கப்படும் கல்லுக்கு எதிர்புறம் நடுகல் 2 உள்ளது. இக்கல்லின் நீளம், அகலம், உயரம் முறையே 75 செ.மீ., 10 செ.மீ., 92 செ.மீ. ஆகும். அதில் வீரன் ஒருவன் தன் வாளால் பாயும் புலியை குத்துவதுபோல உள்ளது.

தற்போதைய கள ஆய்வில் கண்டறியப்பட்டுள்ள இடங்களில் இரும்புக்கால எச்சங்கள் கிடைத்துள்ளதால் சின்னத்தடாக வட்டாரப் பகுதிகளில் மனித நாகரிகம் வளர்ந்துள்ளதை அறிய இயலுகின்றது.

## பாறை ஓவியங்கள்

சின்னத்தடாகத்திற்கு சுமார் 3 கி.மீ. தொலைவில் கிழக்கில் வரப்பாளையத்தில் அமைந்துள்ள பொன்னுத்து அம்மன் கோவிலுக்கு மேலாக குருடி மலையில் அமைந்துள்ள மல்லாண்டியப்பன் குகையின் முகப்பில் ஓவியங்கள் தற்போதைய கள ஆய்வில் கண்டறியப்பட்டுள்ளது. இங்கு சிவப்பு நிற ஓவியங்களுக்கு மேலாக வெள்ளை நிற ஓவியங்கள் வரையப்பட்டுள்ளதால் சிவப்பு நிற ஓவியங்கள் வெள்ளை நிற ஓவியங்களைவிட காலத்தால் முந்தியவை ஆகும்.

## சிவப்பு நிற ஓவியங்கள்

மல்லாண்டியப்பன் பாறையின் முகப்பில் 6 மீ. நீளமும், 10 மீ உயரமும் கொண்ட அளவில் ஓவியங்கள் வரையப் பட்டுள்ளன. ஓவியங்கள் முறையே இடப்புறத்திலிருந்து வலமாக, மேலிருந்து, புறவைத்தலைகொண்ட மனிதன் தன் கைகளில் வில் வைத்துள்ளான். அதற்கு எதிராக சிவப்பு நிறத்தில் வரையப்பட்ட உருவங்கள் தெளிவற்று காணப்படுகிறது. அதையடுத்து, சிவப்பு நிறத்தில் தலையில்லாத மனித உருவம் உள்ளது. இது முன்னர் தலையோடு வரையப்பட்டு, அப்பாறைப் பகுதி உடைந்திருக்க வாய்ப்புள்ளது. இரண்டாவது வரியில் அதாவது பாறை தலைக்கொண்ட மனித உருவத்திற்கு கீழாக, சிவப்பு நிறத்தில் கோள வடிவத்தில் ஓர் உருவம். அதையடுத்து மற்றொரு உருவம் காணப்படுகிறது. அதையடுத்து மரம் போன்ற உருவமும், புல் போன்ற உருவமும் உள்ளது. மரத்திற்கு கீழாக, இரண்டு மாடுகள் ஒன்றோடு ஒன்று மோதுவது போலவும், ஒரு மாட்டிற்கு பின் மற்றொரு மாட்டின் உருவம் துரத்துவது போலுள்ளது. இதற்கு கீழ் ஓர்

உருவம் உள்ளது. அதற்கு கீழ் சுமார் 60 செ.மீ. உயரம் கொண்ட பறவையின் தலைக்கொண்ட மனிதன் தன் வலது கையை உயர்த்தி உள்ளான். அதற்கு கீழ் பறவைத் தலைக்கொண்ட இரு மனிதர்கள் உள்ளனர். இவ்வகையான பறவைத் தலைகொண்ட மனிதர்கள் கீழ்வாளை ஓவியங்களிலும் காணப்படுகிறது. எருது போன்ற ஓர் உருவம் வெளிப்புறக்கோடு வெள்ளை நிறத்திலும், உட்புறத்தில் சிவப்பு நிறத்திலும் உள்ளது.

## வெள்ளை நிற ஓவியங்கள்

வெள்ளை நிற ஓவியங்களில் பல ஓவியங்கள் தெளிவற்றுக் காணப்படுகிறது. ஓர் உருவத்தில் உடல் பகுதி தெளிவாகவும், தலைப்பகுதி தெளிவற்றும் உள்ளது. இதன் கால்கள், மற்ற பகுதிகளைக் கொண்டு மானாக இருக்கலாம் என ஊகிக்கப்படுகிறது. மற்றொரு உருவத்தில் தலைப்பகுதியும், உடலின் மேல்பகுதி தெளிவாகவும், கால்கள் உள்ளப்பகுதி அழிந்துள்ளது. அதன் உடலில் புள்ளிகள் காணப்படுகிறது.

## குறியீடுகள்

வட்டத்திற்குள் கூட்டல் குறி இட்டது போல குறியீடுகள் உள்ளது. ஒன்று சிவப்பு நிறத்திலும், மற்றொன்று வெள்ளை நிறத்திலும் உள்ளது. இவ்வகையான குறியீடுகள் கீழ்வாளையிலும் கண்டறியப்பட்டுள்ளது.

## காலம்

இவ்வோவியங்கள் உள்ள மலையின் அடிவாரத்தில் இரும்புக்கால எச்சங்கள் உள்ளன. மேலும் வெள்ளை நிற ஓவியங்கள் இரும்புக் காலத்தோடு ஒப்பிடப்படவதால் இவை இரும்புக்காலத்தைச் சார்ந்த ஓவியங்களாக இருக்கலாம்.

# 61. புதுக்கோட்டைப் பகுதியில் நுண்கற்காலப் பண்பாட்டிடங்கள்

ஆ. ராஜா, தஞ்சாவூர்

புதுக்கோட்டை வட்டாரத்தில் மேற்பரப்பு களாய்வுகள் நுண்கற்காலப் பண்பாட்டுச் சான்றுகளும் இரும்புக் காலம் மற்றும் இடைக்காலப் பண்பாட்டுச் சான்றுகளும் புதியதாகக் கண்டறியப்பட்டன. இப்பண்பாட்டுச் சான்றுகள் பெரும்பாலும் வண்டல் மண் படிவுகளிலும், செம்மண் படிவுகளிலும் செம்மண்ணுடன் கூடிய சரளைக்கல் படிவுகளிலும், லேட்ரைட் பாறைப் படிவுகளிலும் காணப்படுவதை அறிய முடிகின்றது. ஆகவே இப்பகுதியில் நுண்கற்காலப் பண்பாடானது இன்றிலிருந்து 15,000 ஆண்டுகளுக்கு முன்பு நிலவிருந்திருக்கலாம். இவ்வட்டாரத்தில் நுண்கற்காலப் பண்பாட்டின் பரப்பளவானது சுமார் 60 கி.மீ. தொலைவிற்கு காணப்பட்டுள்ளதை அறிய முடிகின்றது. அதாவது புதுக்கோட்டைக்கு தெற்கே அரிமளம் வரை சுமார் 35 கி.மீ. தொலைவு வரையும், புதுக்கோட்டைக்கு வடக்கே பெருங்களூர் வரை சுமார் 25 கி.மீ. வரையும் நுண்கற்காலப் பண்பாட்டு மக்களின் பரவல் இருந்துள்ளதைக் கிடைத்தச் சான்றுகளின் அடிப்படையில் அறியமுடிகின்றது. இம்மாவட்டத்தில் கீழ்க்கண்ட ஊர்கள் குறிப்பிடத்தக்கவை.

| வ.எண். | இருப்பிடம் |
|---|---|
| 1. | வாகவாசல்<br>(புதுக்கோட்டை அண்டகுளம் சாலையில் 8 கி.மீ. தொலைவு) |
| 2. | ரஹீமாபீதர்ஹா<br>(புதுக்கோட்டை - அண்டகுளம்சாலை) |
| 3. | சாயக்கடை புதுக்கோட்டை<br>(புதுக்கோட்டை- தஞ்சாவூர் சாலை 8 கி.மீ. தொலைவு) |
| 4. | சத்திரப்பட்டி<br>(புதுக்கோட்டை - அண்டகுளம் 10 கி.மீ. தொலைவு) |
| 5. | முக்காணிப்பட்டி<br>(புதுக்கோட்டை - தஞ்சாவூர் சாலையிலிருந்து வடமேற்கே 13 கி.மீ. தொலைவு |
| 6. | நெப்பியப்பட்டி<br>(புதுக்கோட்டை - மழையூர் வழி பட்டுக்கோட்டையிலிருந்து 2 கி.மீ. தொலைவு |

| 7. | கல்லுப்பள்ளம்<br>(புதுக்கோட்டை மணிப்பள்ளம் சாலை) |
|---|---|
| 8. | புவரசகுடி<br>(புதுக்கோட்டை - அறந்தாங்கி சாலை) |
| 9. | திருவிடையார்பட்டி<br>(புதுக்கோட்டை - அறந்தாங்கி சாலை பூவரசக்குடி யிலிருந்து தெற்கே 3 கி.மீ. |
| 10. | சீகம்பட்டி<br>(அரிமளத்திற்கு வடக்கு) |
| 11. | கீழப்பனையூர்<br>(அரிமளத்திற்கு - தெற்கே 4 கி.மீ. தொலைவு) |
| 12. | கீழக்காயாம்பட்<br>(புதுக்கோட்டை - மணிப்பள்ளம்-ஆலங்குடி சாலை) |
| 13. | மாங்கனாம்பட்<br>(புதுக்கோட்டை - மணிப்பள்ளம் - ஆலங்குடி சாலை) |
| 14. | கணேசபுரம்<br>(புதுக்கோட்டை - மணிப்பள்ளம் - ஆலங்குடி சாலை) |
| 15. | சின்னையாசத்திரம்<br>(புதுக்கோட்டை - தஞ்சாவூர் சாலை |
| 16. | பெருங்கொண்டான்விடுதி<br>(புதுக்கோட்டை- தஞ்சாவூர் சாலை) |
| 17. | மிரட்டுநிலை<br>(அரிமளம் - புதுக்கோட்டை சாலை) |
| 18. | மாஞ்சன்விடுதி<br>(புதுக்கோட்டை - மணிப்பள்ளம் -ஆலங்குடி சாலை |
| 19. | ரைஸ் மில்<br>(புதுக்கோட்டை - தஞ்சாவூர் சாலை 15 கி.மீ. தொலைவு) |
| 20. | பெருங்களூர்<br>(புதுக்கோட்டை - தஞ்சாவூர் சாலை 18 கி.மீ. தொலைவு) |

# 62. வில்லுனி ஆற்றுப் பகுதியில் புதிய தொல்லியல் இடங்கள்

த. தங்கதுரை, புதுக்கோட்டை

புதுக்கோட்டை மாவட்டத்தில் வில்லுனி ஆற்றின் கரைப் பகுதிகளில் மேற்கொள்ளப்பட்ட கள ஆய்வில் பெருங்கற்கால, வரலாற்றுக்கால வாழ்விடங்கள் மற்றும் இரும்பு உருக்குமிடங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. அவை பின்வருமாறு:

**வடக்கு அக்ரஹாரம்**

இவ்வூர் ஆலங்குடியில் இருந்து குளவாய்ப்பட்டி செல்லும் வழியில் 7 கி.மீ. தொலைவில் வடக்கு அக்ரஹாரம், வெண்நாவல்குடி பஞ்சாயத்தில் அமைந்துள்ளது. ஊரின் வடகிழக்கே சோரகுளம் உள்ளது. இதன் கீழ்க் கடையில் அணையை ஒட்டிய பகுதியில் பெருங்கற்கால ஈமக்காடு உள்ளது. இங்கு செம்புரைக்கல் கல்வட்டங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அவற்றில் மூன்று முழுமையாகவும் மற்றவை சிதைந்த நிலையிலும் உள்ளன.

**பரவக்கோட்டை**

ஆலங்குடியிலிருந்து அறந்தாங்கி செல்லும் வழியில் 13 கி.மீ. தொலைவில் பரவக்கோட்டை உள்ளது. பரவக்கோட்டையின் வடக்கே ஆற்றின் தென்கரையில் பெருங்கற்கால ஈமக்காடு உள்ளது. இங்கு செவ்வகவடிவிலான ஈமப்பேழைகள் காணப்படுகின்றது. இங்குள்ள ஈமப்பேழைகள் சராசரியாக 177 செ.மீ. முதல் 183 செ.மீ. நீளமும் 92 முதல் 84 செ.மீ. அகலமும் 4 செ.மீ. கனமும் கொண்டு காணப்படுகிறது.

**சுடுமண் உருவங்கள்**

களமேற்பரப்பாய்வில் ஒரு சுடுமண் உருவம் கண்டெடுக்கப் பட்டது. 41 செ.மீ. உயரமும் 2 செ.மீ. அகலமும் கொண்ட உருளை வடிவத்தில் உள்ள இதன் கழுத்துப் பகுதி உடைந்து தலை மட்டுமே காணப்படுகிறது. முகத்தில் ஒருபுறம் சிதைவடைந்தும் காது, மூக்கு, கண் அதன் அமைப்பிற்கு ஏற்ப முழு உருவமாக இல்லாமல் ஓரங்களில் கோட்டோவிய முறையில் புடைப்புடன் புள்ளிகள் கொண்டு காட்டப்பட்டுள்ளது.

**தெற்கு திருநாளூர்**

ஆலங்குடியிலிருந்து ஆவணத்தாங்கோட்டை வழியாக அறந்தாங்கி

செல்லும் சாலையில் 14 கி.மீ. தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது. இங்கு வில்லுனி ஆற்றின் வடகரையில் சாலையின் வலது புறமாக 30 ஏக்கர் பரப்பளவில் பெருங்கற்கால ஈமக்காடானது அமைந்துள்ளது. இங்கு புதைக்குழித்தாழிகள் அதிக எண்ணிக்கையில் காணப்படுகின்றன. பானையின் பிரிமனை, ஆழமான கிண்ணம், பானை, கிண்ணம், கருப்பு, சிவப்பு, கருப்பு சிவப்பு நிற பானை ஓடுகளும், இரும்பு ஆயுதங்களும் செம்பினால் ஆன கிண்ணம் ஒன்றும் இங்கு கண்டறியப்பட்டன.

**இராமசாமிபுரம்**

சுப்பிரமணியபுரத்திலிருந்து வடக்கே 6 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள இவ்வூரில் இரும்புக் காலவாழ்விடப் பகுதியினை இவ்வூர் மக்கள் மணமேடு எனவும் அம்பலத்திடல் எனவும் அழைக்கின்றனர். 150 ஏக்கர் பரப்பளவு கொண்ட மணமேட்டில் 100 ஏக்கர் பரப்பளவு சுப்பிரமணியபுரம் பஞ்சாயத்திலும் 50 ஏக்கர் ராமசாமிபுரம் பஞ்சாயத்திலும் அமைந்துள்ளது. இவ்வாழ்விடப் பகுதியில் கருப்பு, கருப்பு சிவப்பு, சிவப்பு நிற பானை ஓடுகளும், பளபளப்பான சிவப்பு நிறம் பூசப்பட்ட பானை ஓடுகளும் காணப்படுகிறது. இதனுடன் மண்ணால் ஆன சுடுமண் பாசி மணிகளும், பானை ஓடுகளில் கீறல் குறியீடுகளும் கண்டறியப்பட்டுள்ளன. இங்கு காணப்படும் மட்பாண்ட வகைகளில் சிறிய கிண்ணம், சிறிய பானை, பானை, கிண்ணம், பெரிய கிண்ணம் ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

**தொழுவங்காடு**

அறந்தாங்கியிலிருந்து பட்டுக்கோட்டை செல்லும் சாலையில் 5 கி.மீ. தொலைவில் இராஜேந்திரபுரத்திற்கு தெற்கில் இவ்விடம் அமைந்துள்ளது. இங்கு 80 ஏக்கர் பரப்பளவில் பெருங்கற்கால ஈமக்காடானது உள்ளது. இங்கு கருப்பு, சிவப்பு, கருப்பு சிவப்பு நிற ஆழமான கிண்ணம், பானை, பெரிய கிண்ணம் கண்டறியப்பட்டுள்ளது. மேலும் வில்லுனி ஆற்றுப் பகுதியில் களமேற்பரப்பாய்வு மேற்கொண்ட பொழுது பின்வரும் ஊர்களில் தொல்லியல் சான்றுகள் கண்டறியப்பட்டன. மயிலாடிக்காடு, தெற்கு அரையப்பட்டி, வன்னியன் விடுதி, மரடக்கி, கரிசக்காடு, குளமங்கலம் தெற்கு, நெய்வத்தளி, வல்லவாரி, விளாங்குளம், வில்லுனிவயல் போன்ற பெருங்கற்காலத் தொல்லியல் இடங்களும் இதனோடு உழுந்தங்காடு என்னும் வரலாற்றுக்கால இரும்பு உருக்குமிடம் ஒன்றும் ஆயிங்குடி, ரெட்டவயல், ஊமத்தநாடு ஆகிய ஊர்களில் வரலாற்றுக்கால வாழ்விடப் பகுதிகளும் கண்டறியப்பட்டன.

# 63. சங்கரன்கோவில் பகுதியில் உரோமானிய நாணயம் கண்டுபிடிப்பு

சொ. சாந்தலிங்கம், மதுரை

திருநெல்வேலி மாவட்டம் சங்கரன்கோவில் வட்டம் பெருமாள்பட்டி கிராமத்தில் சிங்கத்திரடு என்னும் இடத்திற்கு அருகில் திரு. வெள்ளைச்சாமி நாடார் என்பவரிடமிருந்து 33 காசுகள் சங்கரன்கோயில் வட்டாட்சியரால் சேகரிக்கப்பட்டன. அச்சமயம் வெளிவந்த நாளிதழ் செய்தியின் அடிப்படையில் 28.10.2009 அன்று நானும், தஞ்சைப் பல்கலைக்கழக ஆட்சிக்குழு உறுப்பினர் திரு. தொ. பரமசிவன் அவர்களும் இக்காசுகளை ஆய்வு செய்தோம். பின்னர் திரு. சொ. சந்திரவாணன் அவர்களால் இக்காசுகள் ஒளிப்படம் எடுக்கப்பட்டன.

மொத்தம் கிடைத்த 33 காசுகளில் ஒரு வெள்ளியாலான உரோமானிய நாணயம் மிகவும் குறிப்பிடத்தக்கது. மற்றவற்றில் சுந்தரபாண்டியன் பெயர் பொறித்த காசுகள் இரண்டும், கோனேரிராயன் பெயர் பொறித்த நாணயம் ஒன்றும், இராசராசன் காலத்திய செப்புக் காசுகளும், ஓரிரு நாயக்கர் காலக் காசுகளும் அடங்கும். திரு. வெள்ளைச்சாமி தனது நிலத்தில் அவ்வப்போது இக்காசுகளைச் சேகரித்ததாகத் தெரிவித்தார். சிங்கத்திரடு என்னும் இடம் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை அகழாய்வு செய்த மாங்குடி என்னும் ஊரின் அகழாய்வுக் களத்திற்கு மிக அருகிலேயே உள்ளது குறிப்பிடத்தக்கது.

## உரோமானிய நாணயம்

சுமார் 3 கிராம் எடையுள்ள வெள்ளி நாணம் இது. இக்காசின் முன்பகுதியில் (obverse) அரசனின் தலை வலப்புறம் பார்த்தவாறு உள்ளது. காசின் ஓரங்களில் தலையைச் சுற்றிலும் ரோமானிய எழுத்துக்கள் உள்ளன. இவ்வெழுத்துக்களைக் கீழ்க்கண்டவாறு படிக்கலாம்.

CASESAR AUGUSTVS (DIVF) : PATERAATR (IAE)

காசின் பின்புறத்தில் இரண்டு சிறுவர்கள் வாளும் கேடயமும் கொண்டு முரசு அறைவதுபோலக் காட்டப்பட்டுள்ளனர். இவர்களை அகஸ்டஸின் பெயரர்கள் என்றும் அவர்களது பெயர் காலஸ், லூசியஸ் என்றும் கூறுவர். இவ்வுருவங்களைச் சுற்றியும் காசின் விளிம்பில் கீழ்க்கண்ட வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது.

AVUVSTI FEOSDESIGPR INCE IVVENT

இத்துடன் கீழே கிடைக்கோடும் அதன் அடியில்

CLCA (ESARES) என்றும் பொறிக்கப்பட்டுள்ளது.





இக்காசு வழக்கமாகக் கூறப்படும் 'இரண்டு சீசர்' காசு என்னும் வகையைச் சேர்ந்தது. அகஸ்டஸ் சீசரின் காலத்தைச் (கி.மு. 31 - கி.பி. 14) சேர்ந்தது இது.

# 64. அறுவகை இலக்கணம் கூறும் அளவைக் குறியீடுகள்

சு. சிவா, ஆரல்வாய்மொழி

*வண்ணச் சரபம் தவத்திரு தண்டபாணி சுவாமிகள் 19ஆம் நூற்றாண்டின் தமிழ்ப் பெருமக்களுள் தலைசிறந்தவராவார். எழுத்திலக்கணம் எனும் பகுதியில் தமிழ் எழுத்துக்கள் அனைத்துக்கும் தம் காலத்தில் வழங்கிய வரிவடிவத்தைத் தெளிவாக நூற்பா வடிவில் விளக்கியுள்ளார். அகர முதல் னௌகர இறுதியான எழுத்துக்களுக்கு மட்டுமல்லாமல் கணக்கில் பயன்படும் அலகெழுத்துக்கள், எழுத்துச் சுருக்கத்தின் பொருட்டு ஆளப்படும் கூட்டெழுத்துக்கள், குறிப்பெழுத்துக்கள் ஆகியவற்றின் வரிவடிவங்களையும் சுட்டியுள்ளார். இது அறுவகை இலக்கணத்திற்கே உரிய தனிச் சிறப்பாகும்.*

*எழுத்திலக்கணத்தில் நூற்பா வடிவில் கூறப்பட்டுள்ள கீழலகு எழுத்துக்கள், நடு அலகு எழுத்துக்கள், மேல் அலகு எழுத்துக்கள், அளவு அலகு எழுத்துக்கள், கூட்டெழுத்துக்கள் போன்றவற்றைக் குறியீடுகளாக வடிவமைத்துத் தரப்பட்டுள்ளன.*

*தண்டபாணி சுவாமிகள் கீழலகு எழுத்துக்கள் - 10, நடு அலகு எழுத்துக்கள் - 10, மேல் அலகு எழுத்துக்கள் - 11, அளவு அலகு எழுத்துக்கள் - 7, கூட்டெழுத்துக்கள் - 17 ஆக 55 எழுத்துக்கள் குறித்து நூற்பா வடிவில் விளக்கியுள்ளார்.*

**அலகு [அளவை] எழுத்துக்கள்**

**உயிர்மெய் யெழுத்தும் உரைக்குமாறு உரைத்தனம்**

**அலகினைக் [1]கீழெனு, [2]நடுவென, [3]மேலென**

**[4]அளவெனப் பிரித்தவ் வாறே அவற்றின்**

**உருவுடன் ஒலியும் உரைக்குதும் முறையே** **[எழு.சூ. எண்.36]**

*அலகு (அளவை) எழுத்துக்கள் எனும் தலைப்பில் அமைந்த நூற்பாவில், 1. முந்திரிக்கு கீழ் இம்மிவரை உள்ளவை கீழலகு என்றும், 2. ஒன்றிற்குக் கீழ் முந்திரி வரை உள்ளவை நடு அலகு என்றும், 3. ஒன்றும் அதற்கு மேற்பட்டனவும் மேல் அலகு என்றும், 4. முகத்தலளவைப் பற்றிய எண் வடிவங்கள் 'அளவு' என்றும் தண்டபாணி சுவாமிகள் குறிப்பிட்டுள்ளார்.*

கீழலகு எழுத்துக்கள்

ணவ்வே முந்திரி[1] ட அரைக்காணி[2]

நிலைவரை யொன்றே காணி[3] ஆகும்
தவ்வே மா[4]அதன் ஈற்றைக் குறைத்து
வலப்புறம் நீட்டல் இருமா[5] ஆகும்
கூவொடு சூவும் மும்மா[6] நான்மா[7]
எகரமும் ளகரமும் கால்[8] அரை[9] உகரத்து
ஈற்றைக் குறைத்தொரு ரகரம் பொருத்தில்
முக்கால்[10] எனப்படும் அரைமா அரைக்கால்
ஆகிய பிறவும் அலகு நிலையில்
பிறழா இயல்பிற் பிறங்கும் ஆதலின்
கிளத்திலம் இவைதாம் கீழலகு உறுப்பே. (எழு.சூ. எண் 37)

*தண்டபாணி சுவாமிகள் கீழலகு எனும் நூற்பாவில் முந்திரி, அரைக்காணி, காணி, மா, இருமா, மும்மா, நான்மா, கால், அரை, முக்கால் ஆகிய 10 அளவைக் குறியீடுகள் குறித்து விளக்கியுள்ளார்.*

*நடுவலகுக்குரிய வடிவங்களுடன் கீ (கீழ்) என்னும் அடையாளம் சேர்த்து எழுதப்படுதலும் உண்டு. கீழ் முந்திரி, கீழ் அரைக்காணி என்பனவாக வழங்கப்படும். கீழலகு வடிவங்கள் பின்வருமாறு:*

| | | | |
|---|---|---|---|
| 1. | ண | – | முந்திரி |
| 2. | ட | – | அரைக்காணி |
| 3. | | – | காணி |
| 4. | த | – | மா |
| 5. | | – | இருமா |
| 6. | கூ | – | மும்மா |
| 7. | | – | நான்மா |
| 8. | எ | – | கால் |
| 9. | ள | – | அரை |
| 10. | ஞ | – | முக்கால் |

## நடு அலகு எழுத்துக்கள்

**கீழ் முக் காலொடு ருகரத் தீறு**
**பொருந்தில் [1]முந்திரி, ரகரத் தீற்றைக்**
**குறைத்து மேலுற வலமா வளைக்கில்**
**[2]அரைக்கா ணிக்குறி யாரும், முந்திரியில்**
**கிடைவரை முதற்கொடு தற்றிற் [3]காணி,**
**கவ்வே [4]அரைமா, கூஎனும் எழுத்தின்**

ஈற்றுக் கிடைவரை தள்ளிமேல் வலமா
வளைக்கில்முக்[5] காணி, பகரமே [6]ஒருமா,
முற்பகல் முக்கால் ஈற்று நிலைவரை
தொட்டிட மேலா வளைத்[து] ஓர் வரையிலும்
ஒன்றா[து] அவ்வரைக் குறுக்கா வலங்கொடு
தொடுத்தோர் நிலைவரை மேல்இடல் [7]அரைக்கால்
வகரமும் இகரமும் ளுகரமும் [8]கால் [9]அரை
[10]முக்கால் எனப்படும் அன்றிச் சிற்சில
கூட்டெழுத் தாகிக் குலவும் ஆதலின்
நவின்றிலம் இவைதாம் நடு அல குறுப்பே [எழு.சூ. எண் 38]

*நடு அலகு எனும் நூற்பாவில் முந்திரி, அரைக்காணி, காணி, அரைமா, முக்காணி, ஒருமா, அரைக்கால், கால், அரை, முக்கால் ஆகிய 10 குறியீடுகள் விளக்கப்பட்டுள்ளன. அவற்றின் வடிவம் பின்வருமாறு:*

1. முந்திரி – ஊத
2. அரைக்காணி – [illegible]
3. காணி – உ
4. அரைமா – சு
5. முக்காணி – கூ
6. ஒருமா – ப
7. அரைக்கால் – ஜு
8. கால் – வ
9. அரை – இ
10. முக்கால் – ளு

## மேல் அலகு எழுத்துக்கள்

ககரமும் உகரமும் [1,2]ஒன்றிரண் டாகும்
ஙகரத் தீற்று நிலைவரை தள்ளில்
[3]மூன்றாம் சகரத் தீறுதொட் டொருநிலை
வரைமேல் நோக்கி நிறுவிடில் [4]நாலாம்.
ருகரத் தீற்றைக் கொம்பென வளைக்கில்

[5]ஐந்தாம் தகரத் தீற்றைக் குறைத்தொரு
ரகரம் பொருந்திடில் [6]ஆறாம், எகரமும்
அகரமும் [7,8]ஏழெட் டாகும் – ககரத்[து]
ஈறுதொட் டொருசிறு கொம்பென வளைக்கில்
[9]ஒன்பதாகும் ஐகாரத்தின்
கீழ்உறு பகுதியைத் தனிப்படக் காட்டில்
பத்தென விளங்கும், றகர முதல்வளைவு
உடனொரு ரகரம் பொருத்த நூறாம்
ககரத் தீற்றைச் சிறிதிடம் மேலா
வளைத்துச் சூவென நிறுவல் [11]ஆயிரம்,
இவற்றின் புணர்ப்பால் இயங்குவ பிறஆல்
விளம்பிலம் இவைதாம் மேல் அலகுறுப்பே

*மேல் அலகு எனும் நூற்பாவில் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது, பத்து, ஆயிரம் ஆகிய 11 எண் குறியீடுகள் குறித்து விவரிக்கப்பட்டுள்ளன. அவை கீழ்வருமாறு...*

| | | | |
|---|---|---|---|
| 1. | ஒன்று | – | க |
| 2. | இரண்டு | – | உ |
| 3. | மூன்று | – | ங |
| 4. | நான்கு | – | ச |
| 5. | ஐந்து | – | ரு |
| 6. | ஆறு | – | சா |
| 7. | ஏழு | – | எ |
| 8. | எட்டு | – | அ |
| 9. | ஒன்பது | – | கூ |
| 10. | பத்து | – | ய |
| 11. | ஆயிரம் | – | சூ |

## அளவு, அலகு எழுத்துக்கள்

ளகரத் தீறு தொட்டுமேல் இடமா

வளைத்தவ் வரைக்குறுக் கேற்றி நாலின்
றுறப் பொருத்தல் [1]ஆழாக் கெனப்படும்
ளுகரந் தானே [2]உழக்கென ஒளிர்தரும்,
வகரத் தீற்று நிலைவரை தள்ளில்
[3]நாழியாகும் பகரமே [4]குறுணி
முந்திரி யீற்றை மேற்சுற் றாது
னுகரத் தீறென நிறுவிற் [5]பதக்காம்
தகரம் [6]தூணி, ளகரமே, [7]கலம்
பின்னும் சிலகூட் டெழுத்தெனப் பிறங்கும்
ஆதலின் இவைதாம் அளவல குறுப்பே. [எழு.சூ. எண். 40]

*அளவு, அலகு எனும் தலைப்பிலுள்ள நூற்பாவில் ஆழாக்கு, உழக்கு, நாழி, குறுணி, பதக்கு, தூணி, கலம் ஆகிய 7 முகத்தல் அளவைக் குறியீடுகள் சுட்டப்பட்டுள்ளன. அவை பின்வருமாறு...*

1. ஆழாக்கு – ஜு
2. உழக்கு – ஒ
3. நாழி – உ
4. குறுணி – ப
5. பதக்கு – ஙு
6. தூணி – த
7. கலம் – ள

## கூட்டெழுத்துக்கள்

அகரத் தீறுதொட்[டு] அதன் இடம் கழித்து
வலங்கொணர்ந்[து] அதனொடு நாழியென் எழுத்தைப்
பொருத்தில் [1]ஆகஎன் றாயிற் றென்றும்,
றகரத் தலைபுணர் இகரம்[2]இக் கென்றும்,
ககரத்தகரத் தீற்றிணை இரட்டித்து
ஒற்றெழுத் தவற்றொடு கூடிற் றென்றும்
ஐகார த்தின்முற் பகுதிமட் டெழுதி
ஈறு தொட்டு வலத்தோர் கிடைவரை
இழுக்கில்[3]நெல் என்றும் சகரத் தீற்றொரு

லிகரம் கூட்டிற் [4]சங்கிலி என்றும்
இவ்வா றுளகூட் டெழுத்தெலா மொழியில்
அடங்கா ஆதலின் அறைகிலம் ஆயினும்
கூடும்நாண் மிகலாற் குல[வு]அல குறுப்பூ[டு]
அயல்போன் றுளசில அகற்றிடற் கரியன
அவ்வியல் புரைக்குதும் அறிந்தவாறே [எழு.சூத். எண். 42]

ஒருமா எழுதி அதன்ஈறு பற்றிக்
காணியின் உருவம் காட்டும்மா காணியும்[5]
இரண்டு மூன்று நாலெனும் இவற்றின்
ஈற்றில மா இசைத்து இருமா[6] மும்மா[7]
நான்மா[8] எனலும் மூன்றின் ஈறு
ணிகரத் தீறு பொருந்திடில் மூன்று
மாகாணி[9] யெனலும் எகரத் தீற்றை
இடமேற் கழித்[து]அவ் வரைக்குறுக் கேற்றிக்
கூகரத் தீறு காட்டிக் கீழ் இடம்
வளைத்து மேற்கொணர் கோடியும்[10] கீகரத்[து]
ஈற்றில் நாழி இசைத்துக் கீழெனும்[11]
பொறியும்அவ் வெழுத்தின் மேற்குறி யதனை
ளகரம் தேற்றிஅவ்வெழுத்தின் ஈற்றை
இடமாய்ச் சகரத்தீறென எழுதிய
சோடும்[12] உகர ரிகரந் தோய்தரும்
உரியும்[13], ஈயீற்றிற் கீழ்ஈறொன்றிய
மரக்காலும்[14] மும்மாப் போலுமுக் குறுணியும்[15]
நெல்லெனும் கூட்டின் ஈற்றுக் கிடைவரை
தள்ளிஅவ் வீறு தொட்டுமேல் வலமாக்
கொண்டிடம் கழித்த கோட்டையும்[16] அன்றிக்
கீழ்அரைக் காலொடு மூவழக் காதிய
பொருந்தாக் கூட்டுப் பொறிகளும் உளவே[17] [எழு.சூ. எண்–43]

இகரத் தீற்றொரு லகரங் கூட்டி
அதனீறு தொட்டுக் கீழோர் வரையிழுத்[து]

இடஞ்சுழித் தவ்வரைக் குறுக்கா வலங்கொடு
முக்காணி யீறு பொருந்தக் காட்டிடல்
இலக்கமாகும்[18], என்றிசைவுறல் இனிதெனல்
போலும் பல்பொறி புதியன வரினும்
அலகுணர் மக்கள் அகற்றார் அன்ளே [எழு.சூ. எண்–44]

*கூட்டெழுத்துக்கள் எனும் நூற்பாவில் ஆக, இக்கு, நெல், சங்கிலி, மாகாணி, இருமா, மும்மா, நான்மா, மூன்று மாகாணி, கோடி, கீழ், சோடு, உரி, மரக்கால், முக்குறுணி, கோட்டை, இலக்கம் ஆகிய 17 கூட்டெழுத்துக்கள் குறித்து கட்டப்பட்டுள்ளன. அவை கீழ்வருமாறு அமைகின்றன.*

1. ஆக –
2. இக்கு –
3. நெல் –
4. சங்கிலி –
5. மாகாணி –
6. இருமா –
7. மும்மா –
8. நான்மா –
9. மூன்று மாகாணி –
10. கோடி –
11. கீழ் –
12. சோடு –
13. உரி –
14. மரக்கால் –
15. முக்குறுணி –
16. கோட்டை –
17. இலக்கம் –

# அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்

## 65. Monolithic Temple: Origin and Evolution

Dr. D. Dayalan
Archaeological Survey of India
Chennai

The tradition of rock-cut architecture in India developed during the Mauryan period in and around ancient Magadha. The caves excavated into the hard rock in the Barabar and Nagarjuni hills and the outcrop at Sitamarhi near Gaya are first of its kind in India. This, in the succeeding centuries, spread widely and resulted in the blossoming of quite a large number of rock-cut architectural centres almost all over India. The rock-architectural projects are mainly the petrified versions of the contemporary brick-and-timber or the humbler wattle mud-and-thatch structures. Initially the rock-cut enterprise was nurtured by the votaries of the Buddhist and Ajivika faith and later by the Jaina and Brahmanic faith as well. The Guptas, under whom the resurgence of Brahmanic faith took place on a national level, were perhaps the first to patronise Brahmanical cave excavations and the earliest of such an enterprise are to be seen in the cave temples at Udaigiri, near Vidisa, Madhya Pradesh. It would be vindicable to say that the Udaigiri caves to some extent form the legitimate precursors to the Calukyan enterprises coming slight later, followed by the Pallava and Pandya rock-art creation on the extreme south. One more credit to Udaigiri in addition to being the site for the first Brahmanical caves in India is that it has the earliest Brahmanical free-standing model frozen in rock. The Cave No.7, locally known as *tawa* cave, is a monolithic temple, hewn out of a mass of rock into a hemisphere at the base and surmounted by a large flat stone in the form of a *tawa* (round baking plate). This monolith, despite of its imperfect *sikhara* form, has a well finished oblong chamber with an exquisitely fashioned lotus medallion on the ceiling. It is dedicated to Siva as testified by the Saiva *dvarapalas* on either side of the doorway. There is an inscription of a minister of Chandragupta II on its hind wall says that he excavated this out of devotion to God Sambhu while accompanying the emperor on a mission of world conquest. The Udaigiri monolith was not certainly born in a day. The germ of the monolithic idea lies in the carved out *stupas* inside the rock-cut *chaitya-*

கோவிலூர் ஆதீனத் தலைவர் தவத்திரு நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள் கோவிலூர் ஆண்டவர் பெயரில் ஏற்படுத்தியுள்ள அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில் 10வது சொற்பொழிவு. நாள் 28.08.2011

halls of western India, and in the large *stupa* forms at Sankaram, Andhra Pradesh.

The most revolutionary and novel experimentation of the monolithic rock-cut of free-standing model naturally impressed Narasmhavarman I Mamalla, who hailed from the royal lineage of distinguished personalities with inquisitive-mentality and enthusiastic patrons of art. Mamallapuram, being the famous sea-port of the Pallavas, had been the favourable choice of Narasimhavarman I to implement his dream and many large boulder out crops here were transformed into a sanctuary of impeccable rhythm that embellished with the vesture of legendary, mythical and canonical iconography. The monolithic models popularly known as *rathas* were invariably carved from top to bottom, a reversal of the process normally adopted in structural edifices, whether of brick or stone. There are ten monolithic models at various stages of completion at Mamallapuram range roughly between the first quarter of the seventh century to the second quarter of the eighth century AD., show the faithful imitation of all the structural parts of a temple from inside as well as from outside. The single whale-backed outcrop of granite near the shore had been cut into three segments in order to fashion four monolithic marvels, namely, Dharmaraja, Bhima, Arjuna and Draupadi rathas of different architectural style. A separate boulder in front of Draupadi-Arjuna ratha had been carved as Nakula-Sahadeva ratha. The height and basal width of the whale-backed north-south hillock is greater towards its south end. The carving work in all cases proceeded from the apex down to the base. The lay-out, choose of form and design of the individual types are basically in relation with the location and basal width and total height of the rock available. The tallest of the *rathas*, the square and three-storeyed Dharmaraja ratha formed in the same way out of the more massive and high southern segment. The linear *sala*-type Bhima ratha fashioned from the central and longer segment that had an almost horizontal crest line. The square hut-like Draupati ratha and the two-storeyed Arjuna ratha are carved from the northern segment and standing on a common platform (*upapitha*). The fifth is the *gajaprishtha* (*tunganaimadam*) type Nakula-Sahadeva ratha shaped out into apsidal form from the separate globoid rock to the west of the Draupati-Arjuna *rathas*. Apparently little later to this, the Ganesa ratha near to the Arjuna's penance, the unfinished ratha with *sala-sikhara* in front of the Mahisasuramardini cave and the three isolated cheese-cake monoliths, namely, North and South Pidari rathas and Valaiyankuttai ratha, on the western side of the hillock were executed. All these ten models

virtually laid down the matrix of *vimana* forms, their formal and constructional modulations.

The other landmark in the history of monolithic art, next to these wonders is the Great Kailasanatha temple complex at Ellora, Maharashtra, one of the most ambitious rock-architectural projects ever undertaken anywhere. This monolithic complex, also known as Krishnesvara or Kannesvara temple after its patron Rastrakuta Krishna I (756-773) was scooped out by adopting "the trenching technique" unlike the Pallava examples, which were carved from the free standing boulders. The art and architectural conceptions adopted in the Kailasanatha temple shows the synthesis of the most notable architecture and sculpture trends existed elsewhere in India. Atypical precursor and successor of Kailasanatha temple at the self-same place by the same dynasty are the Dantidurga's mandapa in front of Dasavatara (Cave-15) cave and the Chaumukh of Indra Sabha and Chota kailasa, both of the Jain creeds. Of all the monolithic models at Ellora, the Kailasanatha temple is the finest and the most perfect example. It even surpasses all other monoliths in the matter of conception, scale, grandeur and ornament. The panegyric in the Baroda copper plate grant (812-13) of the Rastrakuta monarch Karka II rightly describes this temple as follows (in Sanskrit) :

(That king) by whom, verily, was caused to be constructed a temple on the hill at Elapura (Ellora), of wonderful structure, - on seeing which the best of the immortals who move in celestial cars, struck with astonishment, think much constantly, saying, "This temple of Siva is self-existent; in a thing made by art such beauty is not seen"- a temple, the architect-builder of which, in consequence of the failure of his energy as regards (the construction of) another such work, was himself suddenly struck with astonishment, saying, "Oh, how was it that I built it !"

This innovative monolithic tradition received a fairly well distributed patronage throughout India. It seems the Eastern Calukyas, immediately, picked up the novel monolithic conception from their southern neighbour i.e. Pallavas and implemented this project at various places like Vijayavada, Undavalli and Chejerla, though not as perfect as the Pallavas' creations. The monolithic double storeyed *vimana* with octagonal *sikhara* excavated from out of a trench at Kalugumalai, Tamil Nadu on the extreme south of India around 800 AD. is not only the crowning glory of the Pandyas, but also shows the Pandya-Rastrakura art link, as it was carved by adopting "the trenching technique" like the Kailasanatha temple at Ellora (unlike the nearby Pallava monolithic tradition). The monolithic temple complex at Masrur (Dist.

பணிப் பெண் களின் தலையின் மீது மூத்த வள் தன்னுடைய கைகளை வைத் திருக்கின்றாள். நந்திமகன் தன்னுடைய வலது கையில் ஒரு நீண்ட குண்டாந் தடியைப் பிடித்திருக்கின் றான். காலம் 7ஆம் நூற் றாண்டு.



**சிம்ம புடைப்புச் சிற்பங்கள் :** கீழ்வீதியில் வடக்கில் அமைத்திருக் கின்ற தற்கால மதகின் அருகில் கரையின் உச்சியின் கற்பலகையில் மூன்று சிங்கங்களின் தலைகள் மட்டும் புடைப்புச் சிற்பங்களாகத் தரைக்கு வெளியில் தெரிகின்றன. இந்தக் கற்பலகையில் செதுக்கப்பட்ட புடைப்புச் சிற்பத்தின் காலம் கி.பி. ஏழாம் நூற்றாண்டு.



**துர்க்கை :** நின்ற கோலத்தில் துர்க்கை சிலை ஒரு கற்பலகையில் புடைப்பாகச் செதுக்கப்பட்டி ருக்கிறது. தலையில் பல்லவர் காலத்தில் செதுக்கப்படும் சிறிய மகுடம் காணப்படுகிறது. காது களில் குண்டலங்கள் தொங்கு கின்றன. துர்க்கைக்கு எட்டுக் கைகள் காட்டப் பட்டுள்ளன. அவற்றில் வலது கைகளில் மேலிருந்து கீழாக பிரயோக சக்கரம், கத்தி, அம்பு மற்றும் மணி உள்ளன. அதேபோல இடது கைகளில் சங்கு, கேடயம், நெடிய வில் மற்றும் கட்டிய வலம்பிதம், மார்பை ஒரு பட்டையான கச்சைக் கட்டியுள்ளது. கீழாடை ஓர் அரைக்கால் சட்டையைப் போன்ற ஆடையை அணிந்துள்ளார். எறுமைத் தலை மீது நின்று கொண்டிருக்கிறார். துர்க்கைக்கு வலது பக்கத்தில் அவருடைய வாகனமான ஒரு மான் துர்க்கையை நோக்கிக் கொண்டிருக்கிறது. துர்க்கையின் காலடியின் இருமருங்கிலும் ஒரு பக்தன் வீதம் மண்டியிட்டு வணங்குகின்றனர். காலம் பிற்காலப் பல்லவர்.

**கணேசர்-1 :** கணேசர் தலையில் ஒரு சிறிய மகுடம் அலங்கரிக்கிறது. காதுகள் விரிந்துள்ளன. தும்பிக் கை நீளம் குறைவானதாகவும், இடது பக்கம் வளைந்தும் உள்ளது. நான்கு கைகளில் பின் பக்கக் கைகளில் தெளிவற்ற

ஆயுதங்கள் காணப்படுகின்றன. முன் பக்கக் கைகள் அவருடைய தொடைகளின் மீது இருக்கின்றன. கணேசர் ஓர் எளிய பீடத்தில் வலது காலை மடக்கி அமர்ந்துள்ளார். வயிறு பெரியதாகக் காண்பிக்கப்பட வில்லை. பிற்காலப் பல்லவர் காலம்.



**கணேசர்-2** : துர்க்கை சிலைக்கு அருகில் உள்ள அரச மரத்தின் கீழ் உள்ள மேடையில் மற்றொரு கணேசர் சிலை வைக்கப் பட்டிருக்கிறது. கணேசர் பீடத் தில் அமர்ந்திருக்கிறார். தலையில் மகுடம் உள்ளது. கைகளில் அங்குசமும் பாசமும் காணப் படுகின்றன. இடது முன் கையில் இருக்கின்றன உருண்டையை தன்னு டைய தும்பிக்கை தொடுகிறது. தொப்பைப் பெரியதாகச் செதுக்கப்பட் டிருக்கிறது. காலம் கி.பி. 13ஆம் நூற்றாண்டு.



**கணேசர்-3** : கணேசர் ஒரு பீடத்தில் அமர்ந்திருக்கிறார். பின் கைகளில் அங்குசமும் பாசமும் உள்ளன. முன் வலது கை தொடை மீது உள்ளது. இடது கையில் இருக்கின்ற உருண்டையை தும்பிக்கைத் தொடுகிறது. காலம் கி.பி. 13ஆம் நூற்றாண்டு.

**ம. காந்தி, வேலூர்**

## 67:10 பல்லவர் கால மூத்த தேவி

திருவாரூர் காமட்சி அம்மன் கோவிலுள் அழகிஸ்வரர் கோவிலுக்கு அருகில் ஏழு கண்ணிகள் சிற்றாலயத்திற்குள் ஜேஷ்டா எனப்படும் மூத்த தேவியின் புடைப்புச் சிற்பம் ஒன்று சமீபத்தில் கண்டுபிடிக்கப்பட்டது. இங்குள்ள சிவன் கோவில் சோழர் காலத்ததெனினும் மூத்த தேவியின் புடைப்புச் சிற்பம் பலகைக் கல்லில் புடைப்பாக மிக நேர்த் தியாக வடிவ மைக்கப்பட்டு பல்லவர் கால அமைப்பினை உடையதாக உள்ளது. கரண்ட அமைப் புடைய மகுடத்தின் கீழ் அகன்ற பட்டையான தலைக்கட்டு காதுகளில் குண்டலங் கள் பல்லவர் காலச் சிற்பி வடி வமைத்த வட்ட முகம். கழுத்தில் கழுத்தணி பரந்த மார்பு சரிந்த வயிற்றை இறுக்கிய இடைக் கச்சு



தொடை யின் நடுவில் செல்ல நேர்கொண்ட பார்வையில் அமர்ந்த நிலையில் உள்ள மூத்த தேவியின் இரு பக்கமும் அவளது மகன் மாந்தன் மகள் மாந்தி. மாந்த னின் மகுடம் கரண்டம் போல் உள்ளது. கை களில் ஒன்றில் தண்டு கொண்டு ஒரே பீடத் தில் குத்துக் காலிட்டு அமர்ந்துள்ளார்.மாந்தி ஒரு கையை தொடை யில் இறுத்தியவாறு உள்ளார். மூத்த தேவி யின் ஒரு கை மகள் மாந்தியின் தொடையில் இருத்தியவாறு அழகாய் இச்சிற்பம் காட்சியளிக்கிறது.

**பா. ஜெயக்குமார், சு.இராசவேலு, த.தங்கதுரை, தஞ்சாவூர்.**

# 68. மல்லாபுரம் கல்வெட்டின் மீள் வாசிப்பும் – குறிப்பும்

நடன. காசிநாதன், சென்னை

*ஆவணம் 20 இதழில் பக்கம் 3இல் பதிப்பிக்கப்பட்டுள்ள மல்லாபுரம் கல்வெட்டினை கீழ் உள்ளவாறு திருத்தம் செய்து படிக்கலாம்.*

1. . . . ந்தஞ்
2. . . . [கா]டங்கர் ம –
3. க்கள் பொன்ன –
4. க்கன்னாரு சேவ –
5. கர் கரங்குமாராக்கன் மகன் ஏறன் றன் ம –
6. கன் கந்தனுதிரைசாமியாரோடு எறி –
7. ந்து படாக் கல்

*காடங்கரின் சிற்றரசனான பொன்னக்கன்னார் அடியான் கரங்கு மாராக்கனின் மகன், ஏறனின் மகனான கந்தனுதிரை சாமியாரோடு பொருது இறந்து விட்டதை இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது எனப் பொருள் கொள்ளுதல் வேண்டும்.*

# 69. The Ondaatje Letters
## An Extraordinary Discovery in South Africa

D. Herman Tieken
Leiden

Examples of private correspondence in South Asia are extremely rare. The 60 letters in Tamil, dating from between 1728 and 1735, which have recently turned up in the archives of Cape Town, South Africa, therefore form a real treasure trove. Another surprise was the addressee, a certain Nicolaas Ondaatje, an ancestor of the well-known Ondaatje family of Sri Lanka. This Nicolaas had been banished by the Dutch to Cape Town in 1727. The letters contain no infomation about his crime. Whatever it was, it was committed in collusion with his Dutch patron, the clergyman Joan Bernard Noordbeek. In the letters, we read that the clergyman was acquitted and returned to Colombo, while Nicolaas died in Cape Town in 1737, without having seen his family or country again.

We have only one side of the correspondence, namely, the letters addressed to Nicolaas. It is clear, though, that Nicolaas was an active regular letter writer himself as well. The list of names of the correspondents and persons figuring in the letters, reads like a who's who of famous Sri Lankans. Among them we find early namesakes of Peter Philip Juriaan Quint Ondaatje (1758-1818), well known in Dutch history, and the present-day writers Michael and Sir Christopher Ondaatje. Other names are De Mel, Pieris, Fernando and Dias. Nicolas' mother was a Rodrigo. The Ondaatjes were clearly important figures in Colombo society, and also maintained close ties with the Dutch Therefore, one of Nicolaas' older cousins could advise him to go to Holland and present his case before the authorities of the Dutch East India Company, "by referring to your family's longstanding employment as interpreters for the Governor of Colombo, and your function as Chief of the Chettiyars, which you inherited from your father and grandfather". In the multicultural society of Ceylon at that time, interpreters played an important role, and Nicolaas seems to have been an especially gifted one. A cousin begs him to return, for "there are no interpreters here like you, who know Dutch, Tamil, Singhalese as well as Portuguese? Throughout the correspondence, Nicolaas' Cousin Philip Jurgen (Jurriaan) had to deal with Nicolaas' request to send him two servants; "Last year, you wrote us, asking us to buy two healthy males as slaves and send them to you, didn't you? If you still want them, you do not need to write about that again. For, while at

that ' time, a slave cost l0 reals, now you cannot even get one for 30 or 40 reals. Even if you get one, the result is not satisfactory. So don't take the trouble. We have slaves in our house, but we do not like to send them to you over there. I do not have to tell you why."

The letters abound in good advice. An interesting example is the following. Apparently, Nicolaas had asked how he should dress while living in a strange country. He receives the following answer from Tomisz Christoffel: "You live in a cold country over there. Therefore, Chettiyar-clothes are not the right kind of clothes. You have asked permission from us to wear shirts and several layers of clothes. You should dress as it suits the place where you are. Elder Brother Willem Pillai approves of that too. But you should not take drinks that are forbidden to people of our caste, nor buy them for someone else to drink, and doing business by selling arrack is also forbidden to people of our caste. Remember Nagamani, who, when he was there, did everything forbidden to our caste, drank arrack and ate beef. He fell seriously ill and died, and blackened the faces of his relatives." In the beginning, the family sent him presents, often accompanied with a price list, in case he wanted to sell them. There was some concem among my family about Nicolaas' financial circumstances. He is advised to change the house he lived in for cheap rooms. At first, he seems to have tried to make a living as a traditional doctor. His relatives sent him a book with recipes he had asked for and samples of medicinal plants. However, at a certain point, Domingo Dias wrote: "I am unable to express my joy at hearing from Elder Brother Willern Ondaatje that you have started a school at Cabo de Bona Esperanca, and teach children the pronunciation of the Dutch letters." Some of the subsequent letters are addressed to "Nicolaas Ondaatje Schoolonnaster."

In his initial attempt to start a medical practice, Nicolaas seems to have stepped into the footsteps of his grandfather, who, in the middle of the l7th century, was invited from Tamil Nadu, to come and live in Colombo, by the Govcmor, after he had cured the latter's wife from a serious illness. This information could, unfortunately, not be verified from the letters. The letters do give a clue, though, as to the origin of the name Ondaatje. Its Dutch appearance, widi the ending being identical to the diminutive —tje, is deceptive. Instead, it is a Dutch rendering of Tamil Ondaacci, the pronunciation of Uhandacci.

The Ondaatje letters are, at this moment, being edited and translated from the Tamil by me, together with my former student Simon Schmidt at the

University of Leiden in the Netherlands. The project is sponsored by the Leiden Institute of Area Studies.

Source: The Sri Lankan Anchorman, Toronto, Canada

Sample of one letter's beginning Portion

1. ஆதிநம
2. தம்பிரானார் நன்மை தர எனது அன்புஞ்
3. சினேகமும் அதிகபாக்கியமும் உள்ள குமாரன்
4. நிக்குலாசு உகந்தாச்சி நல்ல பிள்ளை யவர்களுக்குச்
5. சகல பாக்கியமுஞ் சகல சம்பத்தும் அட்ட
6. அயிஸ்ப்பரியமுந் தனதாணிய சம்பத்தும்
7. இராசமுகப்பேறும் இராசமுக வசீகரமும்
8. இயாபாரவற்க்கத்துப் பகையரிடத்தில்
9. வெற்றிமாராயமும் நோவற்ற வாழ்வும்
10. குறையற்ற செல்வமும் இன்மையிற் பேறும்
11. மறுமையில் மோக்கிசமுந் தமக்கு எப்
12. போதுந் தம்பிரானுடைய கிறுபா
13. கிடாட்சத்தரநாலே உண்டாவதாகவும்

# 70. பிரஞ்சு இந்தியவியல் மற்றும் வட்டெழுத்து ஆராய்ச்சிகளின் தொடக்கம்

ஓர்சே. மா. கோபாலகிருஷ்ணன்

ஆங்கத்தில் துய்பெர்ரோம் (Anquetil Deperron) பிரெஞ்சு இந்திய வியலுக்கும், எதுவார் அரியேல் (Edouard Ariel) பிரெஞ்சுத் தமிழியலுக்கும் முன்னோடியாவார்கள். இவர்களிருவரும் ஆங்கிலத் தமிழியல் முன்னோடியான பிரான்சிஸ் உவைட் எல்லீசுடன் (Francis Whyte Ellis) இணைத்துப் பார்க்கத் தக்கவர்கள். புதுச்சேரிக்கு 1844ஆம் ஆண்டு வந்து, தமிழ்மொழியைக் கற்றுப் பல துறைகளில் ஆய்வு செய்த எதுவார் அரியேலுக்கு எல்லீசுடைய ஆய்வுகளின் சிறப்பு பற்றி நன்றாகத் தெரிந்திருந்தது.

அப்பே துய்புவா (Abbe Dubois) என்ற பிரெஞ்சுப் பாதிரியார் எழுதிப் பதிப்பித்த நூல் ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பு செய்யப்பட்டதால், அவருடைய பெயரும் நூலும் தமிழ் அறிஞர்களுக்கு நன்றாகத் தெரிந்திருக் கிறது. ஆனால் அவரைவிட அதிகமாகவும் நுண்ணியமாகவும் ஆய்வு செய்திருக்கும் துய்பெர்ரோம் பற்றி அவர்கள் அறியாதிருப்பது பெருங் குறையே.

துய்பெர்ரோம் பொருமகனார் தமிழ்நாட்டுக்குப் போவதற்கு, பிரான்சிலுள்ள லொரியாம் (Lorient) துறைமுகத்தில், 1755ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் கப்பல் எடுத்தார். அந்த ஆண்டு ஆகத்து மாதம் புதுச்சேரி வந்தடைந்த போது ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரருக்கும் இடையே கர்நாடகப் போர் முடிவு பற்றிய பேச்சுவார்த்தைகள் நடந்துகொண்டிருந்தன. பிறகு கடல் வழியே வடக்கே சந்திராநாகூருக்குச் (Chandernagor) சென்று, பல நுண்ணிய செய்திகளைச் சேகரித்தார். பழவேற்காடு வந்தபின் மீண்டும் ஐரோப்பாவில் ஏழாண்டுப் போர் (1756-1763) தொடங்கிவிட்ட காரணத்தால் கரை வழியே மதராசுக்குப் (Madras) போக முடியாது என்பதறிந்து, கடல் வழியாகச் சலங்கிலேறி புதுச்சேரி வந்து சேர்ந்தார். இங்கும் போர்ப் பிரச்னைகள் தொடர்ந்ததால், மேலும் கரைவழியாகத் தெற்கு நோக்கிப் போக முடியாமல், கப்பல் மூலம் மாஹேவுக்குச் சென்றார். மலையாளம், கொங்கணம், மகராஷ்டிரம் முதலிய இடங்களின் கரையோரங்களில் பிரயாணம் செய்து பல குறிப்புகளை எழுதி வைத்தார். அப்போது இவர் கனேரி (Kanheri) குடைவறைக் கோயில்களைப் பார்த்து, அவைகளின் அழகையும் முக்கியத்துவத்தையும் வியந்து தம் நாட்குறிப்புகளில் குறிப்பிட்டிருக்கின்றார். பிறகு, சூரத்தை (Surat) அடைந்து, அங்கு பல

அறிஞர்களைச் சந்தித்து, அவர்களிடம் சமஸ்கிருத மொழி கற்றதுடன், பழைய சுவடிகளைத் தேடிச் சேகரித்தார். சூரத்தை விட்டு 1761ஆம் ஆண்டு மார்ச் மாதம் ஓர் ஆங்கிலேயக் கப்பல் ஒன்றில் கிளம்பி, நவம்பர் மாதம் இங்கிலாந்துத் துறைமுகமான போர்ட்சுமவுத் (Portsmouth) அடைந்து, அங்கிருந்து 1762ஆம் ஆண்டு மார்சு மாதம் பிரான்சுக்கு வந்து சேர்ந்தார்.

தம் நாடு திரும்பியபின், தாம் கொண்டு வந்த ஆவணங்களைக் கூர்ந்து ஆராய்ச்சி செய்து பல முக்கியமான நூல்களை வெளியிட்டார். அவைகளில் முதன்மையான 'ஜெந்து அவேஸ்தா' (Zend Avesta) 1771இல் மூன்று பாகங்களை வெளியிடப்பட்டது. பிறகு, தாம் கொண்டு வந்திருந்த உபநிடத்தின் பார்சி மொழியாக்க 'உப்னெகத்'தை (Upnekhat) லத்தினில் மொழிபெயர்த்து 1803-1804ஆம் ஆண்டு வெளியிட்டார். இதுவே பிரெஞ்சு இந்தியவியலுக்கு முதற்படியென்று சொல்ல வேண்டும்.

பிரான்சுக்குத் திரும்பியபின் அவர் எழுதியது : என்னுடைய தாய் நாட்டை விட்டு வெளியே சென்று கழித்த எட்டு ஆண்டுகளில் ஆறு ஆண்டுகள் இந்தியாவில் தான் கழிந்தன. 1754இல் நான் பாரிசைவிட்டுக் கிளம்பும்போது இருந்ததைவிட 1762ஆம் ஆண்டு பொருள் குறைந்த ஏழையாகத் தான் திரும்பினேன். ஆனால் அபூர்வமான புராதன இடங்களைப் பார்த்ததிலும் எனக்கு ஏற்பட்ட பிரயாணப் பட்டறிவுகளிலும் பெரும் பணக்காரனாகவே திரும்பினேன். என்னுடைய இளம் வயது (எனக்கு 30 அகவை முடியவில்லை) காரணத்தால், அங்குக் கிடைத்த செல்வத்தை பற்றி நீண்டகாலம் ஆராய்ந்து, பொறுமையாகவும் கவனமாகவும் எழுத முடிந்தது. இந்தத் திரவியத்தைத்தான் நான் இந்தியாவில் தேடிச் சென்றேன். இதைப் படிக்கும்போது, அக்காலத்தில் வியாபாரத்துக்காக வந்து பொருளீட்ட விரும்பிய பலர் ஒரு புறமிருக்க, அதே 18ஆம் நூற்றாண்டுக் காலத்தில் வந்த சிலரின் அறிவுத் தாக மனநிலையையும் உணரமுடிகின்றது.

இந்த நூலில் வரும் ஒரு வாசகத்தை பேராசிரியர் பியேர் பில்லியோசா சுமார் 15 ஆண்டுகளுக்கு முன் என்னுடைய கவனத்துக்குக் கொண்டு வந்தார். அது சுமார் 1200 ஆண்டுகளுக்கு முன் தமிழ் வட்டெழுத்தில் எழுதப்பட்ட பாஸ்கர ரவிவர்மரின் சாசனமாகும். அதை ஆங்கத்தில் துய்பெர்ரோம் தம்முடைய நூலில் பிரசுரித்து, அத்துடன் அவர் கொல்லத்தில்தேடிக் கண்டதொரு பண்டிதர் சொன்னபடியான பொருளை எழுதி வைத்துக் கொண்டு வந்து, அதைப் பிரெஞ்சு மொழியாக்கம் செய்திருந்தார். ஆனால், அந்த மொழிபெயர்ப்புப் பொருளுக்கும் சாசனத்தின் பொருளுக்கும் சரியான தொடர்பில்லை யென்பது, பிறகு மூலத்தையும் மொழிபெயர்ப்பையும் பார்த்த பல ஆய்வாளர்களுக்கும் தெரிந்தேயிருந்தது. இருப்பினும் வட்டெழுத்துக்களைப் படிக்க மேற்கொண்ட முதல் முயற்சி என்ற வகையில்

மிகவும் போற்றப்பட வேண்டும். அவர் செய்த பாஸ்கர ரவிவர்மனின் செப்பேட்டுக்களின்படியும் குறிப்பும் கீழே தரப்பட்டுள்ளது. இச்செப்பேடு பின்னால் எல்லிசு (1819), குண்டர்ட் (1844) முதலியோரால் படித்து வெளியிடப்பட்டதின் விளைவாக அச்செப்பேட்டின் திருந்திய வடிவம் கிடைத்தது. இவர்களின் பாடத்தை அடியொட்டி, இறுதியாக மிகத் திருத்தமான பாடம் உல்ட்சு (Hultzsch) அவர்ளால் 1894-95இல் எபிகிராபியா இந்தியா தொகுதி மூன்றில் வெளியிடப்பட்டது.

Pl. I.

T.I.Disc.Prélim.p.clxxy.

*Inscription en ancien Tamoul, renfermant les Privilèges accordés aux Juifs, il y a environ mille ans par Scharan Peroumal, Empereur de la Côte Malabare.*

*Iᵉ Lame* Recto.

# 71. புதிய வெளியீடுகள்

**71:1**

காலனி ஆதிக்கத்துக்கு முந்தைய தென்னிந்தியாவின் சமயம், மரபு மற்றும் கருத்தியல், (R.Champakalakshmi, Religion, Tradition and Ideology, Pre-colonial South India, Oxford University Press, 2011), xx+643 பக்கம், விலை ரூ. 1,450/–

இந்நூல் பேராசிரியர் இரா. சம்பகலக்ஷ்மி அவர்கள் கடந்த ஐம்பது ஆண்டுகளில் தாம் மேற்கொண்ட ஆசிரியப் பணி மற்றும் ஆராய்ச்சிப் பணியின் முதிர்ந்த அனுபவ அறிவின் விளைவாகும். அவர் பத்தொன்பது கட்டுரைகள் மூலம் தென்னிந்திய சமய வரலாற்றின் பன்முகத் தன்மையை வலுவான அடிப்படைச் சான்றுகள் மூலம் ஆராய்ந்து வெளியிட்டுள்ளார். தொடக்கத்தில் தம் மாணவப் பருவத்தில் தமிழ்நாட்டில் சமண சமயத்தை ஆராயப் புகுந்து படிப்படியாக வைணவம், சைவம், கோயில் மரபு என்று இந்தியச் சமயத்தின் பல்வேறு கூறுகளை ஒப்பாய்வு செய்துள்ளார் என்பதை இந்நூலில் பரக்கக் காணலாம்.

இந்த நூலின் சாரத்தை மட்டுமே இங்கு தர இயலும். சமய வரலாற்றை சரியாகப் புரிந்து கொள்ள அவ்வக்கால சமூக, பொருளாதார மற்றும் அரசியல் சூழலைப் புரிந்து கொள்ள வேண்டும். அதாவது சமூக, பொருளாதார, அரசியல் கட்டமைப்பிலிருந்து சமயத்தைப் பிரிக்க முடியாது. சமயம், மரபு, தத்துவம் ஆகியவை சனாதனமானவை, நிலைத் தன்மை கொண்டவை, புனிதமான வை, கேள்விக்கு அப்பாற்பட்டவை என்று சமயவாதிகளின் நம்பிக்கை மிகத் தவறானது. இந்திய (இந்து) சமயம் வேத காலந்தொட்டு தொடர்ந்து இன்றுவரை அப்படியே இருக்கிறது என்பது வரலாற்றுப் பார்வையில் தவறாகவே படுகிறது. வேதம், வேதாங்கம், இதிகாசபுராணம் ஆகிய ஒவ்வொரு கட்டத்திலும் பல புதிய தன்மைகளும் கூறுகளும் 'இந்திய மரபு' பெறுகிறது. இந்திய மரபு என்பது பன்முகத் தன்மை கொண்டது. பிணக்குகளும் ஒவ்வாமைத் தன்மையும் கொண்ட பல நம்பிக்கைகள், செயற்பாடுகளின் கூட்டாக அது காலப்போக்கில் பரிணமித்தது. இதன் பரிணாமத்தில் பல வட்டாரக் கூறுகள், சமயக் கூறுகள், வழிபாட்டுக் கூறுகள் ஆகியவை சமற்கிருத மரபோடு பின்னிப் பிணைந்து ஊட்டஞ் சேர்த்துள்ளன. 'ஆரியமயமாக்கல்' கோட்பாடு இந்த எதிர் மரபுகளை சரியாகப் பார்க்கவில்லை உதாசீனப்படுத்துகிறது என்பது ஆசிரியரின் வாதம். கூடவே புராணங்களும் உப புராணங்களும் எப்படி இந்த எதிர் மரபுகளை உள்வாங்கி இந்து மதத்தை கட்டமைத்தன என்பதைத் தெளிவுபடுத்துகிறார்.

*இந்நூலில் உள்ள சில முக்கிய கட்டுரைகளாவன: (1) ஆழ்வார், நாயன்மார் வளர்த்த பக்தியும், சமயப் பிணக்கும்; (2) புராண சமயமும் தமிழ் சைவ மரபின் பரிணாமமும்; (3) சங்கரரும் புராண மதமும்; (4) முருக வழிபாட்டின் புனித நிலப்பரப்பு; (5) பதிகம் பாடுவார்; (6) ஜாதியும் சமூகமும், (7) தமிழ்நாட்டில் சமண புத்த சமயங்கள், (8) கோயிற் கட்டடக் கலையும் தெய்வப் படிம இயலும், (9) தென்னிந்தியாவில் அரசும் கருத்தியலும். இக்கட்டுரைகளில் சமயத்தின் சமூக அடிப்படை, அரசுருவாக்கத்தில் சமயம் சார் கருத்தியல், சமூக ஒருங்கிணைப்பில் இடைக்காலக் கோயில்களின் பங்கு முதலிய பல சிக்கலான செய்திகள் தெளிவுப்படுத்தப்பட்டுள்ளன. அறிவியல் பூர்வமான வரலாற்று நோக்கில் இந்திய சமய வளர்ச்சி, அதற்கு தென்னிந்தியா, குறிப்பாக தமிழகம் வழங்கிய கொடையின் செழுமை ஆகியவற்றை அறிந்து தெளிவு பெற இந்நூல் மிகவும் துணை செய்யும்.*

**எ. சுப்பராயலு, கோவை.**

**71:2**

**க. கருணாகரன், கொங்கு தேசத் தலைநகர் சங்ககிரி வரலாறு. பிரியதர்ஷிணி பதிப்பக வெளியீடு, பழைய எடப்பாடி சாலை, சங்ககிரி – 637 301, சேலம் மா.வ. விலை ரூ. 160 – தொ.பே. 95006 91192.**

*ஊர் வரலாற்று இலக்கியத் துறையில் சங்ககிரி வரலாறு என்ற நூல் முக்கிய இடத்தைப் பெறுகிறது. நூலாசிரியர் சங்ககிரி திரு. க. கருணாகரன் கல்வெட்டியல் பயின்றவர். இவ்வூர் வரலாற்றில் இடம் பெற்றுள்ள கல்வெட்டுகளைப் பற்றிக் கூறியுள்ளார்.*

*228 பக்கங்களும், அநேக புகைப்படங்களும், வரைபடங்களும் அடங்கிய இந்நூலில் 82 பக்கங்கள் புற நகர்ப் பகுதிகளைப் பற்றிய தகவல்களைத் தருவதால், இதைச் சங்ககிரி வட்டார வரலாறு என்று கூறுதல் இன்னும் பொருத்தமாக இருக்கும்.*

*ஊர் இருக்கும் பிரதேசம், சுற்றுப்புறம், ஊர் அமைப்பு, அரசியல் வரலாறு, இவ்வூருக்குப் பெருமை சேர்த்தவர்கள், வந்து சென்ற பெரியவர்கள் மட்டுமல்லாது சமீப கால நிகழ்வுகள் என்று படிப்படியாகப் பாங்காகத் தந்துள்ளார். சங்ககரி ஊர், சங்ககரி மலை, சங்ககிரி மலைக்கோட்டை பற்றிக் கலைக்களஞ்சிய அளவிற்கு அநேக தகவல்களைக் கொட்டித் தந்துள்ளார்.*

*இவைகளை வகைப்படுத்தி, தொகுத்து ஒரு நில வரை படத்துடன் தந்தால் அவைகளைக் காண விருப்பம் உள்ளவர்களுக்கு நல்லதொரு வழிகாட்டியாக அமையும். மேலும் இவ்வூர் மக்களுக்கு வாழ்வாதாரமாக இருந்த பொருளாதார வரலாற்றைப் பற்றிய குறிப்புகளையும் இதில் சேர்த்திருக்கலாம்.*

**குலூர் தெய். சேஷகிரி, சென்னை.**

71:3

**Srinivas Sistla, Sri Krishna Deva Raya's Amuktamalayada, Drusya Kala Deepika, Visakhapatnam, e-mail:sistlasrini@gmail.com:2010, 475 pages + 209 photographs. Price Rs. 495.**

இது விஜயநகர மன்னர் கிருஷ்ண தேவராயர் (1509-1529) தெலுங்கில் எழுதியதின் ஆங்கில மொழிபெயர்ப்பு. கிருஷ்ண தேவராயர் கலிங்க நாட்டின் மீது படையெடுத்துச் சென்றபோது விஜயவாடா அருகில் ஸ்ரீகாகுலத்தில் உள்ள ஆந்திர விஷ்ணு கோயிலில் வழிபாடு செய்து தங்கியிருந்தார். இறைவன் கனவில் தோன்றி "தான்சூடிய மாலையை இறைவனுக்கு அணிவித்து மகிழ்ந்து ஸ்ரீரங்கத்துநாதனை மணந்த பெண்" பற்றித் தெலுங்கில் காவியம் இயற்றச் சொல்ல அதன்படி எழுதப்பட்ட காவியமே ஆமுக்தமாலயதா ஆகும். மொழிபெயர்ப்பாளர் கமலாபுரத்தில் வசித்தவர். ஹம்பி, விஜயநகரம் ஆகிய வரலாற்றுச் சிறப்பிடங்களில் கலை, வரலாற்றார்வத்துடன் உலாவியவர் ஒளிப்படக் கலைஞர். தெலுங்கு, சமஸ்கிருதம், ஆங்கிலப் புலமை பெற்றவர் வரலாற்றுக் கலைப் படைப்புகளில் ஒன்றிப் போனவர். எனவே அவ்வகை பின்புல உந்துதலால் இம்மொழிபெயர்ப்பு நூலைப் படைத்துள்ளார். பல மூலச் சுவடிகளையும், உரைகளையும் ஆய்வு செய்துள்ளார். ஏழு காண்டங்களை உடைய இந்நூலில் ஸ்ரீவில்லிப்புத்தூர் - விஷ்ணு சித்தன் - கோதை நாச்சியார் என்று ஆண்டாள் வரலாற்று கதை முழுதும் சொல்லப்படுகிறது. கிருஷ்ண தேவராயர் தான் பாரத்த நாடு, மாளிகை, கோட்டை, தோட்டம், பறவை, படைக்கலங்கள் என அனைத்தையும் மனதில் கொண்டு பாடல்கள் பாடுவதால் அவரது காலக் காட்சிகள் பாடல்களாக இக்காவியத்தில் படம்பிடித்துக் காணப்படுகின்றன. மொழிபெயர்ப்பாளர் அக்காட்சிகள் உள்ள சிற்பங்கள், பொருள்கள் என்று பலவற்றையும் ஒளிப்படமெடுத்து பாடல் எண்களுடன் இணைத்துத் தந்துள்ளார். இது அவரது உள்ளார்ந்த விருப்பத்தையும் ஈடுபாட்டையும் காட்டுகிறது. ஒளிப்படத் தரவுகள் அதிகமாக விஜயநகர காலத்தவை என்பது மேலும் குறிப்பிடத்தக்கது. ஸ்ரீவில்லிப்புத்தூரில் உள்ள முற்றிய நெல்வயல் பாடலில் வரும்போது வயலில் வளர்ந்து முற்றிய நெற்கதிர்களைப் படமாகக் காட்டுகிறார். மதம் பிடித்த யானை, அம்புராத் துணி, மயிலுடன் உள்ள பெண், பெண் காலில் முள்ளெடுக்கும் வேடன், விண்ணைத் தொடும் கோட்டை, கிளித் தேரில் மன்மதன் என்று பாடல்களில் வரும் காட்சிகளுக்கெல்லாம் ஒளிப்படம் தருவது நல்ல யுக்தி. மொழிபெயர்ப்பாளர் ஒரு நூலாசிரியராகவே பரிணமிக்கிறார். கிருஷ்ண தேவராயரின் மனதைப் புரிந்து கொள்ளவும் வரலாற்றை அறிந்து கொள்ளவும் இந்த மொழிபெயர்ப்பு நூல் மிகவும் உதவும்.

**சு. இராஜகோபால், சென்னை.**

## 71:4

**த. பார்த்தி ... கிருஷ்ணகிரி மாவட்ட வரலாறு, ஸ்ரீ விவேகானநந்தர் கொடை மற்றும் அறக்கட்டளை, தருமபுரி, விலை ரூ. 140/–**

*கிருஷ்ணகிரி மாவட்டம் வரலாற்றுக்கும் முற்பட்ட தடயங்களை மிக்குடையவை. பழங்கற்காலம் முதல் வரலாற்றுக் காலத்தின் சென்ற நூற்றாண்டு வரை தொடர்ச்சியான வரலாற்றைக் கொண்டவை. மலைகள் சார்ந்த இம்மாவட்டத்தில் பழங்கற்களும், சங்க காலம் தொடங்கி வரலாற்றுக் கால எச்சங்களும், கல்வெட்டுகளும், தொல்லியல் சான்றுகளும் பெருமளவில் கிடைக்கின்றன. இவற்றை எல்லாம் சான்றுகளாக்கி இந்நூலை இரண்டு தொகுதிகளாக ஆசிரியர் படைத்துள்ளார். இம்மாவட்டத்தில் கள ஆய்வுகள் மேற்கொண்ட பல்வேறு ஆய்வாளர்களின் நூல்களையும், இவர் பயன்படுத்தித் தரவுகளை செம்மையாகத் தந்துள்ளார். வட்டார வரலாற்றை எழுதுவது என்பது காலத்தின் கட்டாயம் அவ்வகையில் இந்நூலாசிரியர் நுண்ணிய அளவில் தரவுகளின் வழி சான்றுகளை அளித்து ஒழுங்காக கிருஷ்ணகிரி மாவட்ட வரலாற்றை அளித்துள்ள நடை வரலாற்று ஆய்வாளர்களுக்கும் ஆர்வலர்களுக்கும் பயனுடையதாக இருக்கும். சங்க காலம் ஊத்தங்கரைவட்டம் குறித்த முழுமையான தகவல்கள் இரண்டு தொகுதிகளாக இடம் பெற்றுள்ளமை சிறப்புக்குரியது.*

**சு. இராசவேலு, தஞ்சாவூர்**

## 71:5

**கூ. பிச்சைப் பிள்ளை, நடுநாட்டுக் கோயில்கள், விஜயா பதிப்பகம், உளுந்தூர்பேட்டை, விலை ரூ. 80**

*கல்வெட்டு ஆர்வலர் கூ. பிச்சைப் பிள்ளை உளுந்தூர்பேட்டைப் பகுதியில் கள ஆய்வுகள் பல மேற்கொண்டு இந்நூலினை எழுதியுள்ளார். அவ்வுகையில் நடுநாட்டில் உள்ள பல வரலாற்றுச் சிறப்புமிக்க ஊர்களை ஆய்வு நோக்கில் சுருக்கமாக எழுதியுள்ளார். இந்நூலில் நடுநாட்டுப் பகுதியில் உள்ள 25 ஊர்களின் வரலாறு எழுதப்பட்டுள்ளது. தொன்மை வாய்ந்த நடுநாட்டில் பாடல் பெற்றத் தலங்கள் மட்டுமன்றி வரலாற்றுச் சிறப்பும் தொன்மையும் மிக்க பல ஊர்கள் உள்ளன என்பதை இந்நூல் எடுத்தியம்புகிறது. பல ஊர்களுக்கும் இவர் நேரிடையாகச் சென்று கல்வெட்டு, செவிவழிச் செய்திகள் ஊர் பெயராய்வு ஆகியவற்றினை வரலாற்றுச் செய்திகளுடன் இணைத்து இந்நூலை எழுதியுள்ளார். நடுநாட்டு ஊர்களின் வரலாற்றில் ஆர்வமுள்ளவர்களுக்கு இது பயனுள்ள நூலாக அமையும்.*

**சு. இராசவேலு, தஞ்சாவூர்**

## 71:6

**சு. இராசவேலு, தஞ்சைப் பெரிய கோயில் சோழர் கால ஓவியங்கள், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2010, பக்கம் 156, விலை ரூ. 500/–**

ஓவிய ஒளிப்படக் கலைஞர், ஓவியர், வரலாற்றியலார் ஆகியோரை ஒருங்கிணைத்துப் பல்கலைத் துணைவேந்தரின் வழிகாட்டலில் வெளிவந்துள்ள நல்ல கலைப்பிரிவு நூல் இந்நூல். இராசராச சோழன் விரும்பிய தஞ்சைப் பெரிய கோயிலின் ஆயிரமாரவது ஆண்டு விழாவில் அம்மன்னனுக்குச் செலுத்தும் தூயவணக்கமாக இந்நூல் அமைந்துள்ளது. நன்கு வளர்ந்துள்ள அறிவியல் உத்திகள் மற்றும் கருவிகளின் பயன்பாட்டு வெளியீடு இந்நூல். ஓவிய ஒளிப்படக் கலைஞர் திரு. தியாகராஜன் எடுத்துத் தந்த ஒளிப்படங்களை கணிப்பொறிக் கண்ணில் காட்டி வண்ண ஓவியங்களை வரைகோட்டு உருவங்களாக ஓவியப் பேராசிரியர் சந்துரு தன் குழுவினர் உதவியுடன் வடித்துள்ளார். இதன் பயனாக அவ்வோவியங்களில் நம் கண்ணுக்குப் புலப்படாத பல உருவங்களும், செய்திகளும் வெளிவந்துள்ளன. திருமணச் சமையல் கட்டில் அடுகலன்கள், இறைவன் முன்னாகப் பரிகலன்கள், தெய்வங்களின் அணிகலன்கள், மாந்தரின் உடை, அணிகலன்கள், விலங்குகள், ஆலமரம், கழுகு, பனை மரங்கள் என்று பல பொருள்களின் காட்சியும் அமைப்பும் நம்மைச் சோழர் காலத்தை நன்கு உணர்ந்து அறியச் செய்கின்றன. படமெடுத்தவரே நூல் வடிவமைப்பும் மேற்கொண்டதால் நூல் தரமான தாளில் பன்னாட்டுத் தரத்தில் வெளிவந்துள்ளது. ஓவியச் செய்திகள் முனைவர் சு. இராசவேலுவால் தரப்பட்டுள்ளன. இன்னும் தமிழகத்தில் உள்ள பண்டைய ஓவியங்கள் இந்நூலின் உத்தியோடு வெளியிடப்பட இந்நூல் ஒரு உந்துகோலாகும்.

**சு. இராஜகோபால், சென்னை.**

## 71:7

**த. அதியமான், ஆ. துளசேந்திரன், நிகமம் வணிக வரலாற்றாய்வுகள், 2010, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், xvi+182 பக்கங்கள், விலை ரூ. 70/–**

தமிழகத் தொல்லியல் சமூக வரலாற்றாய்வுகள் நன்கு வேர் ஊன்றியுள்ளன. இதனை நல்ல முறையில் எடுத்துக்காட்டத் தமிழ்ப் பல்கலைக்கழகம் கருத்தரங்கு ஒன்று நடத்தி அதனில் வாசிக்கப்பட்ட ஆய்வுக் கட்டுரைகளைத் தாங்கி இந்நூல் அமைகிறது. இந்நூலின் பதிப்பாசிரியர்கள் கட்டுரைகளைச் செம்மையாகத் தொகுத்து நல்ல பதிப்புரையுடன் வெளியிட்டுள்ளனர். கடல், கலம், கலம் செய்தல், உள்நாட்டு வெளிநாட்டு வணிகர், தரகர், நிலம்சார் வணிகப் பொருள்கள், கடல் வணிகப் பொருள்கள், வணிகப் பாதுகாப்பு, வணிகப்படை, கிழக்கு மேற்கு நாடுகளுடனான வணிகத்திற்கான சான்றுகள்

ஆகியன பற்றி பேராசிரியர் ப. சண்முகம் அவர்களுடைய தெளிவான தொடக்கவுரையுடன் நூல் தொடங்குகின்றது. செங்கடல் வணிகத் தொடர்பு; சங்ககால வெளிநாட்டு வணிகம்; நகரத்தார், ஐஞ்னூற்றுவர், ஐயப்பொழில் நாச்சியார்; வீரத்துவளம் கல்வெட்டு; கென்சாதாள் ஆவணங்கள், சுமத்திரா தமிழ்க் கல்வெட்டு; கரூர், பாண்டிய நாட்டுக் கடற்கரை, திருநெல்வேலி பகுதி, புதுக்கோட்டைப் பகுதி, தஞ்சைப் பகுதி, கும்பகோணம், நாகப்பட்டினம், கடலூர், பெரம்பலூர் பகுதிகளில் வணிகம், செக்கார், மகதேசன் பெருவழி என 22 கட்டுரைகள் இந்நூலில் அடங்குகின்றன. இதன் வாயிலாக உள்நாட்டு வெளிநாட்டுத் தொல்லியல் சான்றுகள் பரவலாக அலசி ஆராயப்படுவதை அறிந்து தொல்லியலார் மகிழ்ச்சியும் ஊக்கமும் பெறுவர் என்பது உண்மை.

**சு. இராஜகோபால், சென்னை.**

## 71:8

**த. அதியமான், ஆ. துளசேந்திரன், நாவாய் – கடல்சார் வரலாற்றாய்வுகள், 2010, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், xvi+216 பக்கங்கள், விலை ரூ. 70/–**

*தமிழகத்தில் கடலகத் தொல்பொருளாய்வின் முக்கியத்துவத்தை எடுத்துச் சொல்லும் வெள்ளைவாரணம் அவர்களுடைய 1983ஆம் ஆண்டுக் கட்டுரையை முதலில் வைத்து அமைந்த 22 கட்டுரைகளின் தொகுப்பு இந்நூல். 2007ஆம் ஆண்டுக் கருத்தரங்குக் கட்டுரைகள் மிகுதி. இலக்கியம், கடல் அகழாய்வு, நில அகழாய்வு, கள ஆய்வு, கல்வெட்டுகள், சிற்பங்கள், காசுகள், ஓவியங்கள், கலங்கள் அவற்றின் நுட்பங்கள், அரசு ஆவணங்கள், சரஸ்வதி மகால் நூலக ஆவணங்கள் என அனைத்துப் பிரிவுத் தரவுகளிலும் கட்டுரைகள் அமைந்துள்ளன. இலங்கை, முசிறி, மாங்குடி, கடற்கரைத் துறைமுகப்பட்டினங்கள் ஆகிய இடங்களில் கிடைத்த அகழாய்வுப் பொருள்கள் பற்றி நிறையச் சொல்லப்பட்டுள்ளன. சரபோஜி சாளுவநாயக்கன் பட்டினத்தில் கப்பல்கள் கட்டும் பணியை மேன்மைப்படுத்திதும் கப்பல் தொடர்பாக சரஸ்வதி மகால் நூலகத்தில் நூல்கள் சேகரித்து வைத்திருக்கும் ஒரு கட்டுரை மூலம் அறியக் கிடைக்கிறது. 'நாவாய்' தொடர்ந்து அம்பி, புணை, வங்கம் முதலிய பெயர்களிலும் நூல்கள் வெளியிட முனைந்திருக்கும் தமிழ்ப் பல்கலைக் கழக நீரகழாய்வுப் பிரிவின் எண்ணம் விரைவில் வரக்கூடுமளவு இந்நூல் ஆய்வாளர்களிடையே தாக்கத்தை ஏற்படுத்தும் என்பதில் ஐயமில்லை.*

**சு. இராஜகோபால், சென்னை.**

# தமிழகத் தொல்லியல் கழக 20ஆம் ஆண்டுக் கருத்தரங்கம் – செயலர் அறிக்கை

தமிழகத் தொல்லியல் கழகத்தின் 20ஆவது கருத்தரங்கும், 21ஆவது ஆணம் இதழ் வெளியீட்டு விழாவும் நாகர்கோயில் தெ.தி. இந்துக் கல்லூரி கருத்தரங்கக் கூடத்தில் ஆகஸ்டு 28, 29 சனி, ஞாயிறு கிழமைகளில் நடைபெற்றது. தொடக்கவிழா தொல்லியியல் கழகத் தலைவர் திரு. சு. இராஜகோபால் தலைமை தாங்கி இன்றையச் சூழலில் தொல்லியல் ஆய்வுகளின் அவசியத்தை விரிவாக எடுத்துரைத்தார். திரு. எ. சுப்பராயலு அறிமுக உரை நிகழ்த்தும்போது தமிழ் இலக்கியங்களுக்குக் கல்வெட்டு ஆய்வுகள் வரலாற்றுச் சான்றாதாரங்களாக மாறி வருவதை விளக்கியதோடு, அரசின் தொல்லியல் துறைகள் இந்த ஆய்வுத் துறையோடு தொடர்பு இல்லாதவர்களால் வழி நடத்தப்படுவதால் ஏற்படும் இடர்பாடுகளையும் குறிப்பிட்டார்.

பதிப்பாசிரியர் சு. இராசவேலு, கழகத்தின் 21ஆவது ஆவணம் இதழைக் கல்லூரி ஆட்சிமன்றத் தலைவர் பொறியாளர் ஆறுமுகம் பிள்ளை வெளியிட வேண்டிக் கொள்ள, அவர் அதை வெளியிட்டு ஆசியுரை வழங்கினார். எழுத்தாளர் திரு. பொன்னீலன் ஆவணம் இதழைப் பெற்றுக் கொண்டு சிறப்புரை ஆற்றினார். முதல்வர் திருவாளர் மீனாட்சி சுந்தரராஜன், வி. நாகராஜன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். உள்ளூர் செயலர் திரு. செந்தீ நடராசன் வரவேற்க, முனைவர் ஶ்ரீகுமார் நிகழ்ச்சியை ஒருங்கிணைத்தார். தொல்லியல் கழகச் செயலாளர் முனைவர் தியாகராஜன் நன்றி கூறினார்.

தொடர்ந்து, முனைவர் தொ. பரமசிவம் தலைமையில் கோவிலூர் ஆதின அறக்கட்டளைச் சொற்பொழிவினை இந்தியத் தொல்லியல் ஆய்வுத் துறை கோயில் பிரிவு கண்காணிப் பாளர் முனைவர் து. தயாளன் அவர்கள் 'ஒற்றைக்கற்றளிகளின் தோற்றமும் வளர்ச்சியும்' என்ற தலைப்பில் நிகழ்த்தினார். தி.நா. சுப்பிரமணியன் அறக்கட்டளை சொற்பொழிவினை திரு. க. கிருஷ்ண மூர்த்தி அவர்கள் 'திருவாவடுதுறையில் ஈசான மடங்கள் ஓர் ஆய்வு' என்ற தலைப்பில் முனைவர் கு. சேதுராமன் தலைமையில் நிகழ்த்தினார்.

முதல் நாள் இரவில் பேராளர்களுக்காகத் தோல்ப்பாவைக் கூத்து நடைபெற்றது.

இருநாள் கருத்தரங்கிலும் நடந்த 4 அமர்வுகளிலும் 50க்கும் மேற்பட்ட தொல்லியல் அறிஞர்கள் கடந்த ஓராண்டில் கண்டறிந்த புதிய கண்டுபிடித்தங்களை ஆய்வுரைகளாகத் தந்தனர்.

*மாணவர்களுக்கான கட்டுரைப் போட்டி அமர்விற்கு முனைவர் வெ. வேதாசலம், கு. சேதுராமன் ஆகியோர் தலைமை வகித்தனர். இப்போட்டி அமர்வில் பங்கேற்றோர் விவரம் பின்வருமாறு:-*

| வ.எண் | பெயர் | கட்டுரைத் தலைப்பு |
|---|---|---|
| 1. | ஆ. பெருமாள், புதுச்சேரி | சங்க இலக்கியங்களில் குமரி வட்டார வரலாறு |
| 2. | இரா. எழில்ராமன், புதுவை | ஆழியூர், சேலியமேடு, கூடப்பாக்கம் கல்வெட்டுகள் |
| 3. | டி.பி. கனகரத்தினம், புதுவை | கோவை வட்டாரப் பகுதிகளில் புதிய கண்டுபிடிப்புகள் |
| 4. | பாலமுருகன், புதுவை | வைகையாற்றுப் பள்ளத்தாக்கு தொல்லியல் |

*கட்டுரைப் போட்டியில் டி.பி. கனகரத்தினம், பாலமுருகன் ஆகியோர் பரிசு பெற்றனர்.*

*நாள் : 28.9.2010*

## முதல் அமர்வு

**தலைமை : அ.கா. பெருமாள்**

1. திரு. கருப்பையா சென்னை - சின்னகோலப்பாடி கல்வெட்டு-சிறுகுறிப்பு
2. செ. கோவிந்தராஜ் புதுக்கோட்டை - சோமாஸ்கந்தர் - ஜேஸ்டா சிற்பங்கள் ஓர் ஒப்பிட்டாய்வு
3. முனைவர் அ. சந்திரபோஸ் புதுக்கோட்டை - பண்டைய அரசர்களின் இன்றைய வம்சாவளி
4. கோ. சசிகலா சென்னை - மான்குத்திப்பட்டான் மகனூர்பட்டி நடுகல்
5. முனைவர் சு. மகாலட்சுமி குற்றாலம் - கணியான் சிற்பம்
6. பி. சுமதி, தஞ்சாவூர் - புதுக்குடிக் கல்வெட்டு

*நாள் : 29.09.2010*

## இரண்டாம் அமர்வு

**தலைமை : முனைவர் சொ. சாந்தலிங்கம்**

1. எஸ். இரவி, கோவை - புலிகுத்திகல், இசைக்கருவி பொறிப்பு குறிப்பு

2. கௌரிசங்கர், தஞ்சாவூர் - குளித்தலை வட்டாரத் தொல்லியல் தடயங்கள்

3. ஆ. ராஜா, தஞ்சாவூர் - இராமநாதபுர வட்டாரத்தில் தொல்லியல் தடயங்கள்

4. கூ. பிச்சைப்பிள்ளை விழுப்புரம் - சிதறால் மலைக்கோவில்

5. எழில்இராமன், புதுவை - திருவட்டாரில் அரிய தாந்திரிக சிற்பங்கள்

6. இரா. செந்தில் தஞ்சாவூர் - மயிலாடுதுறை வட்டத்தில் புதிய கண்டுபிடிப்புகள்

7. பெ. சுதாகர், தஞ்சை - திருச்சி தெற்குப் பகுதியில் தொல்லியல் இடங்கள்

8. இராம்ஜி, தஞ்சை - பெரும்பலூர் வட்டாரக் கல்வெட்டுகள்

9. இரா. பூங்குன்றன், பழனி - அக்கசாலை மடம் செப்பேடு

10. வீரராகவன், விழுப்புரம் - பானைக் குறியீடுகள்

11. அ.கா. பெருமாள் - அடிமை ஓலை

12. செந்தில் நடராசன் - ஆள் அடிமைக் கல்வெட்டு

13. பத்மநாதன் - கல்வெட்டு கூறும் வள்ளுவ நாடு

நாள் : 29.09.2010

## மூன்றாம் அமர்வு

**தலைமை : இரா. பூங்குன்றன்**

1. சங்கரலிங்கம் திண்டுக்கல் - திருமலைநாயக்கர் காலத் திண்டுக்கல் சீர்மை அந்தாதி

2. கவிஞர் கு. சுயம்புலிங்கம் - Tamil Vedamoli and Ariya moli

3. குமா. சுப்பிரமணியன் - ஊரவை கல்வெட்டுகள்

4. ல. சாகுல் ஹமிது - சோழர்காலக் குமரி மாவட்டக் கல்வெட்டுகள்

5. த. கணேசன் இராஜசேகர தங்கமணி - சீன தமிழக இருவழி ஆதிக்கங்கள்

*நாகர்கோவிலில் நடந்த தமிழகத் தொல்லியல் கழகக் கருத்தரங்கை ஒட்டி ஆகஸ்டு 26, 27 வியாழன், வெள்ளிக் கிழமைகளில் கல்லூரி மாணவர்களுக்கும், ஆர்வமுள்ளவர் களுக்கும் கல்வெட்டுப் பயிற்சி தெ.தி. இந்துக் கல்லூரியில் நடந்தது. 25 பேர் கலந்து கொண்டனர். இப்பயிற்சியில் பிராமி, வட்டெழுத்து, கிராந்தம் போன்ற தற்காலத் தமிழ், பழந்தமிழ் எழுத்து வரிவடிங்கள் கற்பிக்கப்பட்டது. கல்வெடடுப் படிஎடுக்கும் நேரடிப் பயிற்சியும் சுசீந்திரம் கோயிலில் வைத்து கொடுக்கப்பட்டது. இந்த அறிமுகப் பயிற்சி காலை 9 முதல் மாலை 5 வரை நடைபெற்றது. சான்றிதழும் வழங்கப் பெற்றது. பயிற்சிகளை தொல்லியல் அறிஞர்கள் இராஜகோபால், சுப்பராயலு, சாந்தலிங்கம், தியாகராஜன் ஆகியோர் அளித்தனர்.*

*அன்புடன்,*

**இல. தியாகராஜன்**

*செயலர்*

# கட்டுரையாளர்கள் முகவரி

**திரு. இரா. ஆனந்தகுமார்**
கல்வெட்டியல் துறை,
தமிழ்ப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர்

**திரு. கோ. இரவீந்திரன்**
பிரெஞ்சு இந்தியக் கழகம்,
புதுச்சேரி.

**முனைவர் சு. இராசகோபால்**
"இராஜாஜி இல்லம்"
7, முதல் தெரு
வெங்கடேஸ்வரா நகர், அடையாறு
சென்னை 600 020

**முனைவர் சு. இராசவேலு**
42, நாலடியார் தெரு
ஸ்ரீசக்தி நகர்,
ஆவடி கார்ஷெட் காம்ப்ளக்ஸ்
சென்னை – 600 109.

**முனைவர் செ. இராசு**
"புலவர் பூங்குடில்"
58/2,திரு.வி. .கா. நகர் சாலை
பாலக்காட்டுத் தோட்டம்
ஈரோடு – 638 011

**திரு. கரு. இராசேந்திரன்**
மேலப்பனையூர் (அஞ்சல்)
விராச்சிலை (வழி)
புதுக்கோட்டை 622 420

**திரு. ராம. எழில்ராமன்**
26, முதன்மைச் சாலை,
அரங்கனூர், பாகூர்,
புதுச்சேரி – 607 402

**திரு. போ. கந்தசாமி,**
விரிவுரையாளர்,
வரலாற்றுத் துறை,
இராஜபாளையம் இராஜூ கல்லூரி,
இராஜபாளையம் – 626 117,

**முனைவர் க. கருப்பையா**
கல்வெட்டுப் பிரிவு,
இந்திய தொல்லியல் ஆய்வுத் துறை,
புனித ஜார்ஜ் கோட்டை
சென்னை – 600 009.

**திரு. ப. கலைச்செல்வன்**
விரிவுரையாளர்,
வரலாற்றுத் துறை,
அண்ணாமலை பல்கலைக் கழகம்,
அண்ணாமலை நகர் – 608 002

**திரு. டி.வி. கனகரத்தினம்**
முதுகலை மாணவர்,
புதுவைப் பல்கலைக்கழகம்,
புதுச்சேரி

**திரு. நடன. காசிநாதன்**
138, 5வது சாலை,
மல்லீஸ்வரி நகர்,
சேலையூர்,
சென்னை – 600 073.

**திரு ம. காந்தி**
875, பேஸ் 2,
7வது குறுக்குத்தெரு,
சத்துவாச்சாரி
வேலூர் 632 009

**செல்வி. எம். காயத்திரி தேவி**
39, பெரிய தெரு
திருக்கோகர்ணம் (அஞ்சல்)
புதுக்கோட்டை – 622 002.

**திரு. ச. கிருஷ்ணமூர்த்தி**
தொல்லியல் அலுவலர் (ஓய்வு)
எண். 43/20, மயூரா பிளாட்ஸ்
கலாசேத்திரா சாலை,
திருவான்மியூர்,
சென்னை – 600 041.

**திரு கி. குமார்**
இ.103,பொதுப்பணித்துறை
குடியிருப்பு,
தாடண்டர் நகர்,
சைதாப்பேட்டை,
சென்னை 600 015

**திரு. ஓர்சே. மா. கோபாலகிருஷ்ணன்**
மே/பா. டாக்டர் கௌரிநடராஜன்,
பி. ஈடன் அபார்ட்மெண்ட்,
முதல் குறுக்குத் தெரு,
கார்டன் ரோடு,
கீழ்ப்பாக்கம்,
சென்னை – 600 010.

**திரு. அ. சங்கர்**
த/பெ. அம்மாசி,
மாரனேரி,
புதுத் தெரு,
மேகளத்தூர் அஞ்சல்,
தஞ்சாவூர் – 613 102.

**முனைவர் அ. சந்திரபோஸ்**
விரிவுரையாளர்,
மாட்சிமை தாங்கிய மன்னர் கல்லூரி,
புதுக்கோட்டை – 622 001.

**முனைவர் சொ. சாந்தலிங்கம்**
மாவட்ட தொல்பொருள்
அலுவலர் (ஓய்வு)
32, பிரீதம் தெரு
துரைசாமி நகர்
மதுரை 625 010.

**திரு.ஜெ.ஆர். சிவராமகிருஷ்ணன்**
விரிவுரையாளர்,
வரலாற்றுத்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
சிதம்பரம் – 608 002.

**திரு. சு. சிவா** (ஆரல்வாய்மொழி)
தமிழ்த்துறை,
கேரளப் பல்கலைக்கழகம்,
திருவனந்தபுரம்.

**திரு. சு. கண்ணன்**
பிளாட் எண். 172,
கற்பகம் நகர்,
கோ. புதூர்,
மதுரை – 625 007.

**திரு. பெ. சுதாகர்**
த\பெ. பெருமாள்
பொய்யூர், மேலசருப்பூர் (அ)
அரியலூர் 621 707.

**திரு. து. சுந்தரம்**
21, கிரீன்வியூ டெலிகாம் குடியிருப்பு,
விளாங்குறிச்சி சாலை,
பீளமேடு,
கோவை – 641 004,

**திரு. சுந்தரம்**
நாகர்கோவில்

**முனைவர் எ. சுப்பராயலு**
புதிய எண் – 7
இராமலிங்கம் நகர்
முதல் குறுக்குத்தெரு
கே.கே.புதூர், கோவை – 38.

**திரு. இரா. சுரேஷ்**
கல்வெட்டியல் மற்றும் தொல்லியல்
துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் – 613 010.

**திரு. செந்தீ நடராஜன்**
36/122, கல்படித்தெரு
நாகராஜகோவில் அருகில்
நாகர்கோவில் –629 001

**முனைவர் வி. செல்வகுமார்**
விரிவுரையாளர்
கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை,
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் – 613 010.

**திரு. ஆ. செல்வதரன்**
பகவத் பவன்,
புலியூர்குறிச்சி,
தக்கலை,
நாகர்கோவில் – 629 001.

**திரு. சூலூர் தெய். சேஷகிரி**
12, நார்ட்டன் முதல் தெரு,
மந்தைவெளிப்பாக்கம்,
சென்னை – 600 028.

**திரு. த. தங்கதுரை**
த/பெ. ப. தங்கையா
பாத்தம்பட்டி (தெற்கு) (அஞ்சல்)
ஆலங்குடி (தாலுக்கா),
புதுக்கோட்டை மாவட்டம்.

**Dr.D.Dayalan**
Superintending Archaeologist
Archaeological Survey of India
Aurangabad Circle
Aurangabad - 431 004

**திரு த.த. தவசிமுத்து**
36, பூவரசுர் மெயின் ரோடு
ஆறுமுகனேரி 628 202
தூத்துக்குடி மாவட்டம்

**முனைவர் இல. தியாகராசன்**
தலைவர், வரலாற்றுத்துறை
அரசு கலைக்கல்லூரி
அரியலூர் 621 713.

**முனைவர் மா. பவானி**
விரிவுரையாளர்
கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை,
தமிழ்ப்பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 010

**புலவர், எ. பழனியப்பன்**
88, பழனியாண்டவர் கோயில் தெரு,
ஜம்பை அஞ்சல்,
பவானி வட்டம்,
ஈரோடு மாவட்டம் – 627 811

**Dr.K.Panneerselvam**
O/o, Director of Epigraphy
Archaeological Survey of India
Old University Office Building
Mysore-570 005

**திரு. பாபு (எ) இராமசாமி**
பிரெஞ்சு இந்தியக் கழகம்
புதுச்சேரி.

**திரு. கு. பாபு**
ஈரோடு

**திரு. த. பார்த்திபன்**
176/68, கடை வீதி,
தருமபுரி – 633 703.

**திருமதி. எஸ். பார்வதி**
உதவிப் பேராசிரியர்
தமிழ்த் துறை
ஸ்ரீ பராசக்தி பெண்கள் கல்லூரி
குற்றாலம்

**திரு. பா. பாலமுருகன்**
பாண்டிச்சேரி பல்கலைக்கழகம்,
புதுச்சேரி.

**திரு. மோ. பிரசன்னா**
இந்தியத் தொல்லியல் ஆய்வுத் துறை,
புனித ஜார்ஜ் கோட்டை,
சென்னை – 600 009.

**திரு ப. பூபாலன்**
9, பாட்டை தெரு
நவல்பூர் (அஞ்சல்),
இராணிப்பேட்டை 632 402

**திரு. அ.கா. பெருமாள்**
451–53, பி2, கவிமணி நகர்,
இந்துக் கல்லூரி தென்புறம்,
நாகர்கோயில் – 2.

**திரு. ஆ. பெருமாள்**
முனைவர்பட்ட ஆய்வாளர்,
புதுச்சேரி பல்கலைக்கழகம்,
புதுச்சேரி

**திருமதி மங்கையர்க்கரசி**
கே.சி.எம்.பள்ளி
66, முத்துவேல் லே–அவுட்
கே.கே.சாலை,
விழுப்புரம் 605 602

**திரு. ஆர். மணி**
10, ஐஸ்வர்யா தெரு,
எழில் நகர்,
பெரிய அல்லாபுரம்,
தொரப்பாடி,
வேலூர் – 632 002

**திரு. கோ. மதிவாணன்**
கல்வெட்டியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் – 613 010.

**திரு. வீ. முத்துகுமார்**
117, மாயாண்டி சாமி நகர்
திருவப்பூர்,
புதுக்கோட்டை – 3.

**திரு.வி.ப. யதீஸ்குமார்**
64, தெற்குத் தெரு,
விருமாண்டாம்பாளையம்,
எலவமலை அஞ்சல்,
வாசவி கல்லூரி வழி,
ஈரோடு.

**திரு. இரா. ரமேஷ்**
த\பெ. கே. இராமசாமி
காளயனூர், கருங்கல்லூர் (அஞ்சல்)
மேட்டூர் (வட்டம்),
சேலம் (மாவட்டம்)

**திரு. த. ரமேஷ்**
முண்டியம்பாக்கம்

**திரு. ராஜ்குமார்**
நாகர்கோவில்

**திரு. ஆ. ராஜா**
த/பெ. சி. ஆரோக்கியசாமி
நெப்பியப்பட்டி
வடவாளம் (அஞ்சல்)
புதுக்கோட்டை தாலுக்கா
& மாவட்டம் – 622 004.

**முனைவர் கோ. விஜயவேணுகோபால்**
15, 4வது குறுக்குத் தெரு
ஜெயா நகர்,
ரெட்டியார் பாளையம்
பாண்டிச்சேரி 605 010

**திரு. வீரராகவன்**
கே.ஜி.எம். பள்ளி
66, முத்துவேல் லே–அவுட்
கே.கே.சாலை,
விழுப்புரம் 605 602

**திரு. க. வெங்கடேசன்**
பண்டைய வரலாறு மற்றும்
தொல்லியல் துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை – 600 009.

**திரு ந.வெங்கடேசன்**
40, கிழக்கு சந்நிதி வீதி,
வில்லியனூர்
புதுச்சேரி 605 110

**திரு ப.வெங்கடேசன்**
3/178, கம்பன் தெரு
பெல்லியப்பா நகர்
வாலாஜாப் பேட்டை – 632 513

**முனைவர் வெ. வேதாச்சலம்**
51/12இ, ரத்தினசாமி நாடார் தெரு,
பி.பி. குளம்,
மதுரை – 625 002

**திரு. கி. ஸ்ரீதரன்**
324, முதல் தெரு,
நடேசன் நகர்,
விருகம்பாக்கம்
சென்னை – 600 092.

**முனைவர் பா. ஜெயக்குமார்**
கல்வெட்டியல் மற்றும்
தொல்லியல் துறை,
தமிழ்ப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர் – 613 010

**Dr. D. Herman Tieken**
Kern Institute
University of Leiden
Noonesteeg - 1-3
PO - Box 9515
The Netherlands
+31-(0)71-5272955

# நன்றி

கல்வெட்டு மற்றும் கட்டுரைகளை ஆவணத்தில் எழுதிய ஆசிரியர்களுக்கு உதவி புரிந்த கீழ்க்கண்டவர்களுக்கு நன்றி.

1. இல. தியாகராஜன், திரணிபாளையம் கல்வெட்டுகள் – திருவாளர்கள் கே. ரவிச்சந்திரன், க. வேலு, வே. செவ்வேல், ராம்ஜி, யதீஷ்குமார், கே. விஜயகுமார், கண்ணன்.

2. இல. தியாகராஜன், திருவாலந்துறைக் கல்வெட்டுகள் - திருவாளர்கள் கே. ரவிச்சந்திரன், செ. செல்லையா, பாண்டுரங்கன்.

3. க. கருப்பையா, குலவாய்பட்டி செக்குக் கல்வெட்டு – திருவாளர்கள் பரந்தாமன், அழகேசன், சுகுமார், யுவராஜ்.

4. சூலூர் தெய். சேஷகிரி, கலிங்கியம் தேர்க்கலசக் கல்வெட்டு – முனைவர் சி. மகேஷ்வரன்.

5. த. ரமேஷ், நெடுங்கல் கல்வெட்டு – திரு. விஜயகுமார்.

6. ஆ. பெருமாள், விழுப்புரம் பகுதியில் சில புதிய கல்வெட்டுகள் – திரு. வி. துரைரங்கம்

## TAMIL NADU ARCHAELOGICAL SOCIETY, THANJAVUR - 613 010

## RECEIPTS AND PAYMENT ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2011

| Receipts | Amount | Payments | Amount |
|---|---|---|---|
| Cash in hand | 20,726.50 | Stationery | 8,141.00 |
| Indian Bank | 3,774.00 | Printing charges | 64,450.00 |
| State bank of India | 1,100.62 | Xerox | 3,106.50 |
| Book Sales | 10,030.00 | Auditor Fees | 1,250.00 |
| Donation | 7,000.00 | Salary | 4,000.00 |
| Membership Fees | 44,200,000 | Honararium | 6,000.00 |
| Interest | 24,431.00 | Postage & Courier | 5,799.00 |
| Fixed Deposit | 330,000.00 | Freight Charges | 780.00 |
| ICHR Grant | 22,500.00 | Bank Commission | 279.00 |
| | | Telephone | 452.00 |
| | | Travelling | 12,577.00 |
| | | Donation | 3,000.00 |
| | | Sundries | 8,833.00 |
| | | Fixed Deposit | 330,000.00 |
| | | Indian Bank | 6,830.00 |
| | | State Bank of India | 4,611.62 |
| | | Cash in hand | 3,653.00 |
| | 463,762.12 | | 463,762.12 |

# TAMIL NADU ARCHAELOGICAL SOCIETY, THANJAVUR - 613 010

## INCOME AND EXPENDITURE ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2011

| Expenditure | Amount | Income | Amount |
|---|---|---|---|
| To Stationery | 8,141.00 | By Book Sales | 10,030.00 |
| To Printing Charges | 64,450.00 | By Donations | 7,000.00 |
| To Xerox | 3,106.50 | By Members Fess | 44,200.00 |
| To Audit fees | 4,000.00 | By Interest | 24,431.00 |
| To Honararium | 6,000.00 | By ICHR Grant | 22,500.00 |
| To Postage & Courier | 5,799.00 | By Excess of Expenditure Over Income | 10,506.50 |
| To Freight | 780.00 | | |
| To Bank Commission | 279.00 | | |
| To Telephone | 452.00 | | |
| To Travelling | 12,577.00 | | |
| To Donation | 3,000.00 | | |
| To Sundries | 8,833.00 | | |
| | 118,667.50 | | 118,667.50 |

TAMIL NADU ARCHAELOGICAL SOCIETY, THANJAVUR - 613 010

INCOME AND EXPENDITURE ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.11

# BALANCE SHEET AS ON 31.03.2011

| LIABILITES | | ASSEST | |
|---|---|---|---|
| Fund Account | 363,794.62 | Furniture | 11,000.00 |
| | | Steel Cup Board | 7,700.00 |
| | | Fixed Deposits | 330,000.00 |
| | | Indian Bank | 6,860.00 |
| | | State Bank of India | 4,611.62 |
| | | Cash in hand | 3,653.00 |
| | 363,794.62 | | 363,794.62 |

## FUND ACCOUNT

| | | |
|---|---|---|
| 01.04.2009 | By Opening Balance | 374,301.42 |
| 31.03.2010 | By Excess of Income over Expenditure | 10,506.50 |
| 01.04.2010 | By Opening Balance | 363,794.62 |

# ஆவணம்

## தமிழகத் தொல்லியல் கழகத்தின் ஆண்டு இதழ்

ஆவணம் தமிழக வரலாற்றை வளப்படுத்தும் எல்லா அடிப்படைச் சான்றுகளையும் வெளியிடும் நோக்கம் கொண்டது. இதுவரை வெளியிடப்படாத கல்வெட்டுகள், செப்பேடுகள், ஓலைச் சுவடிகள், காகித ஆவணங்கள், தொல்பொருள்கள், காசுகள், கலைப்பொருள்கள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகளையும், கட்டுரைகளையும் ஏந்தி வருகிறது. இது தமிழக வரலாற்றில் ஈடுபாடுடைய அனைவரின் இல்லங்களிலும் இடம் பெற வேண்டிய இன்றியமையாத வரலாற்றுக் கருவூலம்.

ஆவணம் 1 முதல் 13 வரை இருப்பு இல்லை

| | | |
|---|---|---|
| ஆவணம் 14 | - | ரூ. 100/- (இதழ் ஒன்றுக்கு) |
| ஆவணம் 15-19 | - | ரூ. 150/- (இதழ் ஒன்றுக்கு) |
| ஆவணம் 20-22 | - | ரூ. 200/- (இதழ் ஒன்றுக்கு) |

வரலாற்றுப்போக்கில் தென்னகச் சமூகம் (நொபொரு கராஷிமா) ரூ. 100/-

தமிழகத் தொல்லியல் கழக இதழ்களைப் பெறவிழைவோர், சரியான தொகையை வரைவோலை, காசோலை அல்லது பணவிடை மூலம் பொருளாளர் முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

கழகத்தின் வாழ்நாள் உறுப்பினர் கட்டணம் ரூ. 2000/-
நிறுவனங்களுக்கு உறுப்பினர் கட்டணம் ரூ. 4000/-

புதிய வெளியீடுகள் பகுதியில் நூல்களைச் சேர்க்க விரும்புவோர் ஒவ்வொரு நூலுக்கும் மூன்று படிகளையும், அஞ்சல் செலவுக்கு ரூ. 50/- செயலாளருக்கு அனுப்பி வைக்க வேண்டும்.

வரைவோலை, காசோலை, பணவிடைகள் தமிழகத் தொல்லியல் கழகம் என்ற பெயரில் இருத்தல் வேண்டும். காசோலையாக இருந்தால், கூடவே வங்கிக் கட்டணம் ரூ. 100/-ஐச் சேர்த்து அனுப்ப வேண்டும். ஆவணம் இதழ் நேரில் பெற்றுக் கொள்ளலாம் அல்லது அஞ்சலில் பெற ரூ. 50/- பணவிடை அனுப்பவும்.


முகவரி :

**செயலர்/பொருளாளர்**

**தமிழகத் தொல்லியல் கழகம்**

(மே/பா) கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் - 613 010

Contact :

**Secretary / Treasurer, Tamil Nadu Archaeological Society**

C/o. Department of Eqigraphy and Archaeology, Tamil University, Thanjavur - 613 010


